மிக்க பல்செயல்களையும் மனங்களிக்கும்படி இனிதாகச்செய்து, செம்பொன்முதலா கிய பல்பொருள்களையும் வேதியர்களுக்கு மனமடங்கும்படி தானஞ்செய்து தினந் தோறும் நற்கருமங்களைச் செய்தனன் எ - று (௨)

ஈன்று மனையி னலங்கரித்து நாண்மூன் றுன நற்றினத்தி
லொன்றுங் கணிதர் வல்லவனென் றுரைப்பக் கேட்டு வல்லாள
னென்று பெயரிட் டானவசிய னிருந்து தவழ்ந்து நடந்தறிவு
துன்ற வெழில்சேர் வல்லாளன் சுடர்வெண் மதிபோல் வளர்நாளில்

(இ - ள்) அவ்வைசியன் மிகுதியும் வீட்டில் அலங்காரத்தைச்செய்து மூன் றுந்தினமாகிய நாளில், பொருந்திய சோதிடர்கள் வல்லவனென்று சொல்லக்கேட்டு (அக்குழந்தைக்கு) வல்லாளனென்று பெயரிட்டான் (முறையே) உட்கார்ந்து தவழ்ந்து நடந்து அறிவுடைய அழகு மிக்க வல்லாளன் பிரகாசிக்கின்ற தாவளயமான சந்திரன் போல் வளருங்காலத்தில் எ - று (௩)

வேறு

புறவின் மல்கிய பொன்னணி மாடத்
சிறாருட னாட்டயர் செவ்வியி னீங்கிச்
சுறுமலி பூந்தடந் துன்ன வெழுந்த
விறன்மலி சோலையி லெய்தின னோர்நாள்

(இ - ள்) புறவினங் கொகுதிரிக்க பொன்னாற்செய்த அழகிய மாளிகையி னின்றுஞ் சிறுவர்களுடன் நீங்கி ஒருநாள் விளையாடல்செய்யுங்காலத்தில் மகரமீன் கள் மிக்க மலர்த்தடாகங்கள் பொருந்த வளர்ந்த தேன்கூடுகள் மலிந்த சோலையில் அடைந்தனன். எ - று

செவ்வி - காலம் சுறு - மீன் இறால் - தேன்கூடு (௪)

நலங்கிளர் முன்வினை நண்ணலி னாங்கோர்
றுலங்கொடு வைத்தொரு கொம்பனெ னென்றே
யலங்கிய தேம்புன லாட்டி நறுந்தே
னிலங்கலர் தூய்ப்பணிந் தேத்தி யகன்றான்

(இ - ள்) நன்மை விளங்கும் பூர்வ புண்ணியமுடையவும், அவ்விடத்திருந்த ஓர் உருண்டைக்கல்லைக் கொண்டுவந்து வைத்து ஏகதந்தருகிய விநாயகக்கடவுளேயென்று (அதனை) அசைகின்ற மதுரமாகிய நீரால் அபிஷேகித்து நல்லதேனுடன் பிரகாசிக்கும் மலர்களாலருச்சித்து வணங்கித் துதித்து நீங்கினன் எ - று

ஒருகொம்பினனென்றது விநாயகக்கடவுள் கயமுகனொடு போர்புரிகையில் அவன் எவ்வகையாயுதத்தாலும் இறவாது வரம்பெற்றிருப்பது கருதித் தமதுவலக் கொம்பையொடித்தெறிந்தனரென்பது சரிதமாதலின் (௫)

மற்றைய நாளு மகாருட னேகிப்
பற்றின மலர்ப்பசும் பந்தரு மிட்டு
முற்றின பொன்ன முடித்தன னன்னற்
கற்றமி லாவிளை யாட்டரும் பூசை

(இ - ள) (அதன்பின்னிட்ட) மற்றைத்தினத்தூரு சிறுவர்களுடன் சென்று மணப்பற்றுடன் பசியமலர்களாற் பந்தருமிட்டு முன்னொளிறசெய்ததுபோலவே விளையாட்டாலாகிய அரியபூசையை விநாயகக்கடவுளுக்குக் குற்றமில்லாது செய்துமுடித்தனன் எ - று. (௮)

வேறு

இன்ன வாறுவல் லாளன் பூசையி யற்று நாளினி லோர்தினந்
தன்னை நேரும கார்ன வாழ்வந் தங்கி ருமபதி நின்றுபோ
யன்ன மாடும லர்த்த டங்கள் ளிந்து சீதள மாரந்துகார்
மின்ன ளாவிய சோலை யெய்திமி குஞ்சி றார்கள் யேவினன்

(இ - ள) இந்தவகையாக வல்லாளன் பூசைசெய்து வருநாளில் ஒருநாள் தனக்கொப்பான புத்திரர்களுடன் வாழ்ந்தங்கிய பெரியநகரத்தினின்றும் புறப்பட்டு அன்னங்கள் முழுகும் பூந்தடாகங்கள் அழகுற்றுக் குளிர்ச்சிபெற்று மேகமும் மின்னலுங் கலந்த சோலையையடைந்து, மிக்கசிறுவர்களை (தொழில்செய்ய) ஏவினன் எ - று.

பலர்கள் காவண நாட்டி னார்பலர் பலவி யங்கள் யம்பினார்
சிலர்செ ழுங்கனி யீட்டி னார்சிலர் தேமலர்த்தொடை யாக்கினார்
சிலர்செ பூம்புன லகின் ளார்சில ராணி னைந்துமுய்த் தார்சில
ரிலகு சாந்தமு ரிஞ்சி னார்சில ரின்ன ராயினர் யாவரும்

(இ - ள) பலர்பந்தலிட்டனர், பலர்பலவகை வாத்தியங்களை முழக்கினர். சிலர் செழுமை தங்கிய பழங்களைச் சேகரித்தனர், சிலர் தேன் சொரியும் மலர்மாலைகள் தொடுத்தனர், சிலர் மலர்களும் செழிய நீருங்கொண்டுவந்து கொடுத்தனர் சிலர் பஞ்சகவ்வியங்களைச் சேகரித்தனர், சிலர் விளங்குகின்ற சந்தனமரைத்தனர், எல்லாரும் இவ்வகையாக (வல்லாளனுடைய கணேசபூஜைக்கு உபகரணங்களைச் சித்தஞ்) செய்பவரானார்கள். எ - று (௯)

நிறைக யப்புன லாடி மெய்யில்வெண் ணீறு பூசிவல் லாளனு
நறைம லர்த்தழை பால யத்தினை நண்ணி நாதனை யன்பினோ
முறையின் மெய்ஞ்ஞான லாட்டி வண்டுமு ழுங்கு மாலைய ணிந்துபின்
குறைவி லுண்டிக ளாலகி யங்கைகு வித்தி றைஞ்சியி ருந்தனன்

(இ - ள) வல்லாளன் நிறைந்த ஆழமாகிய நீரின்முழுகி, உடம்பிற்றிருவெண்ணீற்றினை (உத்தூளனமாக)ப்பூசி, தேனொழுகும் மலர்களால் மிக்குவிளங்குந் திருவாலயத்தை யடைந்து விநாயகக்கடவுளை அன்புடன்முறைப்படி மெல்லிய நீராலபிடேகித்து வண்டுகளொலிக்கு மலர்மாலையைச் சாத்திப்பின்னர் மிகுதியாகிய நிவேதனஞ்செய்து அழகிய கரங்களைக்கூப்பி வணங்கியிருந்தனன். எ - று

வல்லாளன் ஸ்நானஞ்செய்து திருவெண்ணீறு சண்ணித்துத் திருவாலயமடைந்து அபிடேகித்து மலர்மாலைசூட்டி நிவேதித்து நமஸ்கரித்திருந்தனனென்பது கருத்து (௰)

காலை யுண்டியொ டுச்சி யுண்டிக டந்து வெங்கதிர் சாயந்திடும்
வேலை யுங்கிர கத்தின மைந்தர்கண் மேவு றாமையி லின்றவ
ரால மென்னவு ழன்று போயக்கலி யாண லுக்கறை வார்கணின்
சில மைந்தனெம மைந்தர் காகொடு சென்று மீண்டில ரின்னமும்.

பாவியாகிய கலியாணன் மனமிரங்காமல் வாயைமடித்து உதட்டைக்கடித்து எதிர்நின்று வருந்தும்படி கொடுஞ்சொற்களைக்கூறினன் எ - று. (௧௫)

முட்டி லாமல்வி நாயகன் பணிமுற்றி னுய்க்கவ னேயினிக்
கட்ட விழ்த்திடுஞ் சோறு நீருங் கரத்தின் வேட்டவு நல்கிடு
மொட்டி யுன்னுயிர் காக்கு மில்லினு றுதொ ழிந்திடி னுய்ந்தனை
யெட்டின் மாண்டனை யென்று கூறின னேதி லானின கன்றனன்.

(இ - ள்) இடையூறில்லாமல் விநாயகபூசையை முடித்த உனக்கு அவ்விநாயகனே இனிக்கட்டவிழ்ப்பான், சோறும் நீரும் விரும்பியனவுங் கையிற்கொடுப்பான்; தொடர்ந்து உன்னுயிரைக்காப்பான் வீட்டிற்கு வராதொழிந்தால் பிழைத்தாய், (அவ்வாறின்றி) வந்தால் இறந்தாய் என்று கூறி அயலானைப்போல நீங்கிச்சென்றான். எ-று.

முக்கண் யானைமு கத்த வாநினை முற்று நம்பிய நாயினேன்
றுக்க மூர்ந்திடின் விக்கி னங்கெடு ரக்கு நாதனெ னும்பெயர்
தக்க தோசுடர் கால மாறினுஞ் சார்ந்த வன்பர்த மக்கெலாந்
தொக்க பேரருண் மாறி லாயெனச் சொல்லி மைந்தனி தோதுவான்.

(இ - ள்) மூன்று திருவிழிகளையுடைய யானைமுகம்வாய்ந்த விநாயகக்கடவுளே! தேவரீரை முழுதும் நம்பிய அடியேன் துக்கமநுபவித்தால் (தேவரீருக்கு) விக்கினங்களையொழிக்கும் விக்கினராசப்பெருமானென்னும் பெயர் தகுதியுடையதோ? சுடர்காலமாறினும் (தேவரீரைச்) சார்ந்த அடியவர்களுக்கெல்லாம் பேரருள் புரிதலில் மாறுபடுதலில்லாதவரே! என்று கூறி, வல்லாளன் (மேலும்) இதனைச் சொல்கின்றான் எ - று.

"சுடர்கால மாறினும்" என்றதற்கு, இருசுடர்கள் காலமாறித்தோன்றி மறையினும் என்றாவது, சுடர்களுங் காலமும் நிலைமாறினும் என்றாவது பொருள்கொள்ளலாம். (௧௬)

வேறு

யாவ னொருவ னாலயத்தை யிடித்தான் கணேசர் திருவுருவை
யாவ னொருவ னெடுத்தெறிந்தா னெளியே னுடலி னுதிரம்பெருக
யாவ னொருவன் பிணித்திட்டா னிறைவன் றனக்கு நிந்தனைகள்
யாவ னொருவ னெண்ணா மிசைத்தா னந்தக் கொடும்பாவி.

(இ - ள்) எவனொருவன் (யான் கணேசப்பெருமானுக்கியற்றிய) ஆலயத்தை யழித்தனனோ, எவனொருவன் கணநாதப்பெருமானுடைய திருவுருவை யெடுத்தெறிந்தனனோ, எவனொருவன் அடியேனுடலில் உதிரம்பெருகும்படி கட்டிவிட்டனனோ, எவனொருவன் யோசியாமற்படி எம்பெருமானுக்கு நிந்தனைசொல்லினனோ அந்தக் கொடிய பாவியானவன் எ - று.

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம்.

இச்செய்யுளிலுள்ள கொடும்பாவியென்னு மெழுவாயவருஞ் செய்யுளிலுள்ள பிழையுறுகவென்பதைப் பயனிலையாகக்கொண்டது. (௧௭)

குருடாய் மூங்கை யாய்ச்செவிடாய்க் குறளா யுருவிற் கறைசீயும்
பொருக்கு நிறைகுடி புண்ணுமாய்ப் பிழை யுறுக பெருகுமத்

நமக்கப ராதஞ் செய்த நவையினர் நமக்குப் பத்தர்
தமக்கப ராதஞ் செய்த கறுகண ரிவர்க ளெல்லாங்
குமைக்குயம் வெந்நி ரயத் துன்பங் கூர்வர்கண் மறுமை யிம்மை
யிமைக்குமுன் முடிவு காணு விடும்பையி னுழப்ப ரன்றால்.

(இ - ள்) நமக்கு அபராதம் விளைத்த குற்றமுடையவர்களும், நமக்கு அன்பராயுள்ளவர்களுக்கு அபராதஞ்செய்த அஞ்சாமைக் குணமுடையவர்களுமாகிய இவர்கள் யாவரும் குமைக்கின்ற கொடிய நரகவாதனையை யடைவார்கள், மறுமையிலும் இம்மையிலும் விரைவில் ஒழிதலில்லாத துன்ப நோயால் வருந்துவார்கள் எ - று

இருவர்க ளிடத்துங் குற்ற மிழைத்தகல் யானுற் றின்னே
வெருவர விட்ட சாப மெய்ப்பயன் விளைக்கு மைந்த
பொருமுத லொழிந்து நீயும் போகரு வரங்கள் கேளாய்
தருகுது மென்று கேட்டுத் தழைந்துவல் லாளன் சொல்வான்.

(இ - ள்) (யானும் என் அன்பனுமாகிய) இருவர்களிடத்துங் குற்றஞ்செய்த (உன் தந்தையாகிய) வல்லாளனுக்கு (யான்) பயப்படுக்க அச்சமுண்டாகும்படி (நீ) கொடுத்த சாபத்தின் உண்மைப்பயனை உண்டாக்கினோம் மகனே! நீயும் துன்படைதலொழிந்து அரியாத வரங்களைக் கேட்பாயாக (அவற்றைக்) கொடுப்போமென்று (விநாயகக்கடவுள்) கூறினார் வல்லாளன் (அவ்வார்த்தையைக்) கேட்டு மனங்களித்துச் சொல்கின்றான் எ - று (௨௧)

தாமரை பழித்த நின்பொற் றுணையடி நீங்கா வன்பே
பெற்று மடியேற் கெப்போ தொல்லைநா ளுந்
தோமற விட்டுக் கைசெய் தொழுபவர்க் கெல்லாம் வேண்டுங்
காமமு மளிக்க வென்னக் கருணைவா ரிறையோன் சொல்வான்

(இ - ள்) செந்தாமரைமலரை வென்ற சேயொளியுடைய அழகிய உபயபாதங்களிற் பிரியாத அன்பினையே யெப்பொழுதும் அடியேனுக்குத் தந்தருளுக எம்பெருமானே! எக்காலத்துங் குற்றமற இவ்விடத்தில் வந்து (தேவரீரை) வணங்குபவர்கட்கெல்லாம் வேண்டிய இஷ்டசித்திகளைக் கொடுத்தருள்கவென்று (வல்லாளன்) கூறினன். வேதியனுக்குகந்த விநாயகமூர்த்தி கிருபையுடன் சொல்கின்றார் எ - று (௨௨)

உனக்குநம் பாதப் போதி னொழிகலா வன்பளித் தந்தோம்
மெனக்குநின் பெயர்முன் னாகப் பெயரிட்டிவ் வுலகம் போற்றத்
தனக்குறு வரங்கள் கொள்ளத் தங்கியிங் கிருந்துங் கண்டாய்
மனக்களிப் பொடுமண் விண்ணும் வந்துநம் பூசை செய்க.

(இ - ள்) உனக்கு நம்முடைய திருவடித்தாமரையில் (ஒருபொழுதும்) அகலாத அன்பினை யளித்தோம் எமக்கு உன்னுடைய பெயரை முதலாக (வல்லாளகணேசனென்று) பெயரிட்டு இவ்வுலகமானது துதித்துத் தனக்குவேண்டிய வரங்களைப்பெற இங்குத் தங்கியிருப்போம் மனக்களிப்புடன் பூலோகமுந் தேவலோகமும் எம்மை வந்து பூசைசெய்க எ - று (௨௩)

இங்குறு நமது மூர்த்தி யாவரே தெரிசித் தாலு
மங்கவர் தமக்கு வேட்ட வரும்பொரு ளளித்துண் டாக

கொற்றவர் காரியந் தம்மிசை வின்றிக் குமரர் செய்தல்
குற்றமன் றேனு மொறுக்கவல் லாரெகொ லுயிர்த்தவர்கண்
மற்றவர் தம்மை யொறுத்துயிர் வாழினு மன்னர்பணிக்
கற்றமெல் லாம்புரிந் தாலுயிர் கூடுங்கொ லாரணங்கே

(இ - ள்) அரசனுடைய காரியத்தைத் தம்முடைய அநுமதியில்லாமல், புதல்வர் செய்திருந்தாரானாலும், பெற்றோர்கள் தண்டிக்க வல்லவர்களோ? அவர்களைத் தண்டித்து உயிர் வாழ்ந்தாலும் அரசனுடைய பணிவிடைக்குப் பலவித இடையூறுகள் செய்தால் உயிருடன் வாழமுடியுமோ? மாதே! எ - று (உஉ)

வெந்தவெண் ணீறணி வானும் விழிக்கடை நோக்கிநிற்கு
மந்த விநாயக ராலயந் தள்ளி யதுக்கியென்னை
யெந்தை பிரானுரு வத்தையுங் கையா லெடுத்தெறிந்தான்
வந்ததக் காரணத் தாலெழு வாதநோ வன்பிணியே.

(இ - ள்.) நீறாகிய வெள்ளிய விபூதியை யணிந்த சிவபெருமானும், கட்கடையினால் தரிசித்துக்கொண்டிருக்கும் அந்த விநாயகப்பெருமானுடைய திருவாலயத்தைத் தள்ளி, என்னையடித்து, என்னுடைய தந்தையுந் தலைவனுமாகிய கணேசப்பெருமானுடைய திருவுருவத்தையுங் கையினாலெடுத்தெறிந்தனன் அதனால், கெடாததோர் வலிய நோயானது (அவனுக்கு) வந்து சம்பவித்தது எ - று (உ௩)

இம்மையின் மாத்திர மேயன்றி யிந்நோ யுழப்பன்கண்டாய்
செம்மைசெய் கோலுடை வல்லவன் கற்பிற் றிருந்திழையா
யும்மையி னீயுங் கமலையென் றுறுகுவை யுன்வயிற்றி
னம்மகல் யாணனென் பானற்க னென்னவந் தல்லலுற்றே.

(இ - ள்) அவன் இப்பிறப்பின் மட்டுமன்றி, (மறுமையிலும்) இந்நோயால் துன்புறுவான். செம்மையாகச் செலுத்துங் கோலினையுடைய வல்லவராசன் கற்பிற்குரியமனைவியாய் நீயுங் கமலையென்னும் பெயருற்று வருவை உன் வயிற்றில் இக்கலியாணன் தக்கனென்னும் பெயருடன் பிறந்து (இந்நோயால்) துன்பமடைந்து. எ-று.

பன்னிரண் டாண்டி னளவும் பல்பரி காரஞ்செய்துந்
துன்னிய நோய்தொலை யாமையி னாற்றுனி கூர்ந்துயிர்த்த
மன்னவ னின்னொடு நீக்கிட முக்கல மாதவனாற்
பின்னல மெய்துவிர் செல்லினி யென்று பெயர்த்தனனே

(இ - ள்) பன்னிருபிராயம் வரையிலும் பலவகைப்பட்ட பரிகாரங்களைச் செய்தும், பொருந்திய நோயொழியாமையினால், பெற்ற தந்தையாகிய வல்லவராசன் துன்பமிகுந்து உன்னுடன் (அவனை)விலக்க, சிறந்த தவசியாகிய முக்கலமுனிவரால், பின்னே நன்மையடைவீர்கள். இனிச்செல்லுகவென்று (சாபவிமோசன மொழியுரைத்து) நீக்கினன் எ - று. (உ௫)

கற்று யகல வுரைத்தவன் மீட்டுநற் பூசையிடை
வற்றுத வன்பி னிருப்ப வுறுதி மதித்தருள்கூர்ந்
தற்றார்கட் குற்ற வமல விநாயக னங்கருள
வுற்றார் கணத்தர் விமானத்தைக் கொண்டவ ணுற்றழியே

(இ - ள்.) பெற்ற தாயானவளைச் செல்லும்படி கூறி, அவ்வல்லாளன் மனைவும நல்ல கணேசபூசையிற் குறையாத அன்புடனிருக்க, அவனுடைய உறுதியை யோசித்துக் கிருபைமிகுந்து, அற்றார்களுக்கற்ற நிமலராகிய விநாயகக்கடவுள் அப்பொழுது திருவருள்புரிய, கணநாதர்கள் விமானத்தைக் கைபிற்கொண்டு அவ்வல்லாளனிருந்த விடத்தை யடைந்தார்கள். எ - று. (உக)

வேறு

விண்ணிழி கின்ற விமானம டுத்துக்
கண்ணெதி ரின்று கதித்தலு நோக்கி
யண்ணல ருட்கடி யேன்பொரு ளோவென
றெண்ணி யிறைஞ்சி யெழுந்துகும் பிட்டான.

(இ - ள்) ஆகாயத்தினின்று மிறங்குகின்ற விமானத்தை நெருங்கி அது கண்ணுக்கெதிரேநின்று பிரகாசித்தலுங்கண்டு, விநாயகக்கடவுளுடைய திருவருளுக்கு அடியேன் ஒரு பொருளோவென்று கருதி நமஸ்கரித்து எழுந்திருந்து (இருகரங்களாலும்) கும்பிட்டனன். எ - று (உஎ)

இந்து மிலைந்தவ ரேவவி மானந்
தந்தன மன்பத ஞ்இவர் கென்று
வந்தவர் கூறவல் லாளனி வர்ந்தா
னந்தர துந்துபி யார்த்தன வன்றே.

(இ - ள்) சந்திரனை (சடைமிசை) யணிந்த கணேசப்பெருமான கட்டளையிட்டருள விமானத்தைக் கொண்டுவந்தோம அன்பனே! அதனைத் தழுவி யேறுக வென்று, (விமானத்துடன்) வந்தவர்கள் சொல்ல, வல்லாளன் (அத்தெய்வ விமானத்தில்) ஏறினன். (அப்பொழுது) தேவ துந்துபிகள் முழங்கின. எ - று. (உஅ)

திங்களி ருங்குடை சென்னிநி ழற்றத்
மங்கையர் சாமரை வாங்கியி ரட்டப்
பொங்கொளி யாலவட் டம்புடை நண்ண
வெங்கணு மவெள்ளைவெ ழுந்தது யங்க.

(இ - ள்) பெரிய சந்திரவட்டக்குடையானது சிரமிசை நிழல் செய்யவும், தெய்வமாதர்கள் சாமரைகளை வளைத்துவீசவும, மிக்கவொளியையுடைய ஆலவட்டங்கள் பக்கலிலவரவும, எவ்விடத்திலும வெண்ணிறமவாய்ந்த வெற்றிச்சங்கங்கள் ஒங்கி யொலிக்கவும எ - று. (உகூ)

வானவர் பூமழை வாரியி றைப்பத்
தேனலர் கோதையர் சோர்நெதி ராட
வேனவி ரீராவி ராயபபுடை நிறபக்
கானமெ ழுப்பினா கந்திரு வதேோர்.

(இ - ள்) தேவர்கள் மலர் மழையைவாரிச் சொரியவும், தேன்சொரியும் (பூக்கள்பொருந்திய) கூந்தலையுடைய மாதர்கள் கூட்டமாகி எதிரே நிருத்தஞ்செய்யவும், வேலையும் வாளையுமேந்திய வீரர்கள் தமமிற்கலந்து பக்கலில் நிற்கவும், கந்திருவர்கள் கானவோசையை யெழுப்பினார்கள். எ - று. (௩௦)

வரிசைக ளின்னணமை வந்தவர் செய்யப்
பரிசனர் சூழ்ந்திரு பாலுநெருங்க
விரசிய மௌனமைவி மானமொ டேகிப்
புரிசெய்க ணேசர்பு ரத்தில மர்ந்தான்.

(இ - ள்.) வந்தவர்கள் இவ்வகையாக முறைமைசெய்யவும், பரிசனங்கள் புடைசூழ்ந்து இருபக்கலிலு நெருங்கவும், மௌனமைமிக்க விமானத்துடன் சென்று, ஆசையைச் செய்கின்ற கணேசப்பெருமானுடைய நகரத்திற் பொருந்தினன் [வல்லாளன்] எ - று (௩௧)

இந்திரன் மண்ணவ ரின்பம்வெ றுத்தாங்
கிந்திர னின்பமெ னைத்தும்வெ றுக்கு
மந்தமில் போகம ருந்திவ ருந்தா
தெந்தைகயி ருங்கழ லெய்தியொன் றானான்

(இ - ள்) இந்திரனானவன் உலகினருடைய சுகத்தை வெறுத்தாற்போல இந்திரபோக முழுவதையும் (அற்பமென்று) வெறுக்கத்தக்க எல்லையில்லாத போகத்தை நுகர்ந்து, துன்பமடையாமல், எந்தையாகிய கணேசப்பெருமானுடைய திருவடியில் ஒன்றுசேர்ந்தனன் எ - று

போகமருந்தி வருந்துதலாவது சுக முற்றவர்க்குச் செருக்கு முதலியவற்றால் துன்புவிளையுமாகலின் (௩௨)

வேறு.

அதிசயம் பலவு நோக்கி யந்நக ரத்தோர் யாரும்
விதுவணி சடிலத் தெந்தை விநாயகர் தமக்குக் கோயில்
முதிரழ கெழிப்ப வாக்கி முறையுளி பூசை யாற்றிக்
கதிவளர் விழாவு மற்றுங் கடைப்பிடித் தியற்றி னாரே

(இ - ள்) அந்நகர வாசிகளெல்லாரும் பல அதிசயங்களையும் பார்த்து, சந்திரனையணிந்த சடையையுடைய எந்தையாகிய விநாயகக்குரிசிலுக்குத் திருக்கோயிலை மிக்க அழகு விளங்கச்செய்து (ஆகம) முறைப்படி பூசையைச்செய்து, ஆசை வளருந் திருவிழாவு மற்றுள்ளனவும் உறுதியாகக்கொண்டு செய்தார்கள் எ - று (௩௩)

மேதகு வரங்கள் சான்ற விநாயக சதுர்த்தி தோறும்
மூதுல கனைத்து மெய்தி முறைமுறை பூசை யாற்றிக்
காதலிற் பணியுஞ் செய்து கருதிய வரங்கண் முற்றிப்
போதவங் கருளா நின்றான் புகர்முகக் களிற்றுப் பெம்மான்

(இ - ள்) மேன்மைதங்கிய வரங்கள்மிக்க விநாயக சதுர்த்திகளிலெல்லாம், பழமையாகிய உலகினர் யாவரும் (அங்கு) அடைந்து முறைமுறையாகப் பூசைசெய்து ஆசையுடன் பணிவிடைகளையுஞ்செய்து, புள்ளிகள் வாய்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் விரும்பியவரங்களை முடியப் பெற்றுவர, அவ்விடத்திலே திருவருள் புரிகின்றனர். எ - று. (௩௪)

வேதனை முழுது நீக்கி விழைந்தவல் லாளற் கன்றே
கோதறு முத்தி யீந்த குஞ்சர முகவ னார்க்கு

மாதவர் முதலோர் போற்றி வல்லாள கணேச னென்ன
வோதினா நாமந் தனையுரைத் தவர்கட் கிடும்பை யின்றே.

(இ - ள்) (தன்னை) ஆசிரயித்த வல்லாளனுக்கு (உற்ற) கேடுமுழு வதையு மொழித்து அப்பொழுதே குற்றமற்ற முத்தியைக்கொடுத்த யானைமுக விநாயகக்கடவுளுக்கு, பெருந்தவசிகள் முதலானவர்கள் துதிசெய்து வல்லாள கணேச ரெனப் பெயரிட்டார்கள் அத்திருநாமத்தைக் கூறினவர்களுக்குத் துன்பமென்பது (சிறிதும்) இல்லை எ - று (௬௫)

பெருமபிணி கொண்ட நாயகன் பேரிட ருழந்தே யந்த
வரும்பவ மறவல் லாள னன்றுரைத் திட்ட வாறே
விரும்பிய மனைதா யாக வெறுத்தகு மகனாக
வரும்பவத் துறந்தக் தக்க னெனும்பெயர் வழங்கப் பட்டான்.

(இ - ள்) பெருநோயைக் கொண்ட வணிகனாகிய கலியாணன் பெருந் துன்ப மனுபவித்தே அந்த அரிய பிறவியொழிய, அக்காலத்தில் வல்லாளன் சாப மிட்ட வகையே விரும்பிய மனைவி தாயாகவும், தான் வெறுக்கத்தக்க மகனாகவும், வரும் பிறவியிற் பொருந்தத் தக்கனெனும் பெயர் வழங்கப்பட்டனன் எ - று (௬௬)

அருந்தவந் தான மாதி யப்பவத் தியற்ற லானுந்
திருந்துமெய்ஞ் ஞானம் பிள்ளை கணேசனாற் சேர்த லானும்
வருந்துநோய் மறைமுனி காற்றூன மாயந்தது வளர்மே பரனபு
பொருந்தவிற கணேசர் காட்சி பொருக்கெனக் கொடுத்திட்டாரே.

(இ - ள்.) அரிய தவந்தான முதலியவற்றை அப்பிறவியிற் செய்தலானும், திருத்தமாகிய உண்மை ஞானத்தையும் புத்திரப்பேற்றையும் கணநாதப்பெருமானால் அடைதலானும், வருந்திய பிணியானது முக்கலமுனிவர் (தேக) காற்றினாலொழிந் தது. வளர்கின்ற மிக்க அன்பானது பொருந்துதலினால் கணேசப்பெருமான் விரை வாகத் தரிசனந் தந்தருளினார் எ - று (௬௭)

அவர்பெருங் கருணைப் பேற்று லத்தத் தக்க னென்பான்
றவநிறை முனிவன் பாதஞ் சார்ந்துபல் பவமுந் தீர்க்குஞ்
சிவமலி மனுவும் பெற்றுன் றெவ்வடு வேலோ யன்று
னவனிகா வலனும் வாழ்ந்த வடைவுமீங் குரைத்துங் கேண்மோ.

(இ - ள்) அக் கணேசப்பெருமானுடைய சிறந்த கிருபாபலத்தால், அந்தத் தகுதியுடைய தக்கனென்பவன், நிறைந்த தவத்தையுடைய (முக்கல) முனிவர் திருவடி யையடைந்து பலபிறவியையு மொழிக்கும் மங்கலம்க்க (ஏகாட்சர) மந்திரத்தையும் பெற்றனன் பகைஞரைக் கொல்லும் வேற்படை யேந்திய வீமராசனே! அத்தக்க னென்பவன் பூமியைக் காக்கும் அரசனாய் வந்தவகையையும் இப்பொழுது சொல்லு கின்றேன் கேட்பாயாக (என்று விசுவாமித்திரமுனிவர் கூறினார்.) எ - று. (௬௮)

வல்லாளன்முத்தியடைந்தபடலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௯௱௫௰௫.

# தக்கனராசாட்சிபெற்றபடலம்.

மிக்கருள் வழங்கு மந்திரங் கொடுத்த மேதகு முக்கல முனியைப்
பொக்கமி லன்பாற் பூசனை புரிந்து புறவிடை கொண்டதா யோடு.
தக்கனங் ககன்று தக்கவர் வாழ்த்தத் தருக்கவுண் டினனிய நகர்ப்பாற்
றொக்கவப் புறவத் தெவ்வகை வளனுந் துவன்றுமோர் சூழலை யடைந்தான்.

(இ - ள்) பேரருள் தரும் திருமந்திரத்தை யுபதேசித்த மேன்மைபொருந்திய முக்கலமுனிவரைப் பொய்மையில்லாத அன்புடன் பூசைசெய்து புறத்தேவிடைகொண்டு, தன் தாயாகிய கமலையுடன் தக்கனானவன் அவ்விடம்விட்டுச் சென்று, தகுந்தவர்கள் வாழ்த்தத் தக்கவுண்டிய நகரத்தின் பக்கலிற்சேர்ந்த அப்புறவத்தில் எவ்வகைப்பட்ட வளங்களும் நெருங்கிய ஓரிடத்தை யடைந்தனன் எ - று.

புறவம் - ஈண்டுக்குறிஞ்சி நிலம்

தக்கன் தன் மனத்தால் முக்கலமுனிவரைப் பிரியாதவனென்பார் "புறவிடைகொண்டு" என்றார். (க)

அளிந்ததீங் கனியின் றேறலவா ரந்தொழுகி யசும்புமச் சூழலி னிடையே, தெளிந்தநீர்த் தடத்துச் செழுமணிக் கரையிற் றிப்பியமாய்ப்பு
ராதனமாய்க், குளிர்ந்தவான் றிங்கண் மிலைந்தருள் கணேசர் கோயிலொ
ன் றிருப்பநேர் கண்டு, முளிந்ததீ வினையான் மகிழ்வொடு மதனைமுற்றி
யாங் கிருந்தனன் கணித்தான்

(இ - ள்) கனிந்தமதுரமான பழங்களின் தேனானது வழிந்தொழுகி (ககாலே) வழக்குகின்ற அவ்விடத்தின் மத்தியில், தெளிந்த நீரையுடைய தடாகத்தின் செழுமை தங்கிய அழகிய கரையிலே, திவ்வியமாகவும் பழமையாகவும் குளிர்ச்சிபொருந்திய சிறந்த சந்திரனைச் (சிரமிசை) யணிந்தருளிய கணேசப்பெருமானுடைய திருக்கோயிலொன்றிருக்க நேரேகண்டு, விலக்கிய தீவினையையுடைய தக்கன் ஆசையுடன் அத் திருக்கோயிலைச் சரிவர முடித்து அவ்விடத்திருந்து (அம்மந்திர) ஸ்மரித்தனன். எ-று

திப்பியம் - தெய்வீகம் (உ)

பன்னிரண் டாண்டு திருந்தனுட் டானம் பண்ணியே காக்கர மனுவைத்
தன்னிக ரில்லான் முனிவனை நினைந்து தகவுறக் கணித்தனன் பின்பு
மன்னியங் கிருந்த விநாயகர் தம்மை மகிழ்ந்திரு பத்தொரு திவசந்
துன்னுபல் பொருளுஞ் சோர்வறக் கொண்டு தூயபூ சனைபுரிந் திருந்தான்.

(இ - ள்) பன்னிரண்டு வருடங்கள் திருத்தமாகிய அநுட்டானத்தை முடித்து (முக்கலமுனிவருபதேசித்த) ஏகாக்ஷர மந்திரத்தைத் தனக்கொப்பற்ற விநாயகக்கடவுளைத் தியானித்துத் தகுதியுடன் ஜபித்தனன் அதன்பின்னர் அங்குநிலைபெற்றிருந்த விநாயகக்கடவுளை ஆசையுடன் இருபத்தொரு தினங்களவரையில், நெருங்கிய பல பொருள்களையு மிகுதியாகக்கொண்டுவந்து புனிதமான பூசை செய்துகொண்டிருந்தனன். எ - று.

சோர்வற - குறைவற ; இதனை மிகுதியாக வென்றும. (ங)

இருபதின் மேலா மொருதினத் தியாம மிறந்திடு வைகறைப் பொழுதி, னொருகரத் திருகோட் டொழுகும் மதத்தி னொளிர்ந்தசிந் தூர முகத்தின, வருமொரு வேழ மரத்தின மாலை வயங்குதன் கழுத்திலிட் டெடுத்துப், பொருவரு பிடர்மேற் கொண்டொரு நகரிற் போதரக் கனவு கண் டனனே.

(இ-ள்.) இருபத்தோராந் தினத்தின் யாமங்கழிந்த விடியற்காலத்தில், ஒரு கரத்தையும், இருகொம்பினையும், ஒழுகுகின்ற மும்மதத்தினையும், பிரகாசிக்கின்ற சிந்தூரமெழுதிய மத்தகத்தினையுங் கொண்டுவரும் ஓர் யானையானது இரத்தினமாலையைப் பிரகாசிக்கின்ற தன் கழுத்தி லணிந்து தன்னையெடுத்து ஒப்பற்ற பிடரியின் மேற்கொண்டு ஓர் நகரத்திற்குச் செல்லச் சொப்பனங்கண்டனன் எ-று.

யாமம் வைகறையென்பன சிறுபொழுதாறனுளொவ்வொன்று. அவை மாலை யாமம் வைகறை விடியல் நண்பகல் எற்பாடு எனப்படும். (௪)

விடிந்தபின் னெழுந்து நாட்கடன் முடித்து விருப்பினுற் கமலையை வணங்கி, முடிந்தவென் கனவைக் கேளென மொழிந்தான் முகமலர்ந் தன்னையுங் கேளாக், கடிந்தனன் நந்தங் கலியையின் னேமன் காவல னாகுவை யென்று, நொடிந்தன ளிவ்வா றளவளா யிவர்க ளுற்றனர் முன்பு போ லிருப்ப.

(இ-ள்) பொழுதுபுலர்ந்த பின்னர், நித்திரைநீங்கி நித்திய கருமமுடித்து அன்புடன் கமலையாகிய தாயைப்பணிந்து, நிகழ்ந்த என் சொப்பனத்தைக் கேட்பா யாகவென்று (தக்கன்) கூறினன். கமலையும் முகமலர்ச்சியுற்றுக் கேட்டு நம்முடைய தரித்திரத்தை யொழித்தோம் இப்பொழுதே அரசனாவாயென்று நொடிந்தனள். இவ்வகையாக (மகனுந் தாயுமாகிய) தக்கனுங் கமலையும் அளவளாவி முன்போலக் கணேசமூர்த்தி திருமந்திரத்தைத் தியானித்துக்கொண்டிருக்க. எ-று.

நொடிந்தனள் - கைந்நொடி கொட்டினளென்றேனும், கொங்கையிற் பால் சுரந்தனளென்றேனும் பொருள்கொள்க.

கேளா-செய்யாவெனும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். ஆகுவை இதில் கு - சாரியை. (௫)

வேறு

கற்றார்புனை புகழ்மல்கிய கவுண்டின்னிய நகரிற்
செற்றார்திறை யிடுசந்திர சேனன்றனு நீங்கி
யுற்றான்கதி யுற்றாரொடு முரிமைத்திரு மனையாள்
பொற்றாரினள் சுலபைப்பெயர் பூண்டாளவ ளித்தாள்.

(இ-ள்) கல்விவல்லவர்களால் அலங்கரிக்கப்பட்ட புகழ்மிகுந்த கவுண்டின்னிய நகரத்திலே, சத்துருக்களுங் கப்பஞ்செலுத்துஞ் சந்திரசேனராசன் உடல் விட்டு நற்கதியடைந்தனன். அவன் சுற்றத்தாருடன் உரிமையுடைய சிறந்த மனைவியும் பொன்மாலை யணிந்தவளுமாகிய சுலபையெனனும் பெயருடையவள் (பின்வருமாறு) துன்புற்றனள். எ-று.

செற்றார் திறையிடுமென்றது அவன்றாற்றல் விளக்கியதாம். (௬)

என்னுருயி ரனையாயொளி ரிருகண்மணி யனையாய்
மன்னுபுவி தாங்குமபொறை மாறறிச்சுர ருலகம்
பொன்னாதிணி தோள்வெஃகிய புககாயெனை நீத்தா
யன்னவிது தகுமோவிது தகுமோவமிழ் தனையாய்

(இ - ள்) என அரிய உயிரபோன்றவனே! பிரகாசிக்கின்ற இருகண்களி லுள்ள கருமணிபோன்றவனே! அரசனே! உலகினைச சுமககுஞ சுமையை யகற்றித தேவலோகததை அழகுபொருந்திய தோளிறசுமககககருதி (அங்கே) சென்றனையோ? என்னைப பிரிந்தாய! என் தாயபோலபவனே! தேவாமிர்தம போன்றவனே! இது தகுமோ? இதுதகுமோ? எ - று

வெஃகியவென்பது செய்தியவென்னும வாய்பாட்டி றந்தகால வினையெச்ச மாகலின விருமபியெனப் பொருள்படும (எ)

கொழுகொம்பறு கொடிபோனமிகு குளிர்நீரறு கயலபோ
லிழுதங்கறு சுடாபோலொளி யெலலெய்று நாளபோன
முழுதுந்துயர் பெருகுங்கடன் முழுகுமபடி யெனைநீத்
தொழுகுங்குழ லரமாதரை யுறறாயிது தகுமோ

(இ - ள்.) கொழுகொம்பற்ற கொடிபோலவும், மிகக குளிர்ச்சிவாய்ந்த தண்ணீரறற சேற்கெண்டைபோலவும், நெய்யற்ற தீபமபோலவும், பிரகாசிக்கின்ற சூரியனற்ற பகற்பொழுதுபோலவும், முழுவதும் துன்பமபெருகுங் கடலில அமிழுமபடி யென்னைவிலககித தேனொழுகுங் கூந்தலையுடைய தேவமாதாகளை யடைந்தனை. இது தகுமோ? எ - று

கொழுகொம்பு-கொடிகள் படருதறகு ஆதரவாக நடப்பட்டதோர் கொம்பு.

வேழ்விததழ லெதிரோமபடை மெயயேயிது காறும
வாழ்விததனை யிப்போதுநல வழிபாட்டினுள யாது
தாழ்விததனெ னடியேனது தகவுணடெனி லுரையாய்
சூழ்விததக வெனபாலிடா சூழவிததனை தகுமோ.

(இ - ள்) ஓமாக்கினியின முன்னே என்னை மணஞ்செய்தது முதல உண்மையாகவே யென்னை யிதுவரையில் (குறைவின்றிக்காததது) வாழச்செய்தனை இப்பொழுது அடியேன்செய்யும பணிவிடைகளில யாது குறைபாடுசெய்தேன? அப்படியுளதாயின (வாயவிண்டு) கூறுவாய நிறைந்தஞான சொரூபியே! எனககுப பல துன்பங்களை சூழவிடுததனையே! இது உனககுத தகுமோ? எ - று.

தாழ்விததனென் இதில என் விகுதி தன்மையொருமையை யுணாததியது

அந்நாளுறு மண்போடலா மனதோவகல வுறற
திந்நாளது போலேயய லேகுறறிலே நின்று
யெனமீனதுயா வேனெனனுடலின்பாாதர வருடா
யொன்றிடை யுறுபாவனை யுறறாயுரு காமே.

(இ - ள்) அத்திருமணஞ்செய்த காலததிற் பொருந்திய அன்போடு கூடிய மனமகிழ்ச்சி விலகியது இதுவரையில அதுபோலவே பிறவிடததிலே சென்று யிலலை யின்றனை. என்னென்று துன்புறுவேன? என தேகமானது இன்ப மடையுமபடி

(என்னைக கரததாற்) பரிசியாய (என் விடயததில் மன) முருகாமல், பகைஞரிடம் பொருந்திய பாவனையை யுற்றாய் எ - று

வருடாய எனறதில் வருடல் தடவல. அருள்தாவெனப் பிரிக்கின் ஒன்று ரென உயிர்முதலாகக கொணடு வகரவுடமபடுமெய்கூட்டி, வொன்றுரெனப்படிக்க.

ஆவாவினி யெனசெயகுது மநதோவென விவ்வா
ரூவாதுனை மொழிவாளவிழி யுறைசிநதிட வுருகித்
தீவாயவிழு தளிரபோலொளி தீரததனு வேருயக்
காவாதுள மானமபடு கணவனமிசை விழுவாள.

(இ - ள) ஆ ! ஆ ! இனியாது செயவோம ? ஐயோ ! எனறிவ்வகையாக விடாமலழுது, கணகளினினறும நீரததுளிசிநத மனமுருகி, தீயிலவிழுநத தளிரபோலப பிரகாசமொழிய உடல வேறுபட்டுக காககமுடியாமல் மனதில மானமுணடாகிக கணவன'(இறநதவுடல) மேல்விழுவாள எ - று

உறை-நீரததுளி (கக)

முகமெறறுவ டலையெறறுவண முருகாரகர மலராற
றகவெறறுவள் கனிவாயிரு தனமுஙகுழை வெய்த
மிகவெறறுவள வயிறெறறுவண மின்னைபபொதி முகிலி
னுகுமைககுழல பொதியததளி ருருவநதுவ ளுறறுள.

(இ - ள) முகத்தின மோதிககொளவாள, தலையிலடிததுககொள்வாள், வாசம் பொருந்திய கைகளாகிய மலாகளால தகுதியாக அறைநதுகொளவாள, (கொவவைக) கனிபோனறவாயும, இருதனஙகளுங குழமபுமபடி மிகுதியும அடிததுககொளவாள், வயிறறைபபிசைநதுகொளவாள ; மினனலைககொணட மேகததினைப போலவிழுங கரிய கூநதலானது பொதியுந தளிரபோன்ற உருவந துவணடனள எ - று. (கஉ)

இவவாறவன மனையாளொடு மினைவோாகளு மினைய
வொவவாதவ ரலலாலவய மொபபாருல கிலலா
வவவாணமையி னரசனபடி யகலுறறன னெனறுத
தெவ்வேலமைச சாகளுநதுயா தேககிததெரு மநதாா.

(இ - ள) இவவகையாக அவன மனைவியுடன (உறவினா முதலிய) துன்பமடைபவாகளுந துனபமடைய, சமானமலலாதவாகளல்லாமல வெறறியிற சமானமானவாகள உலகததிலிலலாத அவவகைய ஆணடனமையுடைய சநதிரசேனராசன் உலகினை நீஙகினனெனறு, பகைஞாகளைக கொலலும் வேற்படையேநதிய மநதிரிகளுந துனபமிககு வருநதினாகள எ - று.

அவவரசனுககு ஒதத பலமுடையார் ஒருவருமிலலை யாதலாலும், யாவரும அவனுககுக குறைநத பலமுடையராதலாலும, "ஒவ்வாதவ ரலலாலவய மொப்பாருல கிலலா அவவாணமையி னரசன" எனறாா. (கங)

வே று

கலஙகவிழுதத நாயகனபோற் கையறறு மிகததளர்நது
புலமபுநனா யெதிரநோககிப புரோகிதன்மற றிதுசொன்னன
புலமபுவதெல லாறுமககுப புணாசுகதனைக குறித்தனறே
யுலநதவனுக குறுஞ்சுகததை யுனனலீர் புடமபொழியின்.

(இ - ள்.) கப்பலைக்கவிழ்த்த வைசியனைப்போலச் செயலற்று மிகவுந் தளர்ச்சியுற்றுப் புலம்புகின்றவர்களைப் புரோகிதன் நேரே பார்த்து இதனைச் சொல்லுகின்றான்: (நீங்கள்) புலம்புவதெல்லாம் உங்களுக்குள்ள தான சுகத்தைக்குறித்தல்லவா? (அஃதிருக்கட்டும்) இறந்தவனுக்குப் பொருந்திய சுகத்தை (உண்டுசெய்ய) நினைத்தீர்களல்லீர் (இனிப்) புலம்புதலை விடுவீர்களாக எ - று.

புலம்புநா - இதில் நகரம் நிகழ்கால முணர்த்தியது

புலம்பு - முதனிலைத் தொழிற்பெயர் (௧௪)

காவலனுக் கினிச்செய்யுங் காரியத்தைப் புரிமின்கள்
பூவுலகிற் பிறந்தவருட் பொன்றாதா ருளரேயோ
ஆவியிறந் தவருடனே யாவியிறந் தவராரே
மேவியவா னுலகுடையார் விண்ணவரும் வீடுவரே

(இ - ள்) அரசனுக்கு இனிச்செய்யவேண்டிய (ஈமக்) கடனைச்செய்யுங்கள் பூலோகத்திலே பிறந்தவர்களில் இறவாதவர்களிருக்கிறார்களோ? உயிரொழிந்தவருடனே உயிரொழிந்தவர்கள் யாவரோ? பொருந்திய ஆயுள்கால முடிவிலே தேவர்களும் இறப்பவர்களேயாவர்! எ - று (௧௫)

செய்த்தக்க காரியத்தைச் செய்யாது விறந்தவரை
உய்த்தக்க நரகத்தி லூறுத்தநர் யவாக்காத்தா
பொய்த்தக்க பொருட்கிரங்கிப் புலம்புநர்க ளெஞ்ஞான்று
மெய்த்தக்க பொருளறியார் வீணரென விளம்புதலும்.

(இ - ள்) செய்யத்தக்க கருமங்களைச் செய்து, உடலொழிந்தவரை யுச்சிவிக்கச் செய்யத்தக்க நல்லபதவியிற் செலுத்துபவர்களே (இறந்தவர்களுக்கு) ஆப்தர்கள் பொய்மையாகிய (உடலென்னும்) பொருளுக்கிரங்கி அழுதுகொண்டிருப்பவர்கள் எந்தக்காலத்திலும் உண்மையாகிய பொருளை யறியாதவர்கள்; அவர்கள் வீணர்களென்று சொல்லவும் எ - று (௧௬)

சூழுமன்றோ ரஞ்சிதனை சுமந்திரனென் றவன்பால்
வாழமைச்சர் இருவருண் மன்னவனோர் சுமந்திரனும்
பாழியமைச் சனின்றைக்குப் பாலனில்லாமையினால்
ஊழினுறு காரியங்க ளுன்றறிய லுலகேத்த

(இ - ள்) ஆலோசிக்கும் மந்திராலோசிதனும் சுமந்திரனுமென்று அப்பொழுதவனிடத்திருந்து வாழ்ந்த இருவர் மந்திரிகளுள்ளும், அரசனையொத்த சுமந்திரனென்னும் பெருமைதங்கிய மந்திரியே, அரசனுக்குப் புத்திரனில்லையாகலின் பழைமைப்படி செய்கருமங்களை உலகினர் துதிக்கும்படி செய்துமுடித்தனன் எ - று

மன்னவனோர் சுமந்திரனென்றதால் அச்சுமந்திரனென்பான் அரசகுலத்தவனென்றும், கீர்த்தியில் மன்னனை நிகர்த்தவனென்றுங் கொள்க (௧௭)

சுலபைதீர் படிந்தாடித் துணாவேமபி னிலைதின்று
குலவுமனை யுட்புகுந்தாள் கோதிறுப் பணமாறிப்
பலருமவ ரிடம்புகுந்தார் பதின்மூன்று நாளளவு
மிலகுகிரி யைகள்பலவு மியற்றிமுடித் தனபின்பு.

(இ - ள்) சுலபையென்னும் பட்டமகிஷி, சுசனமென்னும் பெயரையுடைய அரச யானையை அலங்காரஞ்செயவித்து அரசனைக்கொண்டு வருகவென்று, கூர்மை வாய்ந்த வேலாயுதமேந்திய தன் கணவனான சந்திரசேனராசன் இனிதாக மார்பகத்துப் பூண்ட குற்றமில்லாத அரசாட்சிக்குரிய பொன்னாலாகிய தாமரைமலர் மாலையைக் களிப்புறும்படி அதன் கையிற்கொடுத்தனள் எ - று

அரசடானையென்றதன் இலக்கணத்தை,

"காலோர் நான்குங் கனிகையுங் கோசமும்
வாலுறப்போட்டே மார்நலந் தோய்ப்ப
பாலுஞ் சங்கும் காலும்போலுங் கிறது
காலின்று ஞான்றொ ருத்தனிக் கையிற்றும்
வாலினும் வாயினு மருப்பினுங் கோறல்
வல்லது மதிமேலு முழுசுசன்றடைக்காய
எழு முழமுயர்ந் தொன்பதுமுழ நீண்டு
தீயுமிழ் சிறுகண் ணுஞ் செப்புக்கு முடைச்சாய
முன்புயர்ந்து பின்பணிந்த காயின்
அவ்வியல் யானையை யரசுவா வென்ப"—என்பதனானறிக (௨௨)

இந்தநக ரினிதாளு மியல்புடைய மையாற்
சிந்தைதனக் கிசைந்தவொரு செம்மலைக்கொண் டுறுகவென்ற
அந்தமொழி யுடன்கொண்டு கறுக்கமத மால்வேழஞ்
சுந்தரவெற் பொன்றெழுந்து துன்னன்றுபோ னடந்ததன்றே.

(இ - ள்) இந்த நகரத்தை யினிதாக அரசுபுரியும் இயல்புடையவனும், மனதிற்கிசைந்தவனுமாகிய ஒரு அரசனைக் கொண்டுவருவாயாகவென்று கூறிய சொல்லை மனதிற்கொண்டு, அஞ்சாமையையுடைய மதம்பொருந்திய பெரிய யானையானது, அழகிய மலையொன்று எழுந்து விரைந்து நடந்தாற்போல நடந்தது எ - று

துன்னுதல் - விரைதல் நடந்தா அன்று - நடந்ததன்று இது "தொட்டனைத்து, கற்றனைத்து" என்பனபோலக் தொகுத்தல் (௨௩)

அன்றுமல ரோனளித்த வாழியின்பின் முனிவராக
லொன்றுதவம் புரிதான முரிமைகொளச் சென்றதுபோ
னன்றமைச்சர் முதலானோர் நடக்குமத வேழமினை
றுன்றினர்சென் றனர்தமக்குக் கோமானைக் கொள விழைந்தே.

(இ - ள்) அக்காலத்திற் பிரமதேவன் செலுத்திய (தருப்பைச்) சக்கரத்தின் பின்னே முனிசிரேஷ்டர்கள் பொருந்திய தவஞ்செய்தற்கு இடத்தை உரிமையாகக்கொள்ளும்படி சென்றதைப்போல, நல்ல மந்திரிகள் முதலாயினோர் நடந்து செல்லும் மதயானையின்பின்னே தமக்கு அரசனைக்கொள்ளும்படி விருப்புற்றுச் சென்றார்கள். எ - று

"அன்று மலரோன் விடுத்த * * * சென்றது" என்றது—பூர்வம் முனிவர் பலரு மொன்றுசேர்ந்து பிரமதேவனை யடைந்து, சுவாமீ! அடியேங்கள் தவம்புரிதற்குத் தகுதியான இடமெதுவென வினவ, கமலயோனி கருணைகூர்ந்து ஓர் தருப்பையைச் சக்கராகாரமாக வளைத்து அதனை யுருட்டி நீங்கள் இதன்பின் சென்று இது

பொருந்துமிடமே உத்தமமானவிடமென் றுணர்கவெனக் கூறியனுப்ப, அவர்களும் அவ்வாறே யதனைப் பின்றொடர்ந்து அது தங்கியவிடத்தில் தவஞ்செய்து பயனை யடைந்தார்கள். இதில் நேமி விழுந்தவிடம் நைமிசவனமென்றாயது என்பது சரிதம்.

இச்செய்யுளில் மலரோன் விடுத்த ஆழி கஜமென்னுங் களிறென்றும், அதனைத்தொடர்ந்த முனிவர்கள் யானைபின் சென்ற மந்திரி முதலானோரென்றும், தவம் புரி தானம் பெறுங்கருத்து அரசனைப் பெறுங்கருத்தென்றும் உவமிக்கப்பட்டன.

கொள்வான் — வான் எதிர்காலவினையெச்ச விகுதி (௨௪)

கற்புடைய மடமாதர் கணவனையே யலதோரா
பொற்புடையா ரிருந்தாலும் புலவாத வாறேபோற்
பற்பலருந் தொழினீங்கிப் பரிவினொடு மெதிர்போதச்
சற்பமெனச் சீறியவர் தமைவிலக்கித் துயர்வேழம்

(இ - ள்) கற்பினையுடைய இளம்பெண்கள் தம்முடைய நாயகரையல்லாமல் அழகுடையவர்கள் யாசித்து வேண்டினாலும் அவர்களைத் தழுவாதவகைபோல, பல பேருந் தத்தங்காரியங்களை விட்டு ஆசையோடு (தாம் மன்னவனுக்கருகில்) எதிர் செல்லவும், உயர்வாகிய குணமுடைய கஜமென்னும் யானையானது பாம்புபோலச் சீறி அவர்களை விலக்குகின்றது எ - று.

மடமாதர் - அறியாமைக்குணமுடைய பெண்களெனினுமமையும். மடமை - மகளிர்குண நான்கனுளொன்று; அவை அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு எனப்படும். சர்ப்பம் - எதுகைநோக்கிச் சற்பமென நின்றது.

"கற்புடைய * * * புலவாதவாறு' என்றதை, தாயுமானசுவாமிகள்.

"கற்புறு சிந்தை மாதர் கணவனையன்றி வேறோர்
இற்புறத் தவரை நாடார் * * *" என்பதனானுணர்க (௨௫)

வேறு

வரைசெய் மணித்தோள் மன்னவனை வலமேல் துருவிப் புணர்கருதிப்
புரைசெய் வயவெங் களிறென்று பொங்கு மகிழ்ச்சி தலைசிறப்பத்
திரைசெய் கடல்போற் றிரண்டெவருந் தேமெய்ப் புனலாற் றுகளவித்து
விரைசெய் மலர்த்தோ ரணமாதி வீதி தோறு மலங்கரித்தார்.

(இ - ள்) மேன்மையைச் செய்யும் இக்கஜமென்னும் யானையானது மலை போன்ற அழகிய தோளையுடைய அரசனை விரைவில் தேடிப் பிடிக்குமென்று பெரு மகிழ்ச்சி யதிகரிக்க, அலையொலிசெய்யுங் கடல்போல யாவருந்திரண்டு, மதுரமாகிய நீர் பெய்தலாற் புழுதியை யடக்கி, வாசனைசெய்யும் மலர்த்தோரண முதலியவற்றால் தெருக்களிலெல்லாம் அலங்காரஞ் செய்தார்கள் எ - று.

தோரணமாதி என்றதில், ஆதியென்றதால் பூப்பந்தர் முதலியனவுங் கொள்க.

உருவிற் சிறந்த பொலங்கோயி லோங்கு மணிவாய் தலினீங்கித்
தெருவி னடந்து நகர்கடந்து சென்ற வேழம் வனம்புகுந்து
பொருவி றவத்து மூக்கலனார் பொருந்தாச் சிரமங் கணித்தாக
வருவி யிருந்த தக்கனுக்கு மணிமா லிகையைத் தரித்ததே.

(இ - ள்.) அழகின் மேம்பாடுற்ற பொற்கோயிலின் [அரசமாளிகையின்] உயர்ந்த அழகிய வாயிலினின்றும் புறப்பட்டு வீதிவழியே நடந்து சென்ற அரச யானை யானது காட்டிற் பிரவேசித்து, ஒப்பில்லாத தவத்தையுடைய முத்கலமுனிவர் எழுந் தருளிய ஆசிரமத்திற்குச் சமீபமாக அமர்ந்திருந்த தக்கனென்பவனுக்குப் பொற் றுமணமாலையைச் சூட்டியது. எ - று.

கோயில் - இராசக்கிருகம். ஆசிரமக்கு - மாடக்குளென்றாற்போல அத்துச் சாரியையின்றி யுருபேற்றது. இது ஆசிரமத்திற்கு என்பது. (உஎ)

மூவர் பெருமா னென்னையாண்ட முக்கட் பெருமா னரியாதி
தேவர் பெருமா னொருகோட்டுச் செல்வப் பெருமா னடியார்கட்
கியாவை யரிய விருந்தாங்கே யிருந்து தக்க னரசுரிமை
மேவு மெனின்வேல் கரத்தோன்றும் வீம மேலும் விளம்புதுங்கேள்.

(இ - ள்.) தக்கனென்பவன் இருந்தவிடத்திலேயே யிருந்து அரசுரிமையை யடைந்தானென்றால், திரிமூர்த்திநாயகனும், என்னை யாளாகக்கொண்ட திரிநேத் திரங்களையுடைய தலைவனும், திருமால்முதலிய தேவர்களுக்கிறைவனும், ஒற்றைக் கொம்பினையுடைய செல்வ நாயகனுமாகிய விநாயகக்கடவுளுடைய அடியவர்களுக்கு எவை கிடைத்தற்கரியவை? (ஒன்றுமில்லை!) வேலாயுதத்தைத் தக்க கையிற் றாங்கிய வீம ராசனே! இன்னுஞ் சொல்லுவேன் கேட்பாயாக. எ - று. (உஅ)

வேறு

பஞ்ச துந்துபி முழங்கின பணவர் பகந்தேன
விஞ்சு பொன்மலர் பொழிந்தனர் வேழம்பின் படுத்தோர்
நெஞ்சின் மலகிய பரிவெலா நீங்கியோ கையராய்
மஞ்ச னுக்கணி யாதிகள் வழங்கினர் மரபால்.

(இ - ள்.) பஞ்சதுந்துபிகள் முழங்கின. தேவர்கள் பசிய தேன்சிந்தும் பொன்மலர்மாரி சொரிந்தார்கள். (கசனென்னும் அரச) யானையின் பின்னே சென்ற வர்கள் மனதில்நிறைந்த துக்கமெல்லாமொழிந்து சந்தோஷ சித்தமுடையவர்களாய், (சிறுவனாகிய) தக்கராசனுக்கு ஆபரண முதலியவற்றை (அரசுரிமைக்கேற்ற) முறைப் படி கொடுத்தார்கள். எ - று.

துந்துபி - ஓர்வகை வாத்தியம். இது தும் என்றும் துப் என்றும் ஒலிப்ப தாதலின்ப்பெயர்த்தென்பர். (உகூ)

வாச மென்மலர் வத்திர மணியணிந் தனபி
ஞசி யந்தண ரறைந்தன ரொருபுடை யமர்ந்தார்
கூச மைச்சர்க ளாதியோர் குரைகழல் வணங்கித்
தேசின் மன்னவ னேவலாற் றிருத்தக விருந்தார்.

(இ - ள்.) வாசனைபொருந்திய மிருதுவாகிய மலர்மாலைகளும், ஆடைகளும், ஆபரணங்களுமணிந்து, வேதியர்கள் ஆசையோடு ஆசிவசனங்களைக் கூறி ஒருபக்கலிற் பொருந்தினார்கள். மனம் பயப்படும் மந்திரிகள் முதலானவர்கள் ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த அவன் பாதங்களைப்பணிந்து குற்றமில்லாத அரசன் கட்டளைப்படி திருத்த மாக விருந்தார்கள். எ - று. (௩௰)

தக்க னக்கனாந் தந்திமா முகனடி தாழ்ந்து
தொக்க வந்தனாக காடக மாதிக நேவி
மிக்க வன்னையை வியத்தகு சிவிகையி லேற்றிக்
கைக்க ளிற்றின்மே லிவர்ந்தனன் காலைவெங் கதிர்போல்.

(இ - ள்) தக்கன் அந்தக்கணத்திலேயே சிறந்த யானைமுகமுடைய விநாயகக்கடவுளுடைய திருவடியைப்பணிந்து, கூட்டமாகிய வேதியருக்குப் பொன்முதலியவற்றை (பஹுரியாக) கொடுத்து, (அன்பு) மிகுந்த தாயாகிய கமலையைச் சிறந்த பல்லக்கிலேற்றிச்செய்து, காலைப்பொழுதில் திகழும் பாலசூரியன்போலத் துதிக்கையையுடைய அவ்யானையின்மேலேறினன் எ - று.

ஆடகம் - நால்வகைப்பொன்னிலொன்று அவை — ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநத மெனப்படும். (௬௧)

கவன வாம்பரி யமைச்சர்க ளிவர்ந்தனர் கடவக்
குவளை வாள்விழி மாதரார் குழுவெதிர் நடிப்ப
வுவவு வாரிதி முழங்கென வொலிமுர சார்ப்ப
வவனி காவல னனைவ னடிகளி றுகைத்தான்.

(இ - ள்) மந்திரிகள் தாவிச்செல்லும் நடையையுடைய குதிரைகளிலேறிச் செலுத்தவும், நீலோற்பலமலர்போலும் ஒளிவாய்ந்த விழிகளையுடைய நடனமாதர்கள் கூட்டமானது எதிரே நடனஞ்செய்யவும், உவாக்கால சமுத்திரகோஷம்போலச் சத்திக்கின்ற பேரிகைகளொலிக்கவும், பூலோகராசனாகிய தக்கனென்பவன் (பகைஞரைக்) கொல்லும் யானையிலிவர்ந்தனன் எ - று.

உவாவென்னுஞ்சொல் "குறியதன் கீழாக் குறுகலு மதனோ - டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்" என்னுஞ் சூத்திரத்தால் உவவு என்றாயது உவா பூரணை அமாவாசியை யென்னு மிரண்டுமாமாயினும் கடல் முழக்கு பூரணையிலேயே மிகுதி யென்பது வழக்கு. (௬௨)

மலையின் மேலெழு மதியென வாமத யானைத்
தலையின் மேலெழு வெண்குடை நீழலிற் றங்கு
முலைவி லாவரத் தொருவனா ருருந்துலாப் போந்து
கலைவ லாரொடுங் கடிமணி மாளிகையினுட் புகுந்தான்.

(இ - ள்) மலையின்மேலுதித்த பூரணசந்திரன்போல, ஒழுகுகின்ற மதத்தையுடைய யானையின் சிரமிசை யெழுந்த வெண்கொற்றக்குடைநீழலிற் பொருந்திய கெடுதலில்லாத வரத்தையுடைய ஒப்பற்றவனாகிய தக்கனென்பவன் (கவுணடினிய) நகரினுட் பிரவேசித்து, (திருவீதி) உலாவந்து நூல்வல்ல பண்டிதர்களுடன் அழகிய மாளிகையினுட் பிரவேசித்தனன் எ - று.

உலாவென்றனிலக்கணத்தை,

இலக்கணவிளக்கப்பாட்டியல்.

குழமக னைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளக்க வுரைத்தாங்
கிழைபுனை நல்லா ருவாமணி மறுகின்
மற்றவன் பவனி வரவேழ் பருவ

முற்றமா னார்தொழப் போந்த தலாவாம்.
ஐந்து முதலே ழாண்டுமே பேதை
எட்டு முதலொன் பாண்டுமே பெதும்பை
ஆறிரண் டொன்றே யாகு மங்கை
பதினொன் றாதிபத் தொன்பான் காறு
மெதிர்தரு மடந்தைமே லாறு மரிவை
ஆறுதலை யிட்ட விருபதின் மேலோ
ராறுந் தெரிவையெண் ணைந்துமே லிரிமபெண்ணென
றோரும் பருவத் தோர்க்குநாத் தனரே (௬௩)

போந்த தாளியிற் பிறழ்பிறங் கரியணை பொலிய
வேந்த தாழ்வட மகனாரந் துயல்வர வமர்ந்து
வாய்ந்த தாலுறு மந்திரத் தலைவரை நோக்கி
யீர்ந்த தீஞ்சொலி னினைந்தன னிருமபுகழ்த் தக்கன்.

(இ - ள்) பெரும் புகழையுடைய தக்கன் பெரிய அத்தாணிமண்டபத்தில், விளங்குந் தந்தங்களையுடைய சிங்காசனமானது விளங்க, முத்தாலாகிய தாழ்வடமானது இடம்பரந்த மார்பிலசைந்து வீற்றிருந்து, உரிமையால் வந்த மந்திரத்தலைவர்களைப் பார்த்து, குளிர்ச்சிவாய்ந்த மதுரமாகிய சொல்லினால் சொல்லலாயினன் எ - று.

அத்தாணி - கொலுவிருக்கை மண்டபம்.

வாரந்தாழ்வடமென்றதை வார் அந்தாழ்வடமென்றுவைத்து, வ - உடம்படுமெய்யென நீக்கி, ஆரம் தாழ்வடமென்றுவைத்து சொல்வாங்குசெய்க. ஆரம்+தாழ்வடம்-தழாத்தொடராகிய மூன்றுமெவற்றுமைப்புணர்ச்சி. (௬௪)

என்னை யாளுடை முக்கல முனிவனு மிருந்தா
னன்ன மாதவன் றனைப்பல வரிசையி னழைத்துத்
தென்ன முன்னரே விடுமினக் கென்றனன் முடிசாய்த்
துன்னு சூழ்ச்சிய ரன்னதே புரிந்தனர் கடிதின்.

(இ - ள்) என்னை யாளாகவுடைய முக்கலமுனிவர் அங்கேயிருக்கின்றனர், அந்தப் பெருந்தவமுடையவரைப் பலவகை மரியாதைகளுடன் அழைத்துவந்து என்முன்னே விடுமென்று தக்கன் கூறினன்; சிரமசைத்து யோசிக்குந் தன்மையுடைய மந்திரிகள் அவ்வண்ணமே விரைந்து செய்தார்கள் எ - று. (௬௫)

மண்ணி ருந்தவம் வடிவெடுத் தனையமா தவனும்
விண்ணு ரிஞ்சிய கூவிரத் தேர்மிசை மேவிப்
பண்ண மைந்தெழு பாடலோ டாடல்கள் பயில
நண்ணி னன்பெருங் கோயிலி னகர்களி சிறப்ப.

(இ - ள்.) உலகினர்செய்த பெருந்தவமே உருவமெடுத்ததை யொத்த பெருந்தவசியாகிய முக்கலமுனிவரும், ஆகாயமளாவிய பொருட்டினையுடைய இரதமிசையாரோகணித்து, பண்ணிசைபொருந்த வெழுகின்ற கீதமும் நிருத்தமும் நிகழும்படி அரசனுடைய மாளிகையில், அந்நகரவாசிகள் களிப்பெய்தும்படி யடைந்தனர் எ-று.

கூவிரம் - தேர்கொடிஞ்சி. இஃதோருவப்பு.

மண் - நகர்—இடவாகுபெயர்கள். (௬௬)

விலகி வில்லுமிழ் பூணினான் விரைந்தெழுந் தெதிர்போந்
தலகி லன்பொடு மறவனை யாதனத் திருத்திப்
பலவி ரும்பொருள் கொண்டுபூ சனையுறப் பயிற்றி
யிலகு பூண்டுகில் கனியெதி ரிட்டடி பணிந்தான்.

(இ - ள்) விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த தக்கராசன் துண்ணென்று (சிங்காசனத்திலிருந்து) எழுந்து எதிர்சென்று, குற்றமில்லாத அன்புடனே அம்முக்கலமுனிவனை ஆதனத்திலிருக்கச்செய்து, பலபெரிய பொருள்களைக்கொண்டு பொருந்தப் பூசைசெய்து, பிரகாசிக்கின்ற ஆபரணங்களும் ஆடைகளும் பழவர்க்கங்களும் எதிரே வைத்துத் திருவடியிற் பணிந்தனன் எ - று.

அறவன் - தருமசொரூபி (௩௭)

முடிகொள் மன்னவர் புடையெலா மொய்ப்பமுன் வைகி
யடிக ளேநின தருளினா லரசினைப் பெற்றேன்
கடவு ளார்தொழுங் கணபதி யெனக்குநீ யல்லாற்
படியின் வேறிலை பாணியென் சிரத்துவை யென்றான்.

(இ - ள்) கிரீடமணிந்த அரசர்கள் பக்கங்களிலெல்லாம் நெருங்க, அவர்கட்கு முன்னிருந்து, சுவாமிகளே! தேவரீருடைய திருவருளால் இராச்சிய பாரத்தை யடைந்தேன். தேவர்களும் பணியுங் கணேசப்பெருமான் அடியேனுக்குத் தேவரீரே யல்லாமல் உலகத்தில் வேறில்லை (ஆதலின்) தேவரீருடைய கரத்தை யென் சிரமிசை யமர்த்துகவென்றனன் எ - று

பாணியைச் சிரமிசை வைத்தல் ஆசீர்வாதவகையி லொன்று. (௩௮)

கனிவி னின்னணங் கூறிய காவலன் சிரத்தின்
முனிவ னங்கையை வைத்தருண் முகிழ்த்தமு தறிவோய்
துனிவு றும்பகை யுனக்கிலை பொருளெலாந் துவன்று
மினிதின் வாழ்தியென் றிசைத்தறத் தியல்பையு மிசைத்தான்.

(இ - ள்) மனக்கனிவுடன் இவ்வகையாகக் கூறிய அரசனாகிய தக்கன் சிரமேல், முக்கலமுனிவர் தம துள்ளங்கையை வைத்து கிருபையரும்பி, பேரறிவாளனே! துன்புசெய்யும் பகைவர் உனக்கில்லை எல்லாப் பாக்கியமும் உண்டாகும். இன்பமாக உயிர்வாழக்கடவையென்று தருமநிலையையு மெடுத்துக் கூறினர் எ - று.

அங்கை - உள்ளங்கை. அகம் கையென்னும் இருசொற்களுங்கூடிய வழி "அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்" என்னுஞ் சூத்திரவழி புணர்ந்தது.

கன்ன லெஞ்செழுங் காட்டுந் தண்ணடை யாதி
முன்னர் முக்கல முனிவனுக் களித்துமு தறிவின்
மன்னு மந்தணர் பெரியவர் மற்றையர் தமக்குந்
துன்னி ரும்பொரு ணிலமிவை சொரிந்தனன் மழைபோல்.

(இ - ள்) அழகிய கருப்பங்காடு அகலாத மருதநிலத்தூர் முதலியவற்றை முதலிலே முக்கலமுனிவருக்குக் கொடுத்து, பேரறிவுடன் நிரம்பிய வேதியர் பெரியோர் வேறுள்ளோர் முதலானவர்களுக்கும் நெருங்கிய பெரும்பொருள் நிலம் இவை போல்வனவற்றை மேகம்போல (தானமாக)ச் சொரிந்தனன். எ - று

(இ - ள்) எமது கணேசப்பெருமானது கிருபைமிகும் ஏகாட்சர மந்திரமானது மிக்க பாவங்களை யோட்டவல்லது, நினைத்த பலனை இவ்வுலகிலேயே கொடுக்க வல்லது அதனை யுனக்குக் கொடுப்போம் எறிகின்ற அலையையுடைய வாசனைதங்கிய நீரினமூழ்கி இப்பொழுது வருகவென்று கூறினார் எ - று.

ஆடிப்பு - ஆடி இதுசெய்பு என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம்

நாமவேன் மன்னவ ஞனஞ்செய் தணமின்னே
காமவே ளெரியெழக் கண்டவன் சேவடிக்
கேமமா ரன்புசெய் யிருடியே காக்கர
மோமமா திகளபுரிந் தொண்செவி யோதினன்

(இ - ள்) அச்சந்தரும் வேலேந்திய வீமராசன் (அவ்வாறே) நீரின்மூழ்கி வந்தனன் மன்மதனைச் சாம்பராக விழித்த சிவபெருமானுடைய செவ்விய திருவடிகளுக்குமிக்க அன்பினைச்செய்யும் விசுவாமித்திரமுனிவர் ஓமமுதலியவற்றைச்செய்து ஏகாக்ஷர மந்திரத்தை (வீமராசனுடைய) ஒள்ளிய செவியிலுபதேசித்தனர் எ - று

ஞானம் - ஞானமென்னும் ஆரியத்திரிபு காமவேள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை வேளென்றது முருகனுக்கும் மதனுக்குமுரிய பொதுப்பெயராதலின் காமனாகிய வேளென முன்னையது சிறப்பும் பின்னையது பொதுவுமாக வந்தது.

எண்ணிடு முறைமைப் பியம்பிநம் பதிபுகுந்
தண்ணலந் தக்கன்முன் னாக்கிய வாலய
நண்ணிவை குபுதின நன்மனுக் கணியென
வுணணெகிழ் கருணையி னோதினா் முனிவனே

(இ - ள்) (அதனைக்) கணிக்குமுறைமையையுங் கூறி, உம்முடைய நகரத்தையடைந்து, பெருமைவாய்ந்த அழகிய தக்கராசன் முற்காலத்திற் செய்த கோயிலையடைந்து வசித்து, நாடோறும் (இந்த) நல்லமந்திரத்தைக் கணிக்கக்கடவாயென்று மனமுருகிய கிருபையுடன் விசுவாமித்திரமுனிவர் கூறினார் எ - று

வைகுபு - வைகி—செய்பு என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம் (௪)

வீமனும் விசுவா மித்திரன் விடைகொடு
காமரு பூணமுலைக் காதலி யுடனவன்
வாமறி மானபயில் வனங்கடந் தெய்தினன்
றாமரை யோடைசூழ் தனபதி யெல்லையின்.

(இ - ள்.) வீமராசனும் விசுவாமித்திரமுனிவர்பால் விடை பெற்றுக்கொண்டு, அழகிய ஆபரணமணிந்த மனைவியோடு, தாவிச்செல்லும் மறி மான் முதலியவை சஞ்சரிக்கும் வனத்தைத் தாண்டிக்கொண்டு, தாமரைத் தடாகங்கள் புடைசூழ்ந்த தன் நகரத்தி னெல்லையி லடைந்தான் எ - று.

காமரு - காமம் மருவென்பதன்றிரிபு மறையென்றது மானில் ஓர்வகை.

மந்திரத் தலைவர்கள் வரவுகேட் டெதிர்கொடு
தந்திமால் வேழமுந் தமனியச் சிவிகையு
முந்துற வுய்த்தனர் முடியடி நீட்டினார்
தந்தைதாய் காணிளந் தனையரோ லாயினா.

(இ - ள்.) மந்திரத்தலைவர்கள் (அரசனும் மனைவியும்) வருகையைக் கேட்டு (அறிந்து) எதிர்சென்று பெரிய யானையையும் பொன்னாலாகிய சிவிகையையும் முறைப்படச் செலுத்தி (தமமுடைய) முடியை அவர்களடியிற் சூட்டிப்பணிந்தார்கள். தந்தை தாயரைக்கண்ட இளஞ்சிறுவர்களைப்போலக் களிகொண்டவர்களானார்கள் எ-று (௬)

இருவரு மூர்தியூர்ந் தியமுநல் வரிசையோ
டொருகெழு நகரினுள் ளோங்குதங் கோயிலை
மருவிவண் பொருள்பல மறையவர்க் குதவினா
ரருளினற் பலரொடு மளவளாய் வைகினார்

(இ - ள்) (வீமராசனுமவன் மனைவியுமாகிய) இருவரும் யானையும் பல்லக்குமிவர்ந்து, வாத்தியமுதலிய சிறப்புக்களுடனே அழகுமிக்க நகரத்திலே உயர்ந்த தமது மாளிகையை யடைந்து வளமமைந்த பலபொருள்களை வேதியருக்குக் கொடுத்து, அன்புடன் பலரோடும் அளவளாவி வாழ்ந்திருந்தார்கள் எ - று (எ)

ண்டுபோ லமைச்சரைப் பாரபுரி யப்பணித்
தொண்டிறற் றங்கனமு னுஞற்றிய வாலயம்
மண்டவர்க் கேறனை மேவியே காக்கரந்
துண்டவெண் கோட்டனைச் சூழ்ந்துளத் தெண்ணினன்

(இ - ள்) முன்போலவே மந்திரிகளை இராச்சியபாரஞ்செய்யக் கட்டளையிட்டு, ஒளிய வலிவாய்ந்த தன்கை முன்காலத்திற்செய்த திருக்கோயிலில், சிறந்த தவசிகளுக்கு ஆண்சிங்கம்போன்ற வீமராசன் பொருந்தி, ஏகாட்சர மந்திரத்தைத் துண்டமாகிய வெள்ளிய கொம்பினையுடைய விநாயகக்கடவுளைத் தியானித்து மனதிற் கணித்தனன் எ - று (அ)

வேறு

விநாயகர் தமையும் பூசை விதியுளி யியற்றி யெல்லாம்
விநாயக ருருவ மென்றே மெய்யுறக் கண்டோர் வாமல்
விநாயகர் மனுவை யெண்ணி வீமனோற் றிருக்கு நாளில்
விநாயகர் கருணை கூர்ந்து விழியெதிர் தோன்றி நின்றார்.

(இ - ள்) விநாயகக்கடவுளையும் விதிப்படி பூசைசெய்து, யாவும் விநாயகர் வடிவமேயென்று உண்மைபொருந்தக்கண்டு, விநாயகப்பெருமான் திருமந்திரத்தை நீங்காமற் கணித்து வீமன் நோற்றுக்கொண்டிருக்குங் காலத்தில், விநாயகக்கடவுள் கிருபைமிக்கு அவன் கண்ணுக்கெதிரே பிரசன்னமாயினார் எ - று (கூ)

வணங்கலார்க் கணங்கு செய்யும் வயப்படை வீமன் றாழ்ந்து
கணங்களுக் கதிப னான கணேசநின் பாதத் தார்வ
மிணங்குதல் வேண்டு நல்ல வெச்சமொன் றெய்தல் வேண்டு
முணங்குத லில்லா முத்தி யுதவுதல் வேண்டு மென்றான்

(இ - ள்) சத்துருக்களுக்குத் தீமையைச்செய்யும் நெறிதங்கிய ஆயுதமேந்திய வீமராசன் (விநாயகக்கடவுளைப்) பணிந்து, கணங்களுக்கரசனான கணேசப்பெருமானே! தேவரீருடைய பாதத்தில் ஆசைபொருந்தல்வேண்டும் நல்ல புத்திரப்பேறு ஒன்று உண்டாதல்வேண்டும் கெடுதலில்லாத முத்தியை யநுக்கிரகித்தல் வேண்டுமென்று விண்ணப்பித்தான். எ - று.

கணம்+ஈசன் = கணேசன் இது வடமொழிக் குணசந்தி. (௰)

பூரண னவனை நோக்கிப் பொருவிலெம் பாதத் தன்பு
மோரணி கனக மேனி யெச்சமு நினக்குத் தந்தாஞ்
சீரணி முத்தி பின்னாச் சேர்த்துது மில்லிற் செல்கென்
றாரண முரைத்த வாயா லறைந்தனர் மறைந்து போந்தார்.

(இ - ள்) பரிபூரணராகிய விநாயகக்கடவுள் அவ்வீமராசனைப் பார்த்து, ஒப்பில்லாத நம்முடைய திருவடியில் அன்பும், அழகுமிக்க பொன்மேனியுடைய புத்திர பாக்கியமும் உனக்குத் திருவருள் செய்தோம் (உன்னைச்) சிறப்புடைய முத்தியிற் சேர்ப்போம் வீட்டிற்குச் செல்கவென்று வேதங்களை யருளிச்செய்த திருவாயால் பின்னே உரைத்தருளி அந்தர்த்தானமாயினர் எ - று

அறைந்தனர் - முற்றெச்சம். (கக)

விற்றழும் பிலங்கு மங்கை வீமனில் லகத்திற் சென்று,
செற்றலர் புரமூன் றட்ட தேவனைக் கணேச ரோடு
மற்றமில் பூசை யாற்றி யந்தணர்க் காடை யாதி
முற்றுறக் கொடுத்து வந்தான் முகிற்குழாம் விளர்ப்ப நாணி.

(இ - ள்) விற்றழும்பானது விளங்குகின்ற வீமராசன் தன் மாளிகையிற் போய், பகைஞர்களது திரிபுரங்களை யெரித்த சிவபெருமானைக் கணேசப்பெருமானுடன் குற்றமில்லாத பூசைசெய்து, வேதியருக்கு ஆடைமுதலியவற்றை மேகசாலமும் நாணமுற்று (உடல்) விளர்க்கும்படி ஆசையடங்கக் கொடுத்து வந்தனன் எ - று

விளர்த்தல் - வெண்ணிறமாதல் பசையற்ற தென்றபடி (கஉ)

வேறு

யாருநே ரொவ்வ ரியானரு ளெய்தலாற்
சாரு காசினி தன்வயி னெம்மைமே
யோரு மோருருக் கொண்டுதித் தாலெனப்
பாரு மேத்தவோர் பாலன்வந் தானரோ

(இ - ள்.) (தனக்கு) யாவருஞ் சமானங்கூற அரியவனாகிய வீமராசன் (விநாயகக்கடவுளுடைய) திருவருளை யடைதலால், சாருகாசினியென்னும் அவன் மனைவியிடத்தில், பொருந்திய பொன்னே யோருருவுகொண் டுதித்தாற்போல உலக முழுதுந் துதிசெய்யும்படி ஓர் பாலகன் பிறந்தனன் எ - று. (கங)

திருக்கி லாதவன் செய்வன செய்துபின்
றருக்கி லாரணர் தம்மைமி னுய்ப்பெய
ருருக்கு மாங்கதத் தொளிர்தரு மைந்தனுக்
குருக்கு மாங்கதன் னென்றுரைத் தானரோ.

(இ - ள்) வஞ்சகமில்லாத வீமராசன் செய்யத்தக்க கருமங்களைச் செய்து பின்னர்க் குற்றமில்லாத வேதியர்களைவினவி, பொன்போலும் பிரகாசிக்கின்ற தேகத்தையுடைய மகனுக்கு உருக்குமாங்கதனென்று பெயரிட்டனன்.

உருக்குமம் - பொன், உருக்குமம் + அங்கதன் = உருக்குமாங்கதன்.

பிள்ளை மைப்பரு வம்பெயா காலையிற
கள்ள வைமபொறி காறறுங கபிலாபாற
றெளளு மைநதனைச சேர விடுததன
னளளி லைப்படை யங்கையின வீமனே

(இ - ள்) கூராமைவாய்ந்த தகட்டுவடிவான வேற்படையை அழகிய கையிற் றாங்கிய வீமராசன கள்ளத்தனமையுடைய ஐம்பொறிகளையுங கோபிகளுங் கபில முனிவரிடத்தில, தனதெளிந்த (அறிவையுடைய உருக்குமாங்கத னெனனும) மக னைப் பிள்ளைமைப்பருவ மகலுங்காலத்திலே சேருமபடி விடுத்தனன எ - று. (௧௫)

புகலு மாதவன பொன்னடிப பததியாற
சகல விததையுந தாங்கியப புததிர
னுகலி லாத வுவபபரு டநதைபா
லகலி ரும்புவி யாட்சியுந தாங்கினன

(இ - ள்) மேறசொல்லிய பெருந்தவமுடைய அக்கபிலமுனிவனது பொற் பாதத்தில வைதத பததியினாலே, எல்லா விததைகளையு முணாநது, அப்புதலவன கெடுதலில்லாத களிப்பைத்தரும் தந்தையினிடததிருநது பரநதபெரிய உலக பாரத தையும பரிததனன எ - று (௧௬)

வீமன பினபு விநாயகன மநதிர
மேம மலக வியமபின னொணணுப
காம னனனவக காளைபி தாவினுங
சேம வனபு செலுததினன றேவனபால

(இ - ள்) வீமராசன பிறகு விநாயக மநதிரததை (தன புதலவனாகிய உருக்கு மாங்கதனுக்கு) நனமை மிகுமபடி உபதேசிததனன மனமதனையொதத இளம பருவமுடைய அவவுருக்குமாங்கதன தன தநதையைக காட்டிலும விநாயகக்கடவு ளிடத்திற சேமநதரும அனபை (மிகுதியாக)ச செலுததினன எ - று (௧௭)

இனன வாழிவ னோரமப னனபுசெய
தொனன லாளை யுருட்டித திசைதொறுந
தனன தாணை சகட முருட்டினன
பொனனும வாணியும பூவுங களிககவே

(இ - ள்.) இவவுருக்குமாங்கதன இநதவகையாக விநாயகக்கடவுள பக்தி யைச்செய்து, சததுருக்களைத துவமசஞ்செய்து, திருமகளும கலைமகளும பூமிதேவி யுங் களிப்பெய்துமபடி திசைகளிலெலலாம [எஙகும] தன ஆக்கினை சக்கரத்தைச செலுத்தினன். எ - று. (௧௮)

வீமனுபதேசமபெறறபடலம முறறிறறு.

ஆகந் திருவிருத்தம் - ௧௯௧௨.

---

[illegible] அதைக் கவிழ்ந்து மிகவிளைய, பழிக்குப் பயந்த உருக்குமாங்கத ராசன், [illegible] நீர் தருகவென்று அடியர்களுடன் யாசித்தான். எ - று.

புகுந்த மன்னவன் றிருவுரு வெழிலினைப் பொள்ளென வெதிர்நோக்கி
முகுந்தை யென்பவண் முரிசிலைக் காமவேள் மொய்கணை நிறைபோழ
மிகுந்த நீர்நசை யான்மிக வாடிய மெலிவையு முணராதே
நெகுந்த வுள்ளமுங் காதலுந் தோன்றமு னின்றிது மொழிகுற்றாள்.

(இ - ள்.) (அவ்வாறு நீர் வேட்கையால்) வந்த உருக்குமாங்கத ராசனுடைய சிறந்த தேக வழகை முகுந்தை யென்பவள் உடனே நேரிற்கண்டு, வளைந்த (கருப்பு) வில்லையுடைய மதனனுடைய நெருங்கிய பாணங்கள் (தன்) கர்ப்பினையுடைக்க, அதி கரித்த தாகவிடாயால வருந்திய களையையும் அறியாமல், இளகிய தன் மனமும் ஆசையும் வெளிப்பட (அவ்வுருக்குமாங்கதனுக்கு) முன்னேநின்று இவ்வார்த்தைகளை சொல்லுகின்றாள் எ - று. (௬)

வேறு

காவல நின்னைப் போலுங் காமரு வடிவி னானைத்
தேவர்கள் குழாத்தி னுள்ளுஞ் சிறியனேன் கண்ட திலலை
மேவின விலக்க ணங்கண் முழுதுநின் மெய்யி லென்றாற்
பாவையர் யாவ ரேநின் படிவங்கண் டுள்ளஞ் சோரார்.

(இ - ள்) அரசனே! உன்னைப்போலும் அழகுவாய்ந்த தேகமுடையவனைத் தேவர் தொகுதியிலேயும் அடியாள் கண்டது கிடையாது. பொருந்திய (சாமுத்திரிக) விலக்கணங்கள் யாவும் உன தேகத்தில (உள்ளன) என்றால், உன் வடிவத்தைப் பார்த்து எந்த மாதர்கள்தாம் மனமயங்காதவர்கள்? (யாவரு மயங்குவர்) எ - று. (௭)

பேரிகை முழக்க றாத பெருங்கடை வாய்த்தன மன்னா
சாரிகை மொழியி னல்லார் தங்களுக் கிளமை மைந்தர்
காரிகை கண்டா லன்றோ கலவியிற் றிளைப்பி னல்லால்
வேரிகை செய்தா லன்ன மிகுமயக் கொழிவ தின்றே.

(இ - ள்) முரசவாத்தியத்தின் ஓசை யகலாத பெரிய தலைவாயிலையுடைய அரசனே! நாகணவாய்ப் புள்ளின்மொழியைப்போன்ற மொழியையுடைய மாதர்களுக்கு, இளம் புருடர்களுடைய அழகைப் பார்த்தால அவர்களுடன் புணர்ச்சியிற் கூடினாலன்றி, கட்குடித்தாற்போன்ற மிக்க மயக்கமானது ஒழியமாட்டாது. எ - று.

சாரிகை - நாகணவாய்ப்புள் (௮)

[illegible]வல் விடமுன் கான்ற வாருதி மீட்டு முய்யச்
[illegible]மிழ் துமிழ்ந்த தேபோற் றோன்றனின் வனப்பிற் றோன்றித்
[illegible] காமத் தீயுன் றோளெனு முலைகள் பாய்ந்து
[illegible] கலப்பி னல்லாற் போக்கிலை யென்று கூறி.

(இ - ள்.) இறக்கும்படி கொடிய ஆலத்தை முதலிற்கொடுத்த சமுத்திரமா[illegible]யும் (அவர்கள்) உச்சீவிக்க, வெள்ளிய அமிர்தத்தைச் சிந்தியதுபோல [illegible] உன்னுடைய அழகினின்று தோன்றி யென்னை நெருக்கிய காமத்தீயானது [illegible] முலைகள் பாய்ந்து புதையும்படி (நாமிருவருங்) கலந்தாலல்லாமல்

கலைகல னெகிழ்ந்து சோரக் கருங்குழல் குலைந்து சாய
முலைவளா முத்த நீற முன்கையிற் றொடிமண் வீழ
வலைவிழி பருகு மாபோ லவனிரு வனப்பின் மூழ்க
விலையினி யுய்தி யென்னு மியலொடு முகுந்தை நின்றாள்.

(இ - ள) ஆடையானது தனனலதகதினின்று அவிழ்ந்துசோரவும், கரிய அளக பாரமானது சீர்குலைந்து சாயவும், முலைகளிலணிந்த ஒளிவளரும முத்துகள பொடிபடவும, முனகையிலணிந்த வளையலகள பூமிமேல விழவும, அலைகினற கண உண்ணுவது போல அவனுடைய தேகபபொலிவில மூழகவும, இனி பிழைககும வழியிலலை யென ஞும இயலபுடன முகுநதையெனபவள நினறனள எ - று

ஆடைசோாதலும, கூநதலவிழ்தலும, வளைகழாலு முதலியன காமகுறி முலைவளா் முததநீறவெனறது காமாககினியிற சுடபபடடுச சாமபராயினவெனக (௯)

திருமகவு் பெணமை நோககித தெருமா வனபபிற சானற
வுருவினள காமச செவவி யூறபெறபூ வலிநது காமே
மருவுதன முயனற போது மனனவன கலஙகா னாகி
முருகுகொப பளிககுங கோதை முகுநதையை நோககிச சொலவான

(இ - ள) திருமகளே (அவனது) பெணடனமையைககணடு மயஙகுமபடி அழகினமேமபடட முகுநதையெனபவள காமவிருபபமேலிடடெழுதலால, தானே (உருககுமாஙகதனைக) கலககயததனிததபொழுது, அவன (சிறிதும மனங) கலககமுறாதவனாகி, தேனொழுகும மலா மாலையணிநத முகுநதை யெனபவளைப பாாததுச சொல்லலாயினன எ - று (௧௦)

அநதணா குலதது தோறகு மருநதவன பாலை நீயும
வெநதிறல வேநதன் மனயான மேதினி முறையிற காபபேன
சுநதரி யதுவே யனறிச சுமுகாதா ளிறைஞசு மனபன
சிநதைவேற றணஙக ளாபாற றெருமநதுஞ செலலா தனறே

(இ - ள) நீ வேதியாகுலததிலே, (யாவரும) நோறறறகரிய தவததையுடைய முனிவன வசததுளளவள யானோவெவ்விய வலிமைவாயநத அரசன யான நிலைபெறற பூமியை முறைபபடி காப்பவன சுநதரமுடையவளே! அமமட்டேயல்லாது, அழகியமுகததையுடைய கணேசபபெருமானாரது திருவடியை வணஙகும அன்புடையவன, (ஆகையால) என மனமானது பிறமஙகையரிடததில மயககுறறுஞ செலலமாடடாது எ - று

நீ வேதியாகுலததிலுதிததவளாதலாலும, யான அரசகுலத்திலுதிததவனாதலாலும, உனககும எனககுமுளள உயாவுதாழ்வுகளிது வெனககாட்டி, அரசரிலும யானமுறைபபடி அரசுசெலுததுவோனாதலாலும விநாயககடவுளுககனபனாதலாலும் என மனமானது பிறமாதரை விருமபாதெனறாா (௧௧)

அரைககணித தளவை யின்பா மவரவா துணையிற கூடின
விரைககுழன முகுநதாய் வேறு துணையொடு மேவப பெற்றற
றரைககணமற றதுவு மினறு மசசமே சாரு நீரா
லுரைக்கடங காத வளள லூறுஅய ரொழிகினறுமே.

(இ - ள்) முடபொருந்திய அடியையுடைய தாமரைமலரில வசிககும பிரம தேவன் முதல யுகஙகளிரண்டிலும், குதிக்கின்ற சேற்கெண்டைபோலும் விழிகளை யுடைய மஙகையர்களுக்குச் சூதந்திரத்தை யுணடுசெய்தனனுதலின், வளளற்றனமை யுடைய அரசனே ! யானும் பிறனிறபட்டமாதாகும தாம் சிநேகமுணடாகக கருதி என்னைககலநதாற் குற்றமுமில்லை கெடுதியுமிலலை எ - று

" தன்கொளகையை யவன்பாறபெற விருமபினவளாதலின் வள்ளலென விளிககதனளென்க என்னை " "வரையாது கொடுபபோன வளள லெனப" என்றது சூததிரமாதலின . (௧௫)

மைநதாகள வலிதிற பற்றின மறுமையபு மின்று மாரு
வெநதுயா நரகு முணடு வேநதயான விழைநதே னற்றற
சிநதையிற கவலை வேணடா சோநதிடு றதவஙகள கலவி
யுநதிரும புகழுக ளாதி யொழியுமென றெணணிற கேளாய.

(இ - ள்) ஆடவாகள வலிமையாகப பிடிததுகககொணடால மறுமை பபலனு முணடாகாது ஒழியாத வெவவிய துயாவிளையும , நரகமுமுணடாகும அரசனே ! யானவிருமபினேனுதலால மனதிற கவலைகொளள வேணடாம (என்னைக) கலந தால. தவஙகளும கலவியும பெரிய கீரததியும முதலியன வொழியுமென்று நினைப பாயாயின, இன்னுஙகேடபாயாக எ - று (௧௬)

சோதரா தொழிநத போதுந் தெவ்வடு மனனு நினைப
பாாதனி னீறு செயவே னளவெறனிப படிவம வேறு
யாாதரு தேய நீஙகி யரியகா னடுததுக கொடப
ஞர்தருஞ சாபஞ் செய்வே னுணர்மதி யென்று பினனா

(இ - ள்) பகைஞாகக்கொலலும பாாததிபனே' (என்னைக)கலவாதொழிநத காலததிலும உன்னைப பூமியிலே சாம்பராககுவேன. அலலாவிடின உருவம வேறு படபொருந்திய தேயத்தையொழிநது அரியவனததிலலையுமபடி துன்பநதருஞ சாபங கொடுப்பேன அறிவாயாகவென்று பினனும. எ - று.

ஊாதரு - திரியததககக. மதி - அசை. (௧௭)

வெள்ளமு மணையி னிற்கும வெநதழ லரவ மாதி
பொள்ளெனத் தடையி னிற்கும புலனிலார்க கெழுநத காமம
பள்ளமென மடையில வெள்ளம பாயவதே போலு மநதக
கள்ளியக காளை மாரபங் கதுமெனத் தழுவி னாளே.

(இ - ள்.) (பெருக்கெடுத்து வந்த) வெள்ளமும் அணைககு அடஙகிநிறகும வெவ்விய அக்கினியும பாம்புமுதலியன தடையால் விரைந்து (கட்டுப்பட்டு) நிற்கும (ஆனால்) அறிவில்லாதவர்களுக்கு உண்டான காமமானது பள்ளமென்று சொல்லும மடையிலே வெள்ளமானது பாய்ந்துசெலவதே போலும் (ஆதலின்) அநத வஞ்சகி யாகிய முகுநதையென்பவள் அக காளைப்பருவமுடைய உருக்குமாஙகதமன்னன மார பைவிரைந்து ஆலிஙகனஞ் செய்தனள் எ - று (௧௮)

கொல்லிய வொருபேய் வந்து கொழ்மெனத் தழுவ லேபோடு
மெல்லியா ளெஞ்சு போல வேநதனங் கசச மெய்தி

நலவிழை மாது செய்தி நன்றுநன் றென்ன நக்குற்
றொல்லெனத் திணிந்த தோளா லுதைத்துமண் ணிலத்தில் வீழ்த்தான்.

(இ - ள்) ஒரு பேயானது கொல்லும்படி வந்து விரைந்து தழுவவும், (அச்சப்படும்) மங்கையர் மனம்போல உருக்குமாங்கதன் (மனதில்) அச்சமடைந்து, நல்ல பணிகளை யணிந்த இம்மங்கையின் செயல் நன்றாயிருந்தது நன்றாயிருந்ததென்று நகைசெய்து, விரைவாகத் தனது வலிய தோளாலுதைத்து மட்டாயின்மேல், (அவளை) விழச்செய்தனன் எ - று

கொல்லிய - செய்யியவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் (௧௯)

கால்பொரு கொழுங்கொம் பற்ற காமரு கொடிபோல் வீழ்ந்த
வேல்பொரு விழியி னுட்கு வெற்றிவேற் குமரன் கூறும்
சால்பொரு வியநின் செய்தி சற்றுமுன் னறிந்தே னாயிற்
பால்பொரு மொழியா யிங்குப் படாதரேன் படாதரேனே

(இ - ள்) காலகளொத்த கொழுகொம்பற்ற அழகிய பூங்கொடிபோல வீழ்ந்த வேற்படைபோலுங் கண்களையுடைய முகுந்தைக்கு வெற்றிபொருந்திய வேலேந்திய உருக்குமாங்கதன் சொல்கின்றனன்: மேம்பாடற்ற உன் செய்கை சிறிது முன்னரே தெரிந்திருப்பேனாகில், பால்போலும் மதுரமான சொல்லையுடையாளே! இங்கு வரமாட்டேன், வரமாட்டேன் எ - று (௨௰)

மாதவ முனிவ னில்லின் மாதரா ளென்று நின்பாற்
சீதள நறுநீர் வேண்டிச் சேர்ந்திடு மெனக்கிஞ் ஞான்று
பாதக நிறைந்த தாழும் பரிசினை விளைத்தாய் வாளால்
மோதுவ லஞ்சி னேனம் முனிவனை யென்று மீண்டான்

(இ - ள்) பெருந்தவமுடைய முனிவனாச்சிரமத்திலிருக்கும் முனி பத்தினி யென்று உன்னிடத்திலே குளிர்ந்த நல்ல சலத்தை விரும்பி (தாகவிடாயால்) இங் குற்றவெனக்கு, இப்பொழுது பாவமிகுந்த தாழ்வான தன்மையைத்தந்தனை. (உன்னை யென்) வாளால் வெட்டுவேன். ஆயினும், முனிவனுக்குப் பயந்தேனென்று (அவ் விடம் விட்டுத்) திரும்பினன் எ - று (௨௧)

மீண்டவன் றனைநோக்கி வெய்தென முகுந்தை சீறித்
தீண்டுதற் கரிய தாமென் றிருந்தருங் கற்புஞ் சிந்த
வீண்டுபே ரழகிற் போந்தா யின்பமுங் கொடுத்தா யில்லை
மாண்டநின் னுடலிற் குட்ட மருவுக வல்லே யென்றாள்.

(இ - ள்) முகுந்தை, (அவ்வாறு) சென்ற உருக்குமாங்கதனை விரைவாகக் கோபித்து, தொடுதற்கரியதாகிய என் சிறந்த கற்புநிலையுங் கெடும்படி நெருங்கிய பேரழகுடன் வந்தனை எனக்குச் சுகமுங் கொடுத்தாயில்லை (ஆதலின்) மாட்சிமைப் பட்ட உன்னுடலிற் குட்டநோய் விரைவிலுண்டாகுகவென்று சபித்தனள் எ - று

வேட்டது பெறாது சால வெதும்பின ளாத லாலே
கோட்டமின் றுகித்த நீர்வு கூறுதல் செய்யா ளன்றி
யோட்டமொடு நெஞ்சிலையு மாதி னொண்முகம் பாரே னென்று
நீட்டிய புகழான் யாரா சென்றனன் றிரும்பிப் பாரான்.

(இ - ள்) இச்சித்ததை யடையாமல் மிகத் துன்புற்றனளானபடியால், தளர்ச்சியில்லாமல், சாபத்தீர்வு சொல்லமாட்டாள் அல்லாமலும் மனவுறுதியில்லாத அம்முகுந்தையின் பிரகாசிக்கின்ற முகத்தைப் பார்க்கமாட்டேனென்று, மிகக் புகழையுடைய உருக்குமாங்கதன் திரும்பிப்பாராமல் வாளா சென்றனன் எ - று

வாளா - சும்மா (௨௩)

பெண்ணிருங் கொலையே போலப் பெண்ணிடு சாபந் தானு
மண்ணிடைக் கொடிது போலு மாதவ ளிடுசா பத்தால்
வெண்ணிறக் குட்ட மெய்யில் விரவிய தாச னேக்கிக்
கண்ணிய கருத்துள் மழுகிக் கணேசனை நினைந்துச் சொல்வான்

(இ - ள்) பூமியிலே பெரிய பெண் கொலையையேபோலப் பெண்பாலார் கொடுத்த சாபமும் கொடிதுபோலும் பெருந்தவமுடைய அம்முகுந்தை யிட்ட சாபத்தாலே அவன் தேகத்தில் வெண்குட்ட வியாதி பொருந்தியது அதனை, உருக்குமாங்கதன் கண்டு எண்ணங்கொண்டு மனதில் வருந்திக் கணேசப்பெருமானைத் தியானித்துச் சொல்கின்றான். எ - று (௨௪)

அறிந்துநின் றொழுமபிற சற்று மடியனேன் பிழைப்புத் தில்லை
சிறந்தவன் புடையார் மாட்டுன் றிருவருண் மாவ தில்லை
சிறந்தநின் னருளுண் டாயிற் றீதென யடாவ தில்லை
யறிந்திடாப் பிழையுண் டாயி னதுபொறுத் தருளல் வேண்டும்

(இ - ள்) தேவரீருடைய பணிவிடையில் அடியேன் சிறிதும் அறிந்து தவறினதில்லை மேம்பட்ட அன்புடைய பக்தர்களிடத்திலே தேவரீருடைய திருவருள் நீங்குவதில்லை சிறப்பமைந்த தேவரீருடைய திருவருள் விலாசம் உண்டாயிருக்குமாயின் தீமையென்பது அடியேனைத் துன்புசெய்வதில்லை அறியாமற்செய்த குற்றமுண்டாயிருப்பின் அதனை மனம்பொறுத்தருளல்வேண்டும், எ - று (௨௫)

சிட்டரைக் காப்பா யென்றுந் துட்டரைத் தெறுப்பா யென்று
முட்டறு வேத மெல்லா மொழிவது மெய்யே யாகு
மெட்டவம் முகுந்தை மாழ்கப் பிரிந்ததுந் தரும மாக
விட்டவள் சாபத் தாலே யெனக்குநோ யடுப்ப தாமே.

(இ - ள்) சிஷ்டரைக் காப்பவனென்றும், துஷ்டரை யழிப்பவனென்றும், இடையூறில்லாத வேதங்களெல்லா முறையிடுவது உண்மையேயாயின், அம்முகுந்தையென்பவள் துன்புறும்படி (யான்) பிரிந்து சென்றதுந் தருமமாயிருக்க, (அவள்) கொடுத்த சாபத்தினால் எனக்கு நோயுண்டாவது தருமமா? எ - று (௨௬)

தாயினு மையரு நாணுஞ் சுடரொளி வனப்பு நீங்கித்
தாயரு மிகழக் குட்டஞ் சாரந்தவென் னுடலை யிந்தக்
காயமுற் கடத்தின் மாய்ப்ப தலலது கைக்கொண் டேறிப்
போயர சாட்சி செய்யேன் புனிதனே யென்று நைந்தான்

(இ - ள்) பரிசுத்தமான விநாயகக்கடவுளே! புனிதமான வித்தியாதரர்களும் நாணத்தக்க சூரியகாந்திபோன்ற (வண்) அழகொழிந்து, (பெற்ற) தாயமாரும் இகழும்படி குட்டநோய் பொருந்திய என் தேகத்தை இந்தக் கொதிக்கின்ற தீயமான

னத்திலேயே யொழிப்பச்சலத்தை, உடன்கொண்டு வனஞ்சென்று ஆகச்செய்யப்பட்டேன் என்று வருந்தினன் எ - று (௨௭)

காவல னிவ்வா றெண்ணிக் காட்டிடைச் செல்வா னங்கோர்
பாவிய வாலைக் கண்டு படர்ந்தத னிழலை யுற்றான்
மேவிய வேட்டைக் கானின் வேந்தனைத் தேடிக் காணா
தோவிய சிந்தை யோடு முடன்வந்தார் நகர்க்குச் சென்றார்

(இ - ள்) உருக்குமாங்கதராசன் இவ்வகையாகக் கருதி, வனத்தின்வழியே செல்பவனாகி, அங்கே யோர்படர்ந்த ஆலமரத்தைக்கண்டு பரவியுள்ள அதன் நிழலிலே தங்கினன்; பொருந்திய வேட்டைக்கானிலே உடன்வந்த (மந்திரி முதலான) வர்கள் அரசனாகிய உருக்குமாங்கதனைத் தேடிக்காணாமல், வருந்திய மனத்துடன் சம்புநகர்க் கிறகுச் சென்றார்கள் எ - று

படர்ந்த + அதன் = படர்ந்ததன். அகரம் தொகுத்தல் (௨௮)

உருக்குமாங்கதன் சாபம்பெற்றது முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் - ௧௫௫

---

## நாரதர் உருக்குமாங்கதனுக்குச் சாபத்திரவுகூறியபடலம்.

குட்ட வேந்தனை நோக்கிய கோதிலை
வட்ட வானில் வழுக்கி விழுந்தெனச்
சுட்டு பேரொளி யாதவ னீடுதேர்
பட்ட தன்று பனிக்குட வேலையின்.

(இ - ள்) குட்டநோய்பொருந்திய உருக்குமாங்கத ராசனைக்கண்ட குற்றத்திலை, (எல்லாவற்றையும்) சுடுகின்ற பேரொளியுடைய சூரியன் தேரானது, வட்டமாகிய ஆகாயத்தினின்று வழுக்கிவிழுந்தாற்போல, குளிர்ந்த மேற்கடலிலே விழுந்தது. [சூரியன் அஸ்தமயமாயினன்] எ - று (௧)

நாட்டி னுள்ளவர் காணுறி னுய்வரென்
றோட்டு வேற்படை மன்னவ னென்றொரு
கோட்டு மாமுகன் கூட்டிய மாயையி
னீட்ட மென்ன விருள்பரந் திட்டதே

(இ - ள்.) நாட்டிலுள்ளவர்கள் (இவன் தேகப்பொலிவிழந்து குட்டநோயுற்றதைக்) கண்டால், (சத்துருக்களை) அழிக்கும் வேலாயுதமேந்திய உருக்குமாங்கதன் நாணமடைவானென்று, ஒற்றைக்கொம்பையுடைய விநாயகக்கடவுள் உண்டுசெய்த மாயையின் றொகுதியைப்போல இருள்பரவியது. எ - று (௨)

இரவ லாள ரிடத்தி லிராவகைக்
கரவு செய்யுமிக் காளையை யின்றுநாம்

விரவு வாமென விழுபசி தாகமும
பரவு சோகமும பறறவி ருநதனன.

(இ - ள) யாசகாகளிடததில (தமமை) இராதவிதமாக வஞசிக்கும இக்கா ளையபருவமுடைய உருககுமாஙகதனை இபபொழுது நாம சேருவோமெனறு, மிகக பசியுந தாகமுஞ சோகமும் பறற (வருநதி) இருநதனன எ - று

இரவலாகளுக விசேடமாகத தானஙகொடுததவனாதலின அவவுருசகுமாங கதனைப பகைததுளள பசி தாக சோகஙகள இதுவே சமயமெனறு பறறினவெனறா

உணடி யினறி யுறஙகுக லினறிமுன
கொண டிடாததுயா கொணடிடு மனனவன
மணடு மினனலை மாறறவக் தாெனனத
தெணடி ைரககடற செஙகதிா பூததத

(இ - ள) ஆகாரமிலலாமல நிததிரையற்று, முன (ஒருகாலததும) பெறாத துனபததைக கொண்டிருககும உருககுமாஙகதனுடைய நெருஙகிய துனபததையொழிகக வநதவனெனறு சொலலுமபடி, தெளளிய அலையையுடைய கடலிலே, செவவிய கிரணஙகளையுடைய சூரியனுதிததனன எ - று

கதிரவனறததறகெறபப பூததததென அஃறிணை யொருமைமுடிபு கொடுததுக கூறினரெனக (௪)

காலை முற்றுங கடனமுடித துள்ளமென
ஞாலை யததி னருடகண நாதனை
மாலை யனபின மதிததுவழிபடும
வேலை விணணிடை நாரதன் மேயினன

(இ - ள) (உருககுமாஙகதமனனன) காலைப்பொழுதிற செயயும நிததிய கடனை முடிதது, மனமாகிய திருககோயிலில, கிருபாமூாததியாகிய கணேசபெருமானை அனபாகிய மாலையாரபிணிதது வழிபாடு செயயுஙகாலததில, ஆகாயவீதியில நாரதமுனிவா பொருநதினா எ - று (௫)

அருககன வேறகன வானியங குறறெனப்
பொருககெ னசசெலபுத தேளிா முனிவனை
யுருககு மாஙகத னெயயென நோககினு
னுருகக மோடுமங கோலிடு வானரோ.

(இ - ள) வேறோர் சூரியன் பரந்த ஆகாயத்திற் சஞ்சரிப்பதுபோல விரைநது செலகின்ற தெயவீகமுடைய நாரதமுனிவரை உருககுமாஙகதராசன் விரைந்து தரிசிதது மனவுருக்கததுடன் ஒலமிடொனுயினன எ - று.

நோககினன - முறறெசசம. (௬)

வேறு

அடிகளே யோல மோல மமரர்கண் முனிவா வோலம
வடியிசை யமுதந தேககு மகதியாழ்த தலைவ வோலம
நெடியவன முதலோா அன்ப ரீக்குவா யோல மோலம
படியிசை யடியேன் றுனபும பாறறுவா யோலமோலம.

(இ - ள்) சுவாமிகளே! ஓலம் ஓலம் தேவகுருமுனிவரே! ஓலம் வடித்த இசையாகிய அமுதத்தைத் தேக்கெடுக்கும் மகதிவீணையை யேந்திய தலைவரே! ஓலம் திருமால் முதலியோருடைய துன்பங்களை யொழிப்பவரே! ஓலம் ஓலம். பூமியிலே அடியேனுடைய துன்பத்தையும் ஒழிப்பாய் ஓலம் ஓலம் எ - று

நாரதமுனிவர் கரத்திலுள்ள வீணையை மகதிவீணையென்பது வழக்கு (௭)

அருட்பெருங் கடலே புன்ற னடைக்கல நாயேன் கண்டாய்
மருட்கடல் கடந்தோய் வீமன் மகனடி யேனென் னாமம்
உருக்குமாங் கதனீ செய்தி யுன்னருள் வழங்கு கென்று
வெருக்கொளு மயமா நீங்கி விளித்தெதிர் தொழுது நின்றான்

(இ - ள்) பெரிய கருணைக்கடலே! அடியேன் தேவரீருடைய அடைக்கலம். மயக்கமாகிய கடலைக்கடந்தவரே! அடியேன் வீமராசன் மகன் என் பெயர் உருக்குமாங்கதன். தேவரீரிங்கடைந்து உமது திருவருள் புரியவேண்டுமென்று, பயங்கொள்ளும் மயக்கமொழிந்து கூப்பிட்டு எதிரேபணிந்து நின்றனன் எ - று (௮)

கனைத்தன் கன்றை நோக்கிக் கரைந்துசெல் புனிற்றுப் போல
வனைத்தையு முணர்ந்த மேலோ னவன்விளி கேளா முன்னம்
நினைத்துறு வினையி னீங்கி நேரெலன் வெதிரே போந்தான்
றனைச்சரண் வணங்கிப் போற்றித் தராபதி சாற்ற லுற்றான்.

(இ - ள்) கனைத்துத் தன்னுடைய கன்றைநோக்கி மனங்கரைந்து செல்கின்ற தலையீற்றுப் பசுவைப்போல, எல்லாவற்றையுமறிந்த மேலோனாகிய நாரதபகவான் அவன் கூப்பிடுவதைக் கேட்குமுன்னரே, தாம் நினைத்துக்கொண்டிருந்த செயலினின்றும் விலகி விரைந்து எதிரேசென்றனர். உருக்குமாங்கத ராசன் அவர் திருவடியைப் பணிந்து துதிசெய்து உரைக்கலுற்றனன் எ - று (௯)

வேறு

வேட்டையின் வந்தநான் மிகுந்த தாகநோய்
வாட்டலின் வனத்திடை வனத்தைநாடியே
கோட்டமில் சிந்தையிற் கொட்புறத் தெய்தினேன்
மூட்டிய வினையினான் முதுநந்தை வாழிடம்.

(இ - ள்) வேட்டையின் விருப்பால் (வனத்திற்கு) வந்த அடியேன் மிக்க தாகநோய் துன்புசெய்தலின் வனத்தில் வனத்தைத்தேடி, கோணுதலில்லாத மனத்துடன் வருந்தி, மூளச்செய்த தீவினைப்பலனால் முதுநந்தையென்பாள் வாழும் (கவ்முனிவன்) ஆசிரமத்தை யடைந்தேன். எ - று

வனமிரண்டனுள் முன்னையது காடும், பின்னையது நீருமாம் (௧௦)

உடலழி தாகநோய்க் குதகம் வேண்டினேன்
கடல்விழி யுயிரழி காம தாகநோய்
படாதர வென்னிடைப் பற்றிலாமைகண்
டடருமிந் நோய்சமித் தடைவித் தாவரோ

(இ - ள்) தேகத்தை வருத்துகிற தாகநோய்க்காக நீரைக்கேட்டேன். கடல் போலும் விழியையுடைய அம்முதுநந்தை உயிரைவருத்துகிற காமதாகமாகிய நோயா

னது தன்னைத் துன்புசெய்ய, (என்னை வேண்டினன்) என்னிடத்தில் (அவ்வகைய) பற்றில்லாமையைப் பார்த்து, கொல்லுதற்கு இந்நோயை (அடைகவெனச்) சபித்து அடையச்செய்தனன் எ - று. (௧௧)

பயில்பதி யினிச்செலப் பற்று வைத்திலே
னுயிரினை விடுப்பதே யுளந்து ணிந்துளேன்
செயிரறு தவம்பல காலஞ் செய்தெனை
யயர்வறத் தந்தவர்க் காகத் தாங்கினேன்.

(இ - ள்) யானவசிக்கும் பதிக்கு இனிப்போகப் பற்றுவைத்தேனல்லேன் உயிரை விடுவதாகவே மனந்துணிந்திருக்கின்றேன் (ஆனால்) குற்றமற்ற தவத்தை அநேககாலஞ்செய்து வெறுப்பற என்னைப்பெற்ற தாய்தந்தையர்களுக்காக (இவ்வூனும் உடலைத்) தாங்கி யிருக்கின்றேன் எ - று (௧௨)

வழிமது வெனவிசை வடிக்கும் வீணையாய்
செழுமலர்ச் சேவடி சேர்த்தி நாளுநான்
வழிபடு கணபதி யருளின் வண்மையால்
விழியெதிர் காணுமா விசும்பிற் றோற்றினை

(இ - ள்) வழிகின்ற தேனைப்போல இசையைவடிக்கும் மகதிவீணையையேந்திய நாரதமுனிவரே! செழித்தமலர்களைச் செவ்வியதிருவடியிற் சேர்த்தித் தினந்தோறும் நான்வழிபடுகின்ற கணேசப்பெருமானுடைய திருவருள் வளத்தினால் என் கண்ணெதிரே காணும்படி ஆகாயத்திலே தேவரீர் காணப்பட்டீர் எ - று (௧௩)

நாரத முனிவநின் னளினச் சேவடி
சாரநான் பெறுதலிற் றளருங் குட்டநோய்
தீரவே பெற்றுளேன் செம்மல் வீமனிவ்
வாரமே மலட்டினை மாற்றும் வாரமே.

(இ - ள்) நாரதமுனிவரே! தேவரீருடைய தாமரைமலர்போன்ற செவ்விய பாதங்களை அடியேன் சாரப்பெறுதலால், துன்புசெய்யுங் குட்டநோயைத் தீரவே பெற்றேன் செம்மலே! (என்பிதாவாகிய) வீமராசன் தன் மலட்டுத்தன்மையை மாற்றிய வாரமும் இவ்வாரமேயாம். எ - று. (௧௪)

இனையன பலவுமங் கியம்பி யெம்பிரான்
வினையிது தீருமா விளம்பு கென்றனன்
முனைவனார் வேளனை முகத்தை நோக்குபு
தனைநிகர் நாரதன் சாற்றன் மேயினான்.

(இ - ள்.) இவ்வகைய வார்த்தைகளை பலவற்றையும் அப்பொழுது கூறி, எம்பெருமானே! குட்டநோயாகிய இவ்வினை தீரும் வழியைக்கூறியருள்கவென்றனன். தன்னைத்தானே நிகராகிய நாரதமுனிவர் போர்வேளாகின்ற முருகக்கடவுள்போலும் அழகுவாய்ந்த உருக்குமாங்கதனை நோக்கிச் சொல்லத்தொடங்கினர். எ - று.

தீருமா இதில் ஆ என்பது ஆறு என்பதன் றொகுத்தல்.

வேளென்றதை முனைவனாரென்னும் அடைமொழியால் முருகனென்றும்.

வேறு

குதம்பைசான் றொருத்திற் றுயல்வருங் காதிற் கொற்றவ நின்குடை நிழலி
னிதம்பெறு விதற்ப தேயமென் றோங்கு மிந்தநாட் டின்றுநான் வருங்கால்
கதம்பமா நகரி னதிசய மொன்று கண்டன னஃதியா தெனனின்
மதம்பொழி களிநல் யானைமா முகவன் மந்திர முள்ளதந் நகரின்.

(இ - ள்) காதிலணிந்த குதம்பையானது தொங்கப் பிடரியின்மேலே அசைகின்ற உருக்குமாங்கதனே! உன்குடை நிழலிலே நன்மைபெற்றுவிளங்கும் விதற்ப தேயமென்று உயர்ந்த இந்தநாட்டிலே இன்று நான் வரும்பொழுது, சிறந்த கதம்ப நகரத்திலே ஓரதிசயத்தைப் பார்த்தேன் அஃதியாதெனின், பொழிகின்ற கலைமதச் செருக்கையுடைய சிறந்தயானைமுக விநாயகக்கடவுள் திருக்கோயிலொன்று அந்நகரத்திலுள்ளது எ - று (௧௬)

மந்திர மதனு ளமர்ந்தருள் சிந்தா மணியெனும் பெயர்விநா யகனை
முந்துற வணங்கி யவரவர் வேட்ட முனிவிலா வரம்பெறு கின்றார் [த்த
கொந்தொளிக் கோயின் முன்புறக் கணேச குண்டமென் றொருபெருந் தீர்
மந்தரத் தவரும் வியத்தகு பெருமை யணிந்திருக் கின்றதாங் கதனில

(இ - ள்) அக்கதம்பநகரத்திலே, திருக்கோயிலினுள்ளே யெழுந்தருளியுள்ள சிந்தாமணியென்னும் பெயரையுடைய விநாயகக்கடவுளை முற்படப்பணிந்து, அவரவர்விரும்பிய அழிவில்லாத வரங்களைப் பெறுகின்றார்கள் தொகுதியாகிய ஒளியையுடைய அத்திருக்கோயிலின் முன்னே பொருந்தக் கணேசகுண்டமென்னும் பெயர்கொண்ட ஒருபெரிய தீர்த்தமானது தேவர்களும் அதிசயிக்கத்தக்க மேம்பாடிருக்கின்றது எ - று

கொத்து - கொந்து, இடைமெலித்தல் (௧௭)

அடங்கருங் குட்ட நோயினன் முதிய னல்லலே சேர் சூத்திர னொருவ
னிடங்கர்க ளுலவுந் தீம்புனற் றீர்த்த யாத்திரைக் கேகுவா னடுத்து
மடங்கரு மகிழ்வி னாடின னெழுந்தான் வல்வினை யொடும்பிணி தீர
விடங்கமெய் யினனாய் விநாயக னுருவு மேவினன் விண்ணுளோ ரேக்கறவே

(இ - ள்) அடக்குதற்கரிய [அதிகரித்த] குட்டநோயுடையவனும், விருத்தனும், துன்பமைந்த சூத்திரனுமாகிய வொருவன், முதலைகளுலவுகின்ற மதுரமாகிய நீரையுடைய தீர்த்த யாத்திரைக்குச் செல்லச்சென்று, எல்லையில்லாத களிப்புடன் (அக்கணேசகுண்டத்தில்) மூழ்கியெழுந்தனன். கொடியவினையோடு குட்டநோயொழிய விடங்கதேகமுடையவனாய், தேவர்களும் அங்கலாய்க்கும்படி விநாயகர் திருவுருவை யடைந்தனன். எ - று

இடங்கர் - முதலை ஏகுவான் - வினையெச்சம்; இதில் வான் வினையெச்ச விகுதி. விடங்கம் - உளியிடப்படாதது எனவே திவ்வியமெனக. (௧௮)

உமாபதி யுயிர்த்த முன்னவ னருளா லொலிபுகழ்க் கணங்கண முன்னுறுத்து
விமானமேற் கொண்டு விநாயக ருலக மேவின னீயவ னதனுள்
இமாசல மனைய தோளினாய் நீயு மெய்திநீ ராடியே ரம்பா
தமோதரு வைசகளுந் தருமமா திகளுஞ் சமைமதி கணக்குமிப் பெருநோய்.

(இ - ள்.) உமாதேவி நாயகராகிய சிவபெருமானீன்ற மூத்தபிள்ளையாராகிய விநாயகக்கடவுள் திருவருளால், ஒலிக்கின்ற கீர்த்தியையுடைய சிவகணங்களை முன்னே செலுத்திய விமானத்திலேறிவந்து விநாயகக்கடவுளுலகை யடைந்தான் அச் சூசந்திரனாதலின், இமாசலத்தை யொத்த தோளையுடைய உருக்குமாங்கதராசனே! நீயும் அங்கடைந்து அதில் மூழ்கி ஏரம்பமூர்த்தியின் பூசையுந் தருமமுதலியனவுஞ் செய்க; இப்பெருவியாதி (அக்கடவுளருளால்) விலகும்.

மதி - முன்னிலை யசையிடைச்சொல் (௧௯)

முரிதிரை சுருட்டும் விரிதடற் பரப்பின் மொய்த்துறு மருங்கெலாஞ் செயிலு
கரிபரி யிரத மாதிக டானங் காதலித் தியல்புளி செயினுங்
தரியலார்க் கிடியே றனையவேற் கரத்தாய் தாங்குநின் சாபநோய் கதம்ப
புரிவளர் சிந்தா மணிவினா யகரா லல்லது பொன்றுறா தென்றான்.

(இ - ள்.) பகைஞர்க்கு இடியேறுபோன்ற வேலாயுதத்தைக் கையிலேந்திய உருக்குமாங்கதராசனே! முரிகின்ற அலைகள் சுருட்டும் பரந்த கடல்சூழ்ந்த பூமியில் நெருங்கியுள்ள அவிழ்தங்களையெல்லாம் புசித்தாலும், யானை குதிரை தேர்முதலிய தானங்களை ஆசையோடு விதிப்படி செய்தாலும், ஏற்றுள்ள உன் சாபநோயான துக்கம் கதம்ப நகரத்திலெழுந்தருளியுள்ள சிந்தாமணி விநாயகராலல்லாமல் ஒழியாது என்று (நாரத முனிவர்) கூறினர். (௨௦)

நாரதர் உருக்குமாங்கதனுக்குச் சாபந்தீர்வு கூறியபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௪௬௧

---

# இந்திரன்சாபம்பெற்றபடலம்.

---

மாடகமு றுக்கியிசை பாடுமுனி நீடுபிணி மாற்று முறைமை
நாடியுரை செப்பலும கிழ்ந்துகழன் மன்னவ னயந்து பணியாக்
கூடியநல் லன்பினிது கூறுவ னருந்தவக தம்ப நகரிற்
பீடுறவி ருந்தபெரு மானையெவர் பூசனைகள் பேணினர்கொல்

(இ - ள்.) தந்திரிகளை முறுக்கி இசைபாடும்போதும் நாரதமுனிவன், குட்ட வியாதியை யொழிக்கத்தக்க முறைமையை யோசித்துக் கூறவும், வீரக்கழலணிந்த உருக்குமாங்கத மன்னன் களிப்புற்று அன்புடன் பணிந்து, ஆசையோடினிதாகச் சொல்லுகின்றனன்: அருந்தவமுடைய முனிவரே! கதம்ப நகரத்திலே பெருமை பொருந்த எழுந்தருளியிருக்கும் விநாயகக்கடவுளை (இதன் முன்னே) யாவர்தாம் பூசனைசெய்தனர்? எ - று.

மாடகம் - தந்திரி, முறுக்காணி (௧)

வீறுமழை பெய்யசுடர் வீசவளி யென்றிவைத மக்கு தவுகைம்
மாறுமுள தோபுவியின் மன்னுயிர்க ளுய்யவரு மாதவ ரினைக்
கேற்றிடுகைம் மாறுமடி யேன்புரிவ தென்னுளதி ரங்கி யருள்க
தீறியரு ளென்னவி ரந்திடம கிழ்ந்துமுனி செப்ப லுற்றான்

(இ - ள்.) பெய்கின்ற (மிக்க) மழையும், காய்கின்ற சுடரும், வீசுகின்ற காற்றுமென்று சொல்லப்படுமிவைகட்குச் செய்யுங் கைம்மாறு ஒன்றுண்டோ?

(இலலை, அதுபோல) உலகிலுள்ள நிலைபெறற வுயிாகள உசசிவிககுமபடி வநத நாரத முனிவரே! தேவரீருககு எதிராக அடியேன செயயததகக பிரதியுபகாரம யாதிருக கினறது? மனமிரஙகி யருளவேணடும. கோபஞசெயயாதருளவேணடுமெனறு யாசிகக, நாரதமுனிவா மகிழ்நதுசொலலலாயினா எ - று　(௨)

முநதையொரு காலமுடி வானவரி றைஞசமுகி லூாதி சுதனமைச்
லநதமணி யாதனமி ருநதரசு செயதொளித ழைககு மளவி
ரநதிலுறு மெனனையெதிா வநதடிப ணிநதுதொழு தாதனயல
தெநதவுல குநதிரியு மெநதையுள தேலதிச யமபு கலென.

(இ - ள) முனனொருகாலததில, மேகவாகனனாகிய இநதிரன சுதனமை மணடபததிலே, அழகிய இரததின சிஙகாதனததிலிருநது தேவாகள வணஙக அரசு செயது கீாததி நிறைநதிருககையில, அவவிடததிலுறற எனனை எதிாகொணடு, அடியிற பணிநது நமஸகரிததது ஆதனமொனறு கொடுததது (அதிலிருககசசெயது) எலலாவுல கஙகளிலுஞ சஞசரிககும எநதையே! அதிசயமுளதாயிற கூறுகவெனவினவ எ-று

சுதனமை - இநதிரன கொலுவிருககை மணடபததின பெயா　( ௩ )

இநதிரனை நோககியிது கூறுகலி சைநதனனி லஙகு குலிச
வெநதிறலி னுயவளரு மேதினிய கேதனனம மேதி னியிடை
யநதணாக ளெறறரிய மாதவமி யறறியருள சோக வுதமன
மநதிரவ ழறகடவுண முனவதுவை செயதமட மாத கலிகை

(இ - ள) இநதிரனைநோககி இதனைசசொலலவிருமபுகினறேன பிரகாசிககினற வசசிராயுதததாலாகிய வெவவிய வலியுடையவனே! வளாகினற பூலோகததையடைந தேன அபபூலோகததிலே வேதியாகள செயதறகரிய பெருநதவஞசெயது திருவரு ளடைநத கவுதமமுனிவன மநதிராககினி முனனதாகத திருமணஞசெயத இளமஙகை யாகிய அகலிகையெனபவள (ஒருததியுளள) எ - று　( ௪ )

அனனவட னககழகி னுலகி னெபபவாகள யாவருமிலை
பொனனுடையி னனமருமா தகலை மாதுசசி பொறபி னிரதி
நனனரது சூயைதிதி நாடியதி லோததமைநல லகொளிதி
யினனவரும வெநதிடுத லனபியவள முனனெதிா வாாா ரிலமே

(இ - ள) அவளுககு அழகிற சமானமானவாகள உலகததிலே யொருவரு மிலர் பீதாமபரமணிநத திருமாலின மாாபகததுளள திருமகள-சரசுவதி-இநதிராணி-அழகிறசிறநத இரதி - நலல (அததிரிபாாியையாகிய) அநுசூயை-திதி-திலோததமை-நனமைகொணட அதிதி இபபடிபபடடவாகளும முதுகுகாடடிதலனறி (அழகில) அவளுககுமுனனே எதிாபோாிலா எ - று

திதி - காசிபன மனைவியா பதினமூவாிலொருததி இவள மககளே தைத தியர். திலோததமை - தேவதாசிகளிலொருததி அதிதி-காசிபனமனைவியாில தேவ ரைப்பெற்றவள.

பொனனுடை - பொன வஸதிரம இதுபீதாமபரமெனப வெந் - முத்து

இருமபிரச தஙகநத மெனனுமதின மூனறுமொரி மூள முறுவல
லருமபியபி ரானசரல பலலதும திததலறி யாவென பனமும

விரும்பியது கண்டவுட னென்னிலை டனைவிர வாத நகரம்
பெரும்புலவ ராற்புகழ்வ தன்றென்மொ ழிந்துபெயா குற்றொ ருவினேன்.

(இ - ள்) இரும்பு வெள்ளி பொன்னென்னும் மும்மதில்களும் பற்றியெரியும்படி புன்னகைசெய்த சிவபிரானுடைய திருவடியையன்றி, (பொருளாக) மதிப்பதறியாத என்னுடைய மனமும் (அவ்வகலிகையைக்) கண்டவுடனே இச்சித்ததென்றால், அவ்வாயுடைத்தாயிராத நகரமானது பெரிய புலவர்களாற் புகழத்தக்கதன்று எனக்கூறி, அவ்விடம் விட்டுச் சென்றேன் எ - று

இரும்பிரசதங்கனகம் என்பதை இரும்பு இரஜதம் கனகமென்று பதம்பிரித்துக்கொள்க (௬)

வேறு

சுந்தர வகலிகை தொகுமிசை நுவல
விந்திர னிணாவிடு மெரிபடு மெழுகின
சிந்தையு ளுருகின்ன செறிதுய ரகலக
கந்தென மருவினன் கவுதம னுருவம

(இ - ள்) அழகினையுடைய அகலிகையின் மிகுந்த சிறப்பைச்சொல்ல, இந்திரனவன் தொழுந்துவிட்டெரியும் அக்கினியிற்பட்ட மெழுகுபோலத் தனமனமுருகி, மிகத்துன்பமானது விலகும்படி விரைந்து கவுதமமுனிவர் வடிவேற்றனன் எ - று

கந்து - வேகம் (எ)

பொய்கழி கவுதமர் பூமபுன லாட
வைகறை நீங்கினா மறறது போழ்தின
மெய்கழி மனமொடு மேவிய மகவா
னெய்கனி கூந்தன்மு னின்றிது மொழிவான.

(இ - ள்) பொய்ம்மொழியகன்ற [சத்திய சீலராகிய] கவுதமமுனிவர் அழகிய நீரிலமுழுக, விடியற்காலத்து (ஆசிரமத்தினின்று) சென்றனர் அந்தக்காலத்தில் மெய்ம்மையொழிந்த மனத்துடன்பொருந்திய இந்திரன் நெய்ப்பசைமிக்க அளகத்தையுடைய அகலிகைமுன்னே நின்று இதனைச் சொல்வான் எ - று

மகவான் - இந்திரன் இது நூறு அசுவமேதஞ் செய்தவனென்னும் பொருளில் வந்தது மகம்=யாகம் (அ)

சுடர்விடு மிளநகைத் துவரிதழ்க் கனிவாயக
குடநிகர் வனமுலைக் கொடிபுரை யிடையின
மடவரல கலவியின மருவுதற கமளி
யிடுகடி தெனவவ ளெதிரிது மொழிவாள்.

(இ - ள.) ஒளிவீசும் சிறிய தந்த பங்தியும, பவளம்போன்ற உதடும், ஆதொண்டைக்கனிபோன்றவாயும, குடம்போன்ற (பூரித்த) அழகியமுலையும, (பூங்) கொடிபோன்ற இடையுமுடைய பெண்ணே ! உடன்பொருந்துதற்கு விரைவிற் படுக்கையிடுக வெனக்கூற, (அகலிகை தன் கணவரான கவுதமரென்று கருதி) அதற்குப் பதிலாக இதனைச் சொல்கின்றனள். எ - று

மடவரல் - மடம்மக்குணம் வருதலையுடையாள். (௯)

வேறு

ஒருநாளு மொழுகாத வொழுக்கமருந் தவவென்னே யொழுகப் புக்காய்
முருநாறு மலாபபொய்கைப புனலாடிச் சந்திசெப முறையி னாற்றிப்
பெருகாரவத் தொடுங்கடவுட பூசைபுரி காலத்துப் பிழைபே சாவத
தருகாமப பொருளவிழைதற் கேதுறுமக கெனவென்னச சாற்றி னாள்.

(இ - ள) அரியதவதனதயுடைய முனிவரே ! ஒருகாலததும நடவாத நடக கையை நடககபபுகுநதீா அது யாது காரணம? வாசமபொருநதிய மலாயுடைய தடா கததிலே நீராடிச சந்தியாவந்தன முதலியவற்றை வழககபபடி செயது, மிகக ஆசை யோடு சிவபூசையைச செயயுஙகாலததிலே மிககுறறததையே கொடுக்கத்தக்க காமபபொருளை விருமபுதறகு உமககுக காரணமயாது ? என்று கூறினள். எ - று. ()

படிமையிற கவுதமனா வடிவெடுததுப படாநதபெரும பாவி செய்கை
கட்டழகி யறியாது தனககணவ னெனவிதனைக கரைநத வெலலைச
சட்டமக வானமொழிவான றையலாய நீராடச சாரநதே னஙகு
வட்டமுலை யொருமாது துகிலினறி நீராடும வனபபுக கணடேன.

(இ - ள்) வஞ்சகமாகக கவுதமமுனிவா வடிவேறறுவநதமகாபாவியாகிய இந திரன செயலைப்பேரழகுடைய அகலிகை யறியாதவளாகித தன கணவரெனறு இவ வாறு சொலலியகாலததில, விரைந்து இநதிரன சொலலுவான பெணணே ! நீரா டசசெனற நான அஙகே வட்டமாகிய முலைகளையுடைய ஓமஙகை சேலையினறி நீரினமூழகும அழகைககணடேன எ - று (௧௧)

உளமகிழ்ந் தெழுநதபெருங காமததா லுறுறறலுறுங கருமந தனனி
லெள்ளளவு மனஞ்செலல விலலையினி யுயிாவாழவு மெயதா தாகுங
கள்ளொழுகு மலாககோதாய கலவிதரல வேணடுமது கடிநதா யாகிற
பொள்ளெனநின னுயிாமாழகச சபிபபனென றுனகேடட பூவை யனனாள.

(இ - ள) மனமகிழநது தோனறிய பெருஙகாமததினால, செயதகக கருமத தில, சிறிதும மனஞ்செலலவிலலை. இனி உயிாபிழைததலும அடையாததாகும தேனசிநதும மலாகளையணிநத கூநதலையுடையாளே ! புணாசசிகொடுகக வேணடும. அதனை விலககுவாயாகில விரைவாக உனனுயிரிறககச சபிபபேனெனறுன அதனைக கேடட திருமகளபோனற அகலிகை எ - று (௧௨)

கைபபிடிததுக கனலவலஞ்நத காதனமிகுங கணவா மனங களிககுமாகக
மெபபடியோ வபபடியே யிசைநதிடுத லெழுயாககா மியலபையெணணி
யபபடியே யாகவென விசைநதமளி தனையடுததா ளமராா கோமான [ன
மைபபடிநின விழிககடையா லுயநதேனென றுடனுவநது மருஙகு சாாநதா

(இ - ள.) கையைபபற்றி அககினிவலஞ்செயத ஆசைமிகக காதலருடைய மனமானது களிபபடையும வகை யெபபடியோ அபபடியே யிணஙகியிருததல மாதாகளுக் கியலபாதலைககருதி, அவவாறே யாகுகவென்று இணஙகி, சயனத்தைச சமீபிததனள தேவராசனாகிய இநதிரன மைபபடிநதுள்ள உன கடைககடையினாலே உயிாபிழைததேனென்ற சநதோஷிதது உடனே அவளபககலிற சோநதனன எ - ற.

வேறு

செம்பொன் மணிக்கட டிலினிருந்து சிறுபுன் முறுவல் முகத்தரும்பப்
பம்பு மணிமே கலைகதிப்பப் பவளக் கனிவா யிதழ்துடிப்பக்
கிம்பு கிழியத் திதலைமுலை வளர்ந்து விம்ம விடைநுடங்கக்
கொம்பின் மருங்கு நின்றாளைக் குடங்கை பற்றி யிருத்தினனே.

(இ - ள்.) செம்பொனாலாகிய கட்டிலில் (இந்திரன்) இனிதாகவிருந்து, சிறிய புன்னகையானது முகத்திலரும்ப, பூரித்த இரத்தினங்களாலாகிய மேகலாபரணமானது ஒலிக்கவும், செம்பவளம்போன்ற வாயிதழ்கள் துடிக்கவும், கச்சுகிழி படவும், தேமல்படர்ந்த முலைகள் பூரித்து இறுமாப்படையவும், இடைதளரவும், பூங்கொம்புபோலப் பக்கலினின்ற அகலிகையை உள்ளங்கையைப்பற்றி (சயனத்தில்) இருக்கச்செய்தனன். எ - று.

மேகலை - இஃதோரணி; முனவிளக்கப்பட்டது. வம்பு - முலைக்கச்சு. இஃதிக்காலத்து இரவிக்கையென வழங்கும். திதலை - தேமல். பவளக்கனிவாயிதழென்றதை பவளவாயென்றுங் கனியிதழென்றுங் கூட்டிப் பொருள்கொளினுமையும் கனிவாய பவளவிதழெனினும், பவளக்கனிபோன்ற வாயினிதழெனினுமொக்கும். (௧௪)

அங்கைத் தலத்தான் முலைவருடி யாடை நெகிழ்த்துப் புறம்போக்கிப்
பொங்கு நிதம்பத் தடம்வருடிப் புகலுங் கரலீ லையும்புரிந்து
கொங்க லொடுமெவார் குழல்சோரச் சுடர்வா ணுதலு நனிநீவித்
திங்கண் முகத்தின் முத்தாடிக் திகழ்தா டனமும் பலசெய்தான்.

(இ - ள்) அழகிய கைத்தலத்தினாலே முலையைப்பிடித்து, அவள் கலையை யவிழ்த்துப் புறத்தேவீழ்த்தி, பொங்கிய கடிதடத்தைவருடி, (காமநூலிற்) கூறிய கரிகரலீலையுஞ்செய்து, மலர்மாலையுடன் நெடிய அளகபாரஞ் சோரும்படி, ஒளிவிளங்கும் ஒள்ளிய நெற்றியையுமனேகத்தடவி, (பூரண) சந்திரன்போன்ற முகத்தில் முத்தமிட்டு விளங்குகின்ற பலதாடனங்களையுஞ் செய்தனன் எ - று.

நிதம்பம் - பெண்குறி. கரலீலை-கையாற் செய்வதோர்லீலை. இது கரிகரமெனப்படும். யானைத்துதிக்கைபோலும் விரலை மடக்கிச்செய்தலின் தாடனம்பல என்றதால், சங்கோசம்-பக்கத்தம்-பிரசுரிதகம் - மூஷடி - கீலம் - கத்திரிகை - சந்தங்கிசம் - வித்தையென்னு மெட்டையுங்கொள்க. (௧௫)

கோலத் துடையாற் றுடைநெரிக்கிக் கூன்கை யெற்றுக் முறச்சாய்த்துச்
சாலக் கனிவா யிதழ்பருகித் தந்தக் குறியு மாங்குறுத்தி
நீலத் தடங்கண் முதலமுத நிலவுமிடங்கள் பலசுவைத்துச்
சீலக் குறிமூ டிகமாதி பலவுந் திகழச் செய்திட்டான்.

(இ - ள்) அழகிய துடையினாலே துடையை நெருக்கி, வளைந்தகையைப் பிடரியிற் பொருந்தச்சாய்த்து, கொவ்வைக்கனிபோன்ற வாயிதழை மிகுதியாகச் சுவைத்து, அதிலே தந்தக்குறியையும் அமர்த்தி, நீல நிறம்பொருந்திய விசாலமான கண்முதலிய அமுதம் நிறைந்தானங்கள் பலவற்றையுஞ் சுவைத்து, நல்ல மூடிக முதலிய பலகுறிகளையும் நிறைத்துவிட்டனன் எ - று.

தந்தக்குறி - பல்லாற்செய்வதோர்குறி. மூஷிகமாதி யென்றதால் மூஷிகம்- அநுசூநகம் - பிரவாளமணி - பிந்து - மணிபிந்துமாலை - கோலசாவிதமென்னு மா

றுங்கொள்க. அவை முறையே உதட்டிற் சிவப்புறப்பதித்தல் - கபோலத்தும் அதரத்தும் வடுவின்றிப்பதித்தல் - கபோலத்திற் பல்லு மிதழும் படாது பதித்தல் - அதரத்திற் பல்லைக்கப் பதித்தல் - கைமூலம் நெற்றி மார்பு துடைகளி லழுந்தப்பதித்தல் - தனங்களி லொழுங்காகப்பதித்தல் என்பர் காமநூலுடையார். அழுத்நிலவு மிடங்கள் - பெருவிரல் புறந்தாள் பரடு முழந்தாள் குய்யம் நாபி முதலியனவாம். அவ்விடங்கட்குரிய அகத்தொழில் புறத்தொழில் முதலியவற்றை இன்பநூலுட் கண்டு தெளிக. (௧௬).

கொங்கை ஞெமுங்க விருகரத்தாற் குவவு மணித்தோ ளுறவிறுக்கி
சங்க நெரியச் சிலம்பொலிப்பத் தடங்கண் சிவப்ப விதழ்வெளுப்பத்
திங்க ளுதலின் வியர்வரும்பத் திகழ்புட் குரல்கண் மிடறொலிப்ப
மங்கை யவளுங் கற்பகஞ்சூழ் வல்லிக் கொடிபோன் முயங்கினாள்

(இ - ள்) முலைகளழுந்தும்படி இருகரங்களாற் குவிவாகிய அழகிய தோள்களைப் பொருந்தவிறுக்கிக்கொண்டு, வளையல்கள் நெரியவும், பாதசிலம்புகளொலிக்கவும், பரந்தவிழிகள் சிவக்கவும், அதரம் வெளுக்கவும், சந்திரனைபோன்ற நெற்றியில் (குறு)வியர் வரும்பவும், விளங்குகின்ற (எண்வகைப்) புட்குரல்கள் கண்டத்திலொலி செய்யவும், அவ்வகலிகையுங் கற்பகத்தருவைச்சூழ்ந்த காமவல்லிக் கொடிபோலக் கலந்தனள் எ - று.

தடங்கண் சிவப்பவிதழ் வெளுப்பவென்றது, ஜயங்கொண்டான் பரணி 'வாயிற் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத் - தோயுங் குமி விடியளவுந் தொங்குங் கபாடந் திறமினோ'' என்றபடி, மங்கையர்க்குக் காமவின்பம் விளையுங்கால் கண்சிவத்தலும் வாய்வெளுத்தலுங்குறியாமென்க.

புட்குரல் எண்வகை—அவை மயில் - புறா - அன்னம் - காடை - வண்டு - குயில் - கோழி - செம்போத்து என்பன. இவ்வொலி புணர்ச்சியில் இன்பம் விளைவுழி அம்மங்கையின் கண்டத்துதிக்குமென்பர்.

கற்பகஞ்சூழ் வல்லிக்கொடியென்றது, கற்பகவிருக்ஷத்திற் படர்வது ஓர்கொடி காமவல்லியென்றிருத்தலின், அகலிகை கொடியாகவும் இந்திரன் கற்பகமாகவும் உவமித்தனர். இதனை, "கற்பக மருங்கிற் பூத்த காமருவல்லி" யென்னும் பரஞ்சோதி முனிவர் வாக்கானுணர்க. (௧௭)

கந்து நிலையே பன்னகமே காத லரும்புங் குக்குடமே
பிந்தும் வெருகே யிணையாதி பிறங்கு கரண முறவியற்றிச்
சிந்தை களைய வுடல்களையச் செறியு முயிர்கள் கலந்தொன்றாய்
முந்தை யறியாப் பெரும்போக முழுகிக் கருத்து முற்றினான்.

(இ - ள்) (ஐவகைக் கரணங்களுடன்) கந்துநிலையும், சாடபமும், ஆசைமிகுங் கோழியும், பிறபடுகின்ற பூனையும் இவைமுதலியவற்றின் விளங்குகின்ற கரணங்களும் பொருந்தச்செய்து, மனமுருகவும் உடலுருகவும் நெருங்கிய இரண்டுயிர்களு மொன்றாய்க்கலந்து முன்னே கண்டறியாத பெருஞ்சுகத்திலே யமிழ்ந்து மனக் கருத்தை முடித்தனன் (இந்திரன்) எ - று.

கரணங்கள் ஐவகையின் : அவை உத்தானிதம் திரியக்கு ஸ்திதம் ஆசிதகம் ஆனமிதம் எனப்படும். அவற்றுள், உத்தானிதம் - மலர்த்தல், திரியக்கு - குறுக்கு அல்லது ஒருக்கணித்தல், ஸ்திதம் - உட்கார்த்தல், ஆசிதகம் - நிறுத்தல், ஆனமிதம் - குனித

வெனபா அனறியும, குஙிரை பாமபு கோழி பூனை முதலியவறறின பலபேதபபட்ட கரணஙகளைப் பசுகரணமெனபா.

பிரதம வெருகெனறது புணாசசிகாலததிற பினனோறகும ஆண பூனை யெனருவது, பெண பூனையின் குறியிலோா மறவிருநது அதனைப புணாசசிகாலதது வருநதசசெயதலின புணாசசிககு அததுயராறறுது தாமதிககும பூனையெனருவது கொளக. மேறபோநத ஐநது செயயுட்களின கருததை விளகக அசஙகிதமாதலின குறிபபாறுணாதலினம இவறறின விரிவெலலாம காமநூறகடலுட காணக (கஅ)

கடலிற பிறவாச சுவையமிழ்தே கருமபிற பிறவாக கொழுமபாகே
மடன்மென மலரிற பிறவாத வாசங கமழுஞ் செழுந்தேனே
யுடல மிரணடே யலதெனககு முனககு முயிரொன் றேயன்றே [தான
யடாமெய்த் தவததா லுனைபபெறறேற காவ தினியென னெனபுகழந

(இ-ள) பாறகடலிற பிறவாத சுவையையுடைய அமிாதமே! கருபபிர சததிற பிறவாத செழியகறசணடே! இதழுகளையுடைய மெலலியமலரிற பிறவாத மணமவீசுஞ செழியதேனே! எனககும உனககும உடலிரணடேயலலாமல உயி ரொனறேயலலவா? நெருஙகிய உணமைத்தவததினுலே உனனையடைநத வெனககு இனியாகவேணடுவது யாதிருககினறது? (ஒனறுமினறு) எனறு புகழ்நதனன (இந திரன.) எ-று (கக)

நனனா முறுவல வறிதருமப நயனஞ் சிறிதே முகிழ்பப
மன்னு மமளி மிசையினப வசமாயக கிடநத மடமாது
மின்னி னுடஙகி யிடைதளர மெலல வெழுநது துகிலுடுததிட
டனன மலாநீத தெனககட்டி லகனறங கிதனைத துணிநதுளாததாள

(இ-ள) நலல புனனகையானது மிககருமபவும, விழிகள சிறிது கூபப வும, பொருநதிய படுககையினமேலே இனபமயமாகிககிடநத இளமபருவமுடைய அகலிகை, மினனலபோலும இடையானது நுசிநதுதளர மிருதுவாகவெழுநது சேலை யையணிநதுகொணடு அனனமானது தாமரைததவிசினினறு நீஙகியதுபோலககட்டிலி னினறு மிறஙகி இதனைத தீரததோடு சொலலினள. எ-று.

புனனகையருமபலும, கணகள சிறுததலும, தனனைமறததலும புணாசசி நிகழ்வழியுளகுறிகளாமாதலின "நனனாமுறுவல வறிதருமப நயனஞ்சிறிதே முகி ழிபப, மனனுமமளி மிசையினப வசமாயககிடநதமடமாது" எனருா. (உ0)

வடிவே முனிவன போனறிலன வடிவிற கமழு மியனமணமுங
கடியா வினபக கலைதொழிலுங் கருதின் வேறே யிவனகளள
முடிவா சவனே யெனததுணிநது முனிபோ லடுததோய நீயாரோ
கொடிவாய திறவா விடிறசபபமே னெனருள் புருவ நுதலேற.

(இ-ள) உருவமோ கவுதம முனிவனைப்போன்றுள்ளது. இவன்தேகத தில் வீசும இயறகைமணமும, நீககபபடாத காமநூறசொழில்களும் எணணுமிடததில இவன வேறேயாவன. (ஆதலின) வஞசகமுடைய முடியணிநத இந்திரனேயென்று தீாமானிதது, (எனகணவராகிய) கவுதமமுனிவரைபபோல வநதவனே! நீ யாவனோ? ஒருவிநாடியில வாயதிறநது (உணமை) யுரையாவிடடாற சபிபபேனெனறு, புருவங கள நெறறியிலேறுமபடி (வெகுணடு)கூறினள எ-று.

இன்பக்கலைத் தொழிலென்றது புறத்தொழில் பற்குறி நகக்குறி சும்பனம் தாடனமுதலியனவற்றை. (௨௧)

மாது வினவக் கேட்டவினை மற்றும் பெறலா மின்பமென்னத்
தீது விளைவ தறியாதே திகழுந் தன்னுருவ மெதிரேதோற்றிப்
போது செருகு நறுங்கூந்தற் புணர்பூண் முலையா யானற்றக்
மீது பொலம்பூந் தவிசிருக்கும் வேந்த னென்னவின னதும்புகல்வான்.

(இ - ள்) அகலிகையானவள் (இவ்வாறு) வினவிக்கேட்டபடியால், இன்னும் (இவளிடத்தில்) காமசுகத்தையடையலாமென்று கருதி, (தனக்கு)த் துன்பம் வருதலை யுணராமல் விளங்குந் தன் வடிவத்தை யெதிரேகாட்டி, மலர்களையணிந்த நல்ல கூந்தலையும், ஆபரணமணிந்த முலையையுமுடைய அகலிகையே! நான் தேவலோகத்திலே அழகிய (கற்பக) மலர்ப்பீடத்திலிருக்கும் இந்திரனென்று (இன்னும்) இவற்றையுஞ் சொல்லினான் எ - று (௨௨)

அன்னப் பெடையே நின்னெழில்கேட் டயிரா ணியையும் பொன்னுலகுந்
துன்னுங் கலைமா திணைச்செல்வச் சுடர்ப்பூண் மாதை யிருமலரு
மன்னும் வெறுத்து நினைத்தாங்க மதியா நின்ற மற்றியானும்
நன்னா மனத்தா மரையிருத்தி நயந்தாட் செய்ய நினையடுத்தேன்

(இ - ள்) அன்னப்பேடுபோல்பவளே! (நானும் பிரம விஷ்ணுக்களும்) உன் னழகைக் கேள்விப்பட்டு இந்திராணியையும், நல்ல பொன்னுலகத்தையும், அழகு மிக்க கலைமகளையும் ஒளிதங்கிய ஆபரணமணிந்த திருமகளையும், (அவர்கள் பொருந்திய) இருமலர்களையும் மிகவும்வெறுத்து, உன்னைப் பெறக் கருதியிருந்தோம் யானும் நல்ல இதயதாமரையி லிருக்கச்செய்து விரும்பி யாட்செய்யும்படி உன்னை யடுத்தேன் எ - று (௨௩)

இன்று பொருத மதவீர னின்னும் பகழி விடுந்தோறும்
பொன்றுஞ் சியந்தண் களபமுலைப் பூவாய் நின்று விழிக்கருணை
மன்ற வழங்கி யெனைத்தாங்கு மனமு முயிரு மொன்றன்
பின்னை வேறு நினைவதெலாம் பிழையே யன்றோ வென்விரந்தான்.

(இ - ள்.) இப்பொழுது போர்செய்த வீரனாகிய மன்மதன் இன்னுந் தன் (மலர்ப்)பாணங்களைச் செலுத்துந்தோறும், பொன்னாலாகிய ஆபரணமணிந்த களபச் சாந்து பூசிய அகலிகையே! உன்னுடைய கிருபாநோக்கத்தை மிகுதியாகக் கொடுத்து என்னைக்காக்கு மனமும் உயிரும் ஒன்றன்பிறகு வேறுவகையாகக் கருதுவனவெல்லாங் குற்றமேயல்லவோவென்று யாசித்தான் எ - று. (௨௪)

பதியி னடுத்த கொடும்பாவி பகரக் கேட்ட மாதழன்று
மதியிற் களங்க மெனவென்று மாறாக் களங்க மென்குலத்துப்
பொதிவித் தெனது கற்பினையும் பொதித்தாய் முனிவன் றிருவுள்ளங்
கொதிவித் தெனையுங் கெடுத்தாய்நீ கோவே யென்னு மமையத்தில்.

(இ - ள்) தன் கணவனைப்போல்வந்த கொடும்பாவியாகிய இந்திரன் (இவ்வாறு) சொல்லக்கேட்ட அகலிகை கோபித்து, சந்திரனிடத்திலுள்ள களங்கத்தைப் போல எக்காலத்து மகலாத களங்கத்தை என்குலத்திற்குச் சேரச்செய்து, என் கற்பு

நிலையையுங் கெடுத்தாய்! முனிவருடைய திருவுள்ளத்தைக் கோபமூட்டி எனையுங் கெடுத்தாய் நீ தேவராசனோ' என்றுகூறுஞ் சமயத்திலே எ - று.

நீகோவே என்றதில் ஏகாரம் வினைப்பொருள். இவ்விழுக்கிளையுடையோனை அரசாகத்தக்கவனல்லனென்னுங் குறிப்பாலுண்டாய வினா (உரு)

வேறு

புலரியின் மனையகல் கவுதமனும் பொழிமது மலர்நறும் புனலாடிக்
குலவிய செபமுத லியவாற்றிக் கோதறு விடியலின் மீண்டெய்தி
நிலவிய வாய்தலி னிடைநின்று நேரிழை யவள்புனல் கொணர்கென்றா
னிலவிய முகலிகை புனலேந்தி யீந்தனள் பண்டுறு மியல்பின்றி

(இ - ள) வைகறைப்பொழுதில் ஆச்சிரமத்தினின்றகன்ற கவுதமுனிவரும், தேன்சொரியும் மலர்கள்பொருந்திய நல்லதீர்த்தத்தில் மூழ்கி, மிக்கஜபமுதலியவற்றைச்செய்து, குற்றமற்ற விடியற்காலத்தில் மீண்டுமவந்து, விளங்குகின்ற கடைவாயிலில் நின்று, பெண்ணே! (கால்கழுவ) நீர்கொண்டுவருக வென்றனர் இல்வங்கணியொத்த அதரத்தையுடைய அகலிகை, பழமையாகவுள்ள இயற்கையின்றி நீரைக்கொண்டுவந்து கொடுத்தனள் எ - று

புலரியென்றது விடியற்காலத்திற்கோர் பரியாயநாமம பண்டுறுமியல்பாவது நீராடி ஆச்சிரமத்தைச் சுத்திசெய்து முனிவர் வருகையை யெதிர்நோக்கிப் பீடமிடுதல் முதலியன. (உசு)

கண்டது முனிவரன் மடமானே கலைநிறை முழுமதி முகமவேறு
கொண்டதென் னுதல் மிடவில்லை கொம்மென வறல்கொடு வரவில்லை
மண்டிசை வசனமுந் தரவில்லை மற்றுநின் னுடலமுஞ் சுசியில்லை
பண்டைய ளல்லுள துரையென்றான் பனிமொழி மடவா ளிதுசெய்தாள்

(இ - ள) முனிவர் தலைவராகிய கவுதமமுனிவர் அதனைப்பார்த்தும், இளமான சாயலையுடையாளே! பதினாறு கலைகளுடன் நிறைந்தபூரண சந்திரன்போன்ற முகம் வேறுபட்டது யாதுகாரணம்? பீடமபோடவில்லை விரைந்து (காலகழுவுதற்கு) சலங்கொண்டு வரவில்லை மிக்க இசையையுடைய வாயமொழியுங் கொடுக்கவில்லை. அன்றியும் உன்தேகமுஞ் சுசியாகவில்லை நீமுன் (இருந்தவகை) இருந்தவளல்லை. உள்ளதைச் சொல்கவென்றனர் குளிர்ந்த சொல்லையுடைய அகலிகை இதனைச் செய்தனள். எ - று

கால்கழுவு நீரைப பாதப்பிரக்ஷாளன ஜலமெனபர். (உஎ)

உள்ளமொ டுடலமு நடுநடுங்க வுயிர்த்துணை நாயகன் கழல்சூழ்ந்து
வெள்ளுறு நாணினன் முகங்கோட்டி மென்மொழி குழறிட நிலங்கிளையா
வள்ளணி வடிவுகொண் டமையவர்கோன் வந்தெனை தனிநல மருவுண்டா
னெள்ளள வடியனு முணரகிலேனென வுறுசெயன் முழுதுரைசெய்தாள்.

(இ - ள) மனமும் தேகமும் நடுநடுங்கவும், உயிர்த்துணைவராகிய கவுதமமுனிவர் பாதங்களைப்பணிந்து, வெள்ளுறு நாணமுடையவளாய முகத்தைவளைத்துக்கொண்டு மெல்லியசொற்கள் குளறும்படி பூமியைக்கிளைத்துக்கொண்டு, வள்ளலே! தேவராசனாகிய இந்திரன் (தேவரீருடைய) உருவத்துடன் வந்து என் அழகிய சுகத

தைப்பொருந்திருனை (இதனை) அடியேன் என்னவும் அறியேனென்று பொருந்திய செய்கைகளையெல்லாம் (மறையாது) கூறினள் எ - று.

வெள்ளுறு நாணம்—இழிவாலடைந்த நாணம் நீலங்கிளைத்தல் - மாதர் நாணுற்றவழி தமது காற்பெருவிரலாற் பூமியைத் தோண்டுதல். இளையா - செய்யா வெனனும் வாய்பாட்டிறந்தகாலப் பெயரெச்சம். (௨௮)

உருகிய மனமொடு மனைநல்லா ளுரைசெயு முனமுனி கதமுள
விருபுரு வமுநனி நுதன்மேலுற வினைபடு மெரியென விழிசேப்பக்
கருவியு முடலமு மெனவென்றுங் கலவிய நமதுள மறியாயோ
வொருவுத லறவொரு வனினின்ப மேவினை சிலையுரு வாகென்றான்.

(இ - ள்) மனைவியாகிய அகலிகை கரைந்தமனத்துடன் (இவ்வாறு) சொல்வதற்கு முன்னரே, கவுதமமுனிவர் கோபமதிகரிக்க, இருபுருவங்களும் நெற்றியின் மேலேறவும், கொழுந்துவிடும் அக்கினிபோலக் கண்கள் செவக்கவும், கரணங்களுந் தேகமும்போலக் கலந்த எமதுள்ளத்தை நீ யெப்பொழுதும் அறிந்திலையா? அசசப்படுதலின்றி யொருவனிடத்தில் இன்பமநுபவித்தனை (ஆதலின்) கல்லுருவாகுக வென்று சபித்தனர் எ - று.

கதம் - கோபம் புருவம் நெற்றியிலேறுதலும், கண்கள் சிவத்தலுங் கோபக்குறி. கருவி - அந்தக்கரண புறக்கரணங்கள். (௨௯)

வனமவள ரழலென வளைசாபம வருதலு மகலிகை விழிமல்கு [றே
புனலொடு கணவனை யெதிர்நோக்கிப் புரைபிழை யொருவுதல் செய்வன
பினமொரு வருமுரை செயுமுன்னம் பெருமநின் செவியுற வறிவித்தே[ன.
னுனதருள கொடுபிழை யொடுசாபமொழிவகையுரையெனமுனிசொல்வார்

(இ - ள்) காட்டில் வளர்கின்ற அக்கினியைப்போல, முனிவரிட்ட சாபமானது வருதலும், அகலிகையானவள் கண்களில்மிக்க நீருடன் தன் கணவராகிய அம்முனிவரை நேரே பார்த்து, எம்பெருமானே! செய்த குற்றத்தை மன்னித்தற் பொருட்டன்றோ வேறொருவரும் (இதைச்) சொல்வதன் முன்னரே தேவரீர் செவியிற்பொருந்த வுரைத்தேன்? தேவரீர் திருவருளால் எனகுற்றமுஞ் சாபமுமொழியும் வகையுஞ் சொல்லியருளவேண்டுமென்றிரப்ப, கவுதமமுனிவர் சொல்கின்றார் எ-று.

வேறு.

இக்கு வாகுவின் குலத்திடை யிராமனென் றண்ணலே
யக்க ராசலங் காத்தவ னவதரித் திடுமத்
தக்க காவல னுளப்படும் பொழுதுவெஞ் சாபத்
துக்க நீங்கிமுன் போலெனைத் தோய்வையென் றுரைத்தான்.

(இ - ள்.) பெண்ணே! இக்ஷுவாகு வமிசத்தில் இராமனென்னும் பெயருற்று, அவ்விஷ்ணுமூர்த்தி யவதரிப்பான் அந்தத் தகுதியுடைய அரசன் பாதம் படுகையில், வெவ்விய சாபத்துன்பமொழிந்து முன்போல வென்னைக் கலப்பையென்று கூறிவிடுத்தனர் கவுதமமுனிவர் எ - று.

கராசலம்=கரம்+அசலம் - கையையுடைய மலை, யானை.

கராசலங்காத்தது—பூர்வம் திரிகூடபர்வதச்சாரலில் ஓர் யானைவேந்து அநேகம் பிடியானைகளுடன் ஓர் மலர்ப்பொய்கையில் நீர்விளையாடல் செய்கையில் ஓர்

முதலையதன்காலைப்பற்றியீர்க்க, யானை தன்னாற்கூடியவளவு முயற்சிசெய்தும் தப்பித்துக்கொள்ள முடியாமல், இறுதியில் விஷ்ணுவை * ஆதிமூலமே என்று தியானிக்க, அவர் கருடவாகனமிவர்ந்துசென்று சக்கரத்தால் முதலையைச் சங்கரித்து யானையை உயிர்காத்தனரென்பது சரிதம். [இவ்யானையு முதலையுஞ் சாபவுருவங்கள் ] இதனை,

பாகவதபுராணம் - கஜேந்திர அத்தியாயம்

"வேதநூ லொருங்கு ணர்ந்து விரியுமெய் யறிஞருள்ளப்
போதுசேர் சோதி பொன்னிற பொலிவொளிபோல வெங்கு
நீதுறு தருளினர்யார்க்குந் தெரிவுறு துறைந்து நின்ற
ஆதிகா ரணனவ் னினனே யளிக்கவென் றழைத்தனனே

கூப்பிடு குரல்கேட் டோடிக் கொழுமணிச் சுடிகை நெற்றிப்
பாப்பணை யகற்றி வெய்ய படாசிறைக் கலுழ னூர்ந்து
தீப்பொழிந் திலங்கு கூர்வாயத் திகிரிகைத் தாங்கி யாவுங்
காப்பவன் பிறைவெண் கோட்டுக் களிறுமுன் னெய்து றானால்"-எனவும்,

"எறிசுடர் விரிக்குநேமி யெறிந்தன னெறித லோடும்
பிறைபுரை யெயிற்றுப் பேழ்வாய் பிளந்துவெவ் விடங்கா துஞ்சி
அறைதரு சாபந் தன்னா லடைந்தவவ் வுருவு நீத்து
விறலுடை யூகூ வெனனும் விஞ்சைய னுயிற் றனனே"—எனவும்,

"விழுமிய விசைநூ றோர்ந்த விஞ்சைய னுய வன்னோன்
பழமறை முதலி பாதம் பழிச்சினன் பதியிற் போயான்
அழிவறு தவத்தின் மிக்க வகத்தியன் சாபந் தீர்ந்து
மழைமதக் களிறு மாயன் வரம்பில்வீ டுற்ற தம்மா"—எனவும் வருவனவற்றா
லுணர்க. (௧௧)

அங்கு வனசிலை யாயின ளகலிகை யுந்த
நங்கை தன்செயல் கேட்டன ளிருந்துநா னிலத்தி
லங்கி முன்கரம் பற்றுமா டவாதமைப் பிழைக்கு
மங்கை யாக்குநன் றுரைத்துமென் னருமவண் பயனே.

---

* சிலர் ஆதிமூலமே யென்ற யானையை அநுக்கிரகித்தவன் சிவனா? விஷ்ணுவா? விஷ்ணுவேயாதலின் அவனே ஆதிமூலப் பொருளென்று ஆசங்கைசெய்து வைணவத்திற் கிதிலேற்றங் கற்பிக்கின்றனர் உள்ளபடியே இக்கஜேந்திரன் விஷ்ணுபக்தன் இவன் பூர்வ ஜன்மத்தில் இந்திரத்துய்மனென்னும் பாண்டியன் இவன் பொதியமலைச் சாரலில் ஓர்கால் விஷ்ணுவைத் தியானஞ்செய்து கொண்டிருக்கையில் அகஸ்தியபகவான் ஆங்கெழுந்தருள, இந்திரத்துய்மன் அம்முனிபுங்கவரைக் கண்டெழுந்து மரியாதை செய்யாமையின், அகத்தியமுனிவர் சினந்துசபிக்க யானைவடிவேற்று அவ்யானையா யிருக்கையிலே ஆதிமூலமென்று விளித்தானாகலின் அவன் வழிபடு கடவுளான மாயோனாற் காக்கப்பட்டனனென்பது சமாதானமென்றுணர்க.
இதனையும் ஷை புராணம் - ஷை அத்தியாயம்.

"இமிழிருள் சுவற்றும் வேலா னெழுந்தில னிருந்தா னென்னத்
தமிழ்வரை தன்னஞ் சாரற் றடவரை முனிவ சபிப்பக்
கமழ்கடாக் கலுழி தூங்குங் கருங்கவுள் வேழ மாகி
உமிழ்கனற் றிகிரி மாய னூலவிலவீ டுற்றா னன்றே"—எனபதனானுணர்க.

(இ - ள்) அப்பொழுது அகலிகை வலிய சிலைவடிவாயினள் அந்த அக லிகையின் விர்த்தாந்தத்தைக் கேட்டிருந்தும், பூமியிலுள்ளோ அக்கினி சாட்சியாகக் கையைப்பிடித்த கணவர்களைப் பிழைசெய்யும் மாதர்களுக்கு நன்மைகளை யெடுத்துக் கூறியும் வண்மைதங்கிய அதனப்யன் யாதாகும்? எ - று.

நால் நிலம்—குறிஞ்சி - முல்லை - மருதம் - நெய்தலென்பன (௯௨)

அடம்பு வேய்ந்தவர்க் கன்பனு மருந்தவன் மனையை
யிடும்பை மூழ்குமா சபித்தமை யிலஙிருந் தறிந்த
கடம்பெய் வாரணன் செய்வினை கருத்தினை யாப்பக்
குடம்பை யாப்புறு முலண்டெனப் புகவிடங் காணான்

(இ - ள்) அடப்பமலரை யணிந்த சிவபெருமானுக்கு அன்பராகிய அருந் தவஞ்செய்த கவுதமமுனிவர் தம் மனைவியாகிய அகலிகையை (இவ்விதமாக)த் தன் பத்தில் மூழ்கும்படி சபித்ததை வீட்டினுள்ளேயிருந்து தெரிந்த மதநீரைச் சொரியும் (ஐராவதமென்னும் வெள்ளை) யானையையுடைய இந்திரன் தான்செய்தகுற்றம் மன தைப்பந்திக்க, கூட்டைக்கட்டும் உலண்டுபோலப் புகலிடம் (எங்கும்) காணாதவ னாய் எ - று.

உலண்டு - கோற்புழு அல்லது சிலந்தியெனக (௯௩)

கடலின் மூழ்கினுங் குன்றிடை யொளிப்பினுங் காய
முடலவி ராயுயிர் சுடுவதே போலுமவன் சினமு
மடலை யாக்குமே யெனவழி கின்றவ னுங்கு
முடலை யாக்கையின் பூஞையாய் வெளிக்கொள முயன்றான்.

(இ - ள்) சமுத்திரத்திலே முழுகினாலும், மலையிலொளித்துக்கொண்டாலுங் காமமானது உடலிற்கலந்து உயிரைச் சுடுவதையேபோல, (கவுதமமுனிவருடைய) வலிய சாபமானது சாம்பர் செய்யுமேயென்று நெஞ்சழிகின்றவனாகி, அப்பொழுது முருட்டுத் தேகத்தையுடைய பூனையாகி வெளியேசெல்ல யத்தனித்தான் எ - று

பூஞை - பூனை

கடலின் மூழ்கினுங் குன்றிடை யொளியினுங் காமஞ்சுடுமென்றதை,

நாலடியார் - பிறர்மனை நயவாமை

'ஊருள் ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகு—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
யொளிப்பினுங் காமஞ் சுடும்''—என்பதனுணர்க (௯௪)

ஆற்றன் மாதவ னலமரும் விலாளத்தைப் பார்த்தித்
தோற்ற மானவ னிந்திர னென்றதுணிந் தியார்நீ
சாற்று போகலை யென்றலுந் தனதுருக் காட்டி
யேற்ற மாகிய வுரமெலா மிழந்துநின் றனனால.

(இ - ள்.) வலிதங்கிய பெருந்தவமுடைய கவுதமமுனிவர் வருந்துகின்ற பூனை யைப்பார்த்து, இவ்வடிவாக வருபவன் இந்திரனென்று தீர்மானித்து, நீ யாவன்? சொல்! போகாதே! என்கூறவும், (இந்திரன்) தன் வடிவத்தைக் காண்பித்து, உயர்வாகிய வலிமைமுற்றும் போக்கி [எளியனாய் அடங்கி] நின்றான் எ - று (௯௫)

நின்ற வாசவன் முகத்தினை நெடுந்தவ னோக்கி
யின்று சாம்பர்செய் திடுகுவ னிந்திர னென்
றொன்று வேட்டுவந் தாயகத் துடன் முழுவது மியோனி
நன்று மேவுக வெனப்பெருஞ் சாபநாட் டினனால்.

(இ - ள்) பெருந்தவசியாகிய கவுதமமுனிவர், (அவ்வாறு) நின்ற இந்திரன் முகத்தைப்பார்த்து, இப்பொழுதே யுன்னைச் சாம்பராக்குவேன் இந்திரனாயிருக்கின்றாய் (தேவலோகம்பாழாகுமேயென்று விடுத்தேன்) பெண்குறியொன்றை விரும்பி வந்த உனக்குத் தேகமுழுவதும் (பெண்குறிகள்) நன்றாகப்பொருந்துகவென்று பெருஞ்சாபமிட்டனர் எ - று. (௬௬)

அளிந்த தீங்கனி வளிபொர வவனிவீழ்ந் தாங்குத்
தெளிந்த மாதவன் செப்பிய சாபமே வுதலும்
விளிந்த வாவியன் விளைவினை நினைதொறு நெஞ்ச
நெளிந்து தாங்குறாத் துயரொடு நீங்கிய வலாரி

(இ - ள்) பழுத்த மதுரமான பழமானது காற்றுவீசுதலால் நிலமிசை வீழ்ந்தாற்போல, தெளிவமைந்த கவுதமமுனிவர் கூறிய சாபமொழிவந்து பொருந்தவும், உயிரொழிந்தவன்போன்று நிகழ்ந்ததை நினைக்குந்தோறும் மனநடுங்கித் தாங்கமுடியாத துன்பத்துடன் அவ்விடம்விட்டுப் பிரிந்த இந்திரன் எ - று

இதுமுதலிரண்டு செய்யுள்களொரு தொடர்

இந்திரனை வலாரி யென்றது,

பூர்வம் வலனென்னுமசுரன் பெருந்தவஞ்செய்து ஒருவராலு மிறவாமையும் ஒருவேளை யுடலொழிய நேரின், தன்தேகம் நவரத்தினங்களாதலையும் வேண்டி வரம்பெற்றுத் தேவர்களைத் துன்புறுத்தி வருகையில், இந்திரன் அவனுடன் போர்புரிந்து வெல்லும் ஆற்றலில்லாது, இவனை வஞ்சகமாய்ச் செயிக்கவேண்டுமென்று கருதி, வலாசுரனே! உன் வல்லமையை மெச்சினேன் நீ வேண்டியவரத்தைக் கேள், கொடுப்பேனென்ன, வலன் இந்திரா! ஈசனளித்த வரமெனக்கிருக்கின்றது. உன்னிடத்திலொன்றும் வரம்பெறவேண்டிலேன். நீ கொடுக்கும் வரமும் நீ பெற்ற வெற்றிபோலவே யிருக்கும். வேண்டாம் நீ யென்னிடம் பெறத்தக்க வரங்களிருப்பின் கேட்க தடையின்றிக் கொடுப்பேன் கொடேனாயின், யுத்தபூமியிற் றோற்றோடிய பழியை யடைவேனென்ன, இந்திரன் இதுவே நல்லசமயமென்றுட்கொண்டு, நீ சுத்தவீரனாய்ச் சொல்லிய சொல்லைத் தவறாதவனாயின், யான் கைலயங்கிரிச்சாரலில் யாகஞ்செய்யப் போகின்றேன் அப்பொழுது நீ யாகப்பசுவாகவருகவென, வலன் தான் புகழுடம்புடன் நவரத்தின வுடம்பும் பெறுதல்கருதி, அவ்வாறே பசுவாகி வர, இந்திரன் கொன்றனனென்பது சரிதமாகலின், இதனை,

திருவிளையாடற்புராணம் - மாணிக்கம்விற்றபடலம்.

"ஈறிலா னளித்த நல்ல வரமெனக் கிருக்க நின்பால்
வேறியான் பெறுவ துண்டோ வேண்டுவ நினக்கியா தெண்பாற்
கூறுதி விழைவ தின்னே கொடுக்கல னாகி னின்போற்
பாறுவீழ் களத்திற் பட்ட பழிப்புகழ் பெறுவ னென்றான்"—எனவும்,

"மாதண்ட வலவன் மாற்ற மகபதி கேட்டு வந்து
கோதண்ட மேருக் கோட்டிக் கொடும்புரம் பொடித்தான் வெள்ளி

எல்லோரும் முயற்சிசெய்து அழிப்பார்களென்றால், பூமியில் நாடோறும் பாவஞ் சம்பாதிப்பவர்களுக்கு எழு பிறவிகளிலும் அப்பாவம்கழுமோ? (அகலாது.)

கடவுளர் குருவுக்குக் கவுதமருபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கருஉச

---

# இந்திரனுபதேசம்பெற்றபடலம்.

---

கவுதம னருள்பெறுங் கடவு ளார்களுஞ்
சவலையின் மதிமிகு தகனி யப்பெய
ரவனும்மென் மொழிப்படி யடுத்து மேருவைத்
தவழ்திரை மாமடுச் சார்ந்து கூவுவார்

(இ - ள்) கவுதமமுனிவர் கிருபையை யடைந்த தேவர்களும், மயக்கமில்லாத அறிவுமிக்க பொன்னின் பெயர்வாய்ந்த பிரகற்பதிமுனிவனும் என்சொற்படி மேருமலையை யடுத்து, தவழ்கின்ற அலைகளையுடைய மகாமடுவைச்சார்ந்து (பின்வருமாறு) கூப்பிடுவார்கள் எ - று. (க)

ஓஓச் சதக்கிருது வேயும்பர் வேந்தனே
யோஒ வயிராணி யினனுயிர்க்குத் தோழனே
யோஒ தயித்தியர் குலமொறுக்கும் வீரனே
யோஒ மகவான் வெளியுறுதல் வேண்டுமே

(இ - ள்) ஓஓசதக்கிருதுவே! தேவர்களுக்கரசனே! ஓஒ இந்திராணியின் இனிய உயிர்த்தோழனே? ஓஓ தயித்தியர்குலத்தைச் சங்கரிக்கும் வீரத்தன்மையுடையவனே! ஓஓமகவானே! (நீ) வெளியேவருதல் (எங்களுக்கு) வேண்டியது எ-று.

சதக்கிருது - நூறு அசுவமேதஞ்செய்தவன், சதம்=நூறு, கிருது=யாகம். மகவான் என்பதில் மகம்=யாகம் (உ)

வெச்செனச் சபித்துனை விடுத்த மாதவன்
பொய்ச்சமில் கழன்மலர் போற்றி நின்னுளத்
தச்சம் தறுமவ னருளொ டெய்தினு
நச்சிய நாரதர் தாமு நண்ணினார்.

(இ - ள்) கோபித்து உன்னைச்சாபமிட்டனுப்பிய பெருந்தவசியாகிய கவுதமமுனிவருடைய பொய்மையில்லாத திருவடித்தாமரையைத் துதித்து, உன்மனதிலுள்ள பயமொழியும்படி அவரருள்பெற்றடைந்தோம். (யாவரும்) விரும்பிய நாரதமுனிவரும் வந்திருக்கின்றனர். எ - று (௩)

அவ்வவர் புரிபிழை யகத்தி ராவகைத்
தவவெளி யுரைத்திடிற் றக்க மேதையோர்
கவலையு முடனற்றக் கழுவு வாரதோ
அவ்வவ துரைத்திடா தொளிப்பின் மன்னனே.

(இ - ள்) அவரவர்செய்த குற்றங்களை மனத்திலிராவகையாக அறியும்படி வெளியிட்டுச்சொன்னால், தகுதியாகிய ஞானமுடையவர்கள் (குற்றத்தையெயனறி ந்தனாலான) துன்பத்தையும் உடனே விலகும்படியொழிப்பார்கள். அரசனே! அத னைச் சொல்லாது மறைத்துவைத்தால அதிகமாகும. எ - று. (௪)

புரிநரம் புளாநதிசை பொழியும வீணையின்
விரிபுகழ் நாரத முனிவா வேறுறும
பெரியவ ரிவாமுனம பேசி நினபிழை
பிரிவது செயலினிப பேணத தககதே.

(இ - ள) முறுககமைநத நரம்புகளைததாண்டி இசை (மழை)யைபபெயயும வீணை(யாகிய மேகததினை) உடைய பரநதகீாததிவாயநத நாரதமுனிவா வேறாகவரும பெரியவா (ஆதலின்) இவாமுனனே உனனுடைய குறறததைசசொலலி அதனை யொழிதலசெயவது இனிசசெய்யததககது. எ - று (௫)

உருததிரன மனறலி னுமைமதன சீரடி
யுருததத பெருவிர லுவநத நானமுக
னுருதடுதெழு பாவமு நானு மோமபினு
னுருததிரன திருவரு ளுதவப பட்டரோ.

(இ - ள்) சிவபிரானுடைய திருமண மகோற்சவததில, உமாதேவியின் சீா பொருநதிய திருவடியிலுள்ள அழகுவாயநத பெருவிரலை கானகு முகங்களையுடைய பிரமதேவன்விரும்பிசசிவகடாட்சமருளபபெறறு,சினநதெழுந்த பாவத்தையும நாணத தையுங காததனன. எ - று. (௬)

ஆதலா னீயுமின றகததி னீஙகிடப
போதுவா யீங்கெனப புலவா கூறலுஞ
சீதநீாத் தாமரைச செறிமுட டாளினின
றேதமோ டிநதிர னிமமென றெய்தினான்.

(இ - ள) ஆனபடியால், நீயும் இப்பொழுது பாவத்தினின்றும் விலகும்படி இஙகேவருவாயாகவெனத தேவாகள சொல்லவும், குளிர்ச்சிபொருந்திய நீரிலுள்ள தாமரையின முட்கள்நெருங்கிய தாளினினறு தன் குற்றததுடனே இந்திரன் விரை ந்துவந்தனன். எ - று (எ)

விண்குடி வாழ்க்கையர் வேந்தன் முநதுறப்
பெண்குறி நோக்குதல் பிழையென றேசிலர்
கண்களைப் புதைத்தனர் கவிழ்நதிட் டார்சில
ரொண்கர நாசியி னுறுவித் தார்சிலர்.

(இ - ள்.) விண்ணுலகிற் குடியிருக்கும் தேவர்கள் தமதரசனாகிய இந்திரன் (தமக்கு) நேரில்வர (க்கண்டு, அவனுடலிலுள்ள) பெண்குறிகளைக்காண்பது குற்ற மென்று சிலர் கண்களைமூடிக்கொண்டனர். சிலர் தலைகுனிந்துகொண்டனர். சிலர் ஒள்ளியகையை மூக்கின்மேலே வைத்துக்கொண்டனர். எ - று.

இந்திரன் தன்னுடலிற் பெண்குறிகளையடைந்துள்ளமை கண்ட தேவர்கள் செயலை இச்செய்யுளாற் கூறினார்.

கலாரியுஞ் செய்பிழை யுருத்து மந்திரத்
துலாவுமெஃ கறிவினு னுரைத்த மந்திரங்
கலாநிதி கண்டதோர் கயிர வம்பொரக்
குலாவிய விதிபுனி கொண்டு வந்தனன்.

(இ - ள்) இந்திரனுந் தான்செய்த குற்றத்தை (பகிரங்கமாக) க்கூறி, மந்திரத்தாலுலாவுகின்ற எஃகாயுதம்போன்ற அறிவுடைய பிரகற்பதிமுனிவன சொல்லிய மந்திரத்தை, சந்திரனைக்கண்டதோர் ஆம்பன்மலர்போல (க்களித்து)ச் சொல்லிய விதிமுறையாகப் பெற்றுக்களித்தனன். எ - று.

கலாநிதி - கலைகளுக்கிருப்பிடம், சந்திரன். (௯)

திருக்கரு மந்திரஞ் செவியி னேறலும
வருத்திய சாபமுன் மருவி னுலெனப
பொருந்திய பயனதாய்ப் புரையி னெல்லைதீர்ந்
துருத்தரும் யோனிக ளொளிர்கண் ணாயினான்.

(இ - ள்) திருத்தமாகிய சடக்கரமந்திரமானது தன்செவியிற் புகுதவும், தன்னைத் துன்புசெய்தபாவமானது முன்னே (கவுதமர்கூறிய உடனே) வந்ததுபோல, கூட்டிய பிரயோசனமுடையதாகி விரைவில குற்றத்தினின்று விலகி, உருவமைந்த பெண்குறிகளெல்லாம பிரகாசிக்கின்ற கண்களாக மாறப்பெற்றனன எ - று.

கவுதமரிட்ட சாபம் உடனே தொடர்ந்தாற்போல, பிரகற்பதியினிடஞ் சடக்கரோபதேசம் பெற்றவுடனே அககுறிகளெல்லாம் கண்களாயினவென்பது கருத்து.

அருந்தவ ரன்றெடு மயிலகொள் வேலனே
திருந்திய வாசிகள் செப்ப விண்ணவர்
சொரிந்தனர் மலர்கடுந் துபிமு ழங்கின
வரமபையர் நிரைநிரை யாகி யாடினார்.

(இ - ள்) கூர்மைபொருந்திய வேற்படைதாங்கிய உருக்குமாங்கதராசனே! என்னுடன அரியதவஞ்செய்த முனிவர்கள் (பலர்) திருத்தமாகிய ஆசிமொழிகளகூற, தேவர்கள் மலர்மாரி பெய்தனர். தேவதுந்துமி முழங்கின தேவதாசிகள வரிசை வரிசையாகி நடனஞ்செய்தார்கள். எ - று. (௧௦)

கின்னரர் பாடினர் கிளர்ந்த மாகத
ரின்னிசை புகழ்ந்தன ரிறைஞ்சி யேனையோர
நின்னையில் லாதயர் நிலவி லாவிர
வன்னையி லாமக வாயி னேமென்றார்.

(இ - ள்) கின்னரர்கள் பாடினார்கள் சொல்லிய மாகதர்கள் இனிய கீர்த்தியைப் புகழ்ந்தார்கள். பிறர் இந்திரனைப்பணிந்து, ஐயனே! உன்னையில்லாமல, சந்திரவொளியிலலாத இரவும், தாயில்லாத குழந்தையுமானோ மென்று சொன்னார்கள் எ-று.

மாகதர் - அரசனுக்கும் வைசியமாதுக்கும் பிறந்து பிறர் வீரத்தைப்பாடுவோர்.

அவ்விய மகன்றநெஞ் சறிவர் தங்களை
யொவ்வொரு முனிவரே யுலப்பி லும்பரா
செவ்வகைப் பெருமையும் வியந்து ளீரெனத்
தெவ்வடு வசிரன செப்பித் தாழ்ந்தனன்.

(இ - ள்) பொறுமையொழிந்த மனத்தையுடைய முனிவர்களை நோக்கி, ஒவ்வொரு முனிவரும், கெடுதலில்லாத தேவர்களுடைய எவ்வகைய புகழையும் பொருந்தியுளீர்களென்று, பகைவரைக்கொல்லும் வச்சிராயுதமேந்திய இந்திரன் (உபசாரவார்த்தை) கூறிப்பணிந்தனன். எ - று. (௧௩)

தேவரை நோக்கிமெய் செப்ப லுற்றனன்
ருவறு கவுதமன் சாபந் தீர்வகை
யாவது புரிந்தனீ ரஃதி யாகிலேன்
மேவுகைம் மாறுமக் கில்லை விண்ணினும்.

(இ - ள்) தேவர்களை நோக்கிச்சொல்லினான். கெடுதலற்ற கவுதமமுனிவனிட்ட சாபமொழியும்வகையாக யாதுசெய்தீர்கள்? அதனை யறிகிலேன். உங்களுக்கு (இவ்விடத்திலேயன்றி) தேவருலகத்திலும் பொருந்திய பிரதியுதவி (செய்வதற்கொன்று) கிடையாது. எ - று. (௧௪)

பண்டைய முகவிழி பாயி ருட்பட
முண்டக நாளத்தின் முழுகி னேற்கொளி
மண்டிய வாயிர மலர்க்க ணல்கினீர்
கொண்டன னலமெலாங் குளிர்ந்த வானுளீர்.

(இ - ள்) முகத்திலிருந்த பழமையாகிய விழிகள் மிகவும் இருளப்பட, தாமரைத்தண்டிலே ஒளித்துக்கொண்ட எனக்குப் பிரகாசம்பொருந்திய (தாமரை) மலர் போன்ற ஆயிரங்கண்களைக் கொடுத்தீர்கள் குளிர்ச்சிபொருந்திய வானுலகிலுள்ளவர்களே! (உங்களால்) நன்மை முழுவதையுங்கைக்கொண்டேன் எ - று. (௧௫)

இன்னுமே ரம்பனின் னருள்பெற் றின்புற
நன்னர்மா தவங்கணற் றலத்தி னாற்றிய
பின்னர்வா னுலகினைப் பேணு வேனலான்
முன்னர்நான் பேணுதன் முன்னி லேனரோ

(இ - ள்) இன்னும், விநாயகக்கடவுளுடைய இனிய திருவருளைப்பெற்று இன்பமடையும்படி நல்ல சிறந்த தவங்களைப் புண்ணிய தலத்திலே செய்தபிறகு, தேவலோகத்தை யரசுசெய்வேனல்லாமல், (அதற்கு) முன்னே நான் அரசுசெய்வதைக் கருதினேனல்லேன். எ - று (௧௬)

நீயிர்க ளனைவரு நெடிய வானிடை
மேயினர் வதிமினோ விரைந்து கற்பக
மாயிரும் பொருள்சிலர் வந்து நல்குகென்
றாயிரம் விழியினா னவரைப் போக்கினான்.

(இ - ள்) நீங்களெல்லோரும் பெரிய தேவலோகத்திற் பொருந்தி வாசஞ் செய்யுங்கள் (உங்களில்) சிலர் மணமமைந்த கற்பகத்தருகொடுத்த சிறந்த பெருமை வாய்ந்த பொருள்களைக் கொண்டுவந்து கொடுங்களென்று, ஆயிரங்கண்களையுடைய இந்திரன்கூறி, அவர்களைச்செல்லவிடுத்தனன். எ - று. (௧௭)

இந்திரனுபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - [illegible].

# இந்திரன்பூசித்தபடலம்.

இதமபுரியுந தேவர்களு மிருடியரு நீஙகியபின
கதமபவனத திடையேகிக காவலபுரி விண்ணவர்கோ
னதம்பலவுந தீபலவு மொன்றுறுற போனவையின
சிதமபுதெறு மொருதீரத்தந திகழ்தரககண் டதையுடுததரன.

(இ - ள்) (அமரருலகைக்)காவல்புரியுந் தேவராசனுகிய இநதிரன், நனமை யைச்செய்யுந் தேவாகளும இருடியர்களும(தனனைவிட்டு)நீஙகிசசெனறபிறகு, கதம்ப வனததிற் செனறு, நதிகளபலவுந தீககள பலவும ஒனறுசோநதாறபோல, குறறத் தின்றொகுதியை யொழிக்கும ஒருதீாததம் விளஙகுவதைப பார்தது, அதனைசசமீபித் தனன எ - று.

சிதமபுதல - குணமின்மை (க)

அந்தடததி லமராதரு மாகாய கங்கையுஞ்சோத
துததமனத தடககரையி னொளிரபளிககா லயநிருமித
ததனையைங கைககளிற்றை யாகமததின வழிநிறுவி
யெத்தகைய பொருளகளினு மினிதுறபபூ சைசகளாற்றி.

(இ - ள) புனிதனுன இநதிரன அந்தத தடாகததிலே, தேவாகள் கொணடு வந்த ஆகாயகஙகையையுஙகூட்டி, அததீாததக கரையிலே பிரகாசிககினற பளிங்குக் கல்லால திருவாலயநிரமிததது, (யாவாககுந) தநதையும ஐநதுகரங்களையுடைய யானை முகக்கடவுளுமாகிய விநாயகப்பெருமானை ஆகமமுறையாகப் பிரதிட்டைசெய , எவ் வகைபபட்ட பொருள்களாலும இனிதாகப பூசைகளசெயது. எ - று.

இதுமுதல விரண்டு பாடல்கள் குளகம் (உ)

'வாயிலினிந தியமவழுங்கா வகையடக்கி நாசிநுனி
காயொளிககட கடைநிறுவிக கவின்றருமா தனம்வைகி
யாயிரமாண டாறெழுத்தை யனுட்டிப்பி னெடுங்கணித்தான்
மாயிருமா மறையறியா மதக்கைமுக னடிநினைநதே

(இ - ள்.) சிறந்தபெரிய மகாவேதஙகளறியாத மதஞ்சொரியும யானைமுக முடைய விநாயககடவுள் திருவடியைச சிநதிததது, வாயிலின வழியே இநதியஙகளைப் புறஞ்செல்லா தடக்கி, நாசிமுனையிலே பிரகாசிககினற ஒளியையுடைய கட்கடையை நிறுத்தி, அழகுசெய்யும ஆதனத்திற் பொருந்தி ஆயிரவருடகாலஞ் சடசககரமநதிரத் தை அநுட்டிப்புக் கிரமமாகக் கணித்தனன். எ - று. (ங)

நித்தலும்பூ சனையியற்றி நிராகாரத தொடுவைகிப
பூத்தியினுற றியானித்துப் பயனறருமந திரங்கணித்துச
சுத்தவுளத தினனுகிச் சுராரசன் றலமபுரிய
வத்திமுகன் பேரருள்கூர்ந் தவனெதிரே தோன் றினன்மாதோ.

(இ - ள.) தேவராசனுகிய இந்திரன் நாடோறும் (இவ்வகையாகப்) பூசை செய்து, ஆகாரமில்லாமலிருந்து பத்தியுடன் தியானஞ்செயது, பயன்தரததக்க மநதி

ரதனைக்கணித்து, புனிதமான மனமுடையவனுகித் தவஞ்செய்ய, யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுள் பேரருள் மிகுந்து அவ்விந்திரனுக் கெதிரே தரிசனந் தந்தருளினர். எ - று. (ச)

தவளமதி புரைநிறமுந் தசதிசைபோய்த் தொளிர்தேசுங்
கவளமத கரிமுகமுங் கதிர்மணிமா லிகைவளைந்த
துவளுமொரு புழைக்கரமு நாரோனான்கு மணித்தண்டைத்
திவள்சதங்கை நூபுரப்பொற சேவடியு மனைஞானும்.

(இ - ள்) வெள்ளியசந்திரனையொத்த நிறமும், பத்துத்திசைகளையு மூடிப பிரகாசிக்குமஒளியும், கவளங்கொள்ளும் மதயானையின் முகமும், பிரகாசிக்கின்ற முத்துமாலையை வளைந்துத் துவள்கின்ற ஒப்பற்றதுதிக்கையும், நான்குதோள்களும, இரத்தினதண்டையும் பிரகாசிக்கின்ற சதங்கைமாலையும் பாதசரமு மணிந்த அழகிய திருவடியும, (பொன) அனைஞானும எ - று.

கவளம் - யானைகொள்ளுமுணவு. அல்லது வாய்கொண்டவுணவு

இதுமுத லிரண்டு பாடலகள ஒருதொடர் (ரு)

அங்கதமும் வரைமார்பி னணிகருமுப் புரிநூலும்
பொங்கொளிசித் திலவடமும பொலிதவர கனதொடையுஞ
செங்கதிரி னிருள்சீக்குங குண்டலமு நிகழ்முடியுந
தங்குருவி னெதிர்நின்ற தலைவனைவா சவன்கண்டான

(இ - ள்) அங்கதமும், மலைபோன்ற மார்பிலணிந்த உபவீதமும், ஒளிமிக்க முத்துமாலையும், அழகிய இரத்தினமாலையும செவ்விய கிரணங்களையுடையசூரியனைப் போல இருளையகற்றுங் குண்டலங்களும், பிரகாசிக்கின்ற கிரீடமும் (கொண்டு)தமது குருவாகிய பிரகற்பதிமுனிவரைப் போல எதிரேநின்ற விநாயககடவுளை இந்திரன் தரிசித்தனன எ - று

அங்கதம - தோளணி. (சு)

மிக்கபெருங கருத்கன்பும வெருவுதலு முடன்றோன்றத்
தொககிருகை சிரமேறத் துண்ணெனவா தனத்தெழுந்து
தககமுறை யால்வணங்கித் தண்டமுமிட் டெதிர்நடித்துப
பொக்கமற வலம்வந்து புகழெடுத்துப் பாடினுன்.

(இ - ள்.) மேம்பட்ட பொருங்கருத்தும் ஆசையும் அச்சமும் உடனே உண்டாக, இருகரங்களுஞ் சேர்ந்து சிரமிசையேறத்துணுக்குற்றுஆசனத்தினின்றெழுந்து, தககமுறைப்படி பணிந்து (சாஷ்டாங்க) தண்டஞ்செய்து, எதிரே (ஆனந்தமேலீட்டால்) நடனஞ்செய்து, குற்றமகலப் பிரதக்கிணஞ்செய்து (அவ்விநாயகருடைய) கீர்த்தியை யெடுத்துப் (பினவருமாறு) பாடினுன் எ - று. (எ)

வேறு.

அறிவாய் விளங்கு மொளிபாகி யெங்கு மசைவற்று நின்ற நிறைவாய்க்
குறியாதி யின்ப முதலீ றிலாத குறைவற்ற வின்ப மயமாய்ச்
செறிவான நீரி னிழல்போல நின்ற திறலோரை யாரு மவர்வேன்
வெறுஞான மான திருமேனி கொண்டெவ் விழிகாண முன்னர் வரலாம்.

(இ - ள்) அறிவாகி விளங்குந் தேஜோரூபியாய், எல்லிடத்திலுஞ் சலன மின்றிநின்ற பூரணமாய், குறி முதலிய இன்பமுதன் முடிவில்லாத குணங்கற்ற இன்ப மயமாகி, நெருங்கிய நீரிலநிழல்போலநின்ற வல்லபமுடைய தேவரீரை, சுத்தஞான மான திருமேனியோடு என்கண்கள் காணும்படி முன்னே யெழுந்தருளியதனால், அடியேனும் பிரத்தக்கணஞ் செய்வேன் எ - று (௮)

இருண்மூழ்கு கணணின மலகேவ லத்தி னிதமின்றி நின்ற வுயிர்கட்
குருவாதி மூன்று முன்முயத்த வற்றி னுளதாம விகார வகையா
லிருவேறு கன்ம மிசைவித் தருத்து மிறையோனை, யானு மொழிவேன்
வெருண்மாயை நீத்த திருமேனி கொண்டென் விழிகாண முன்னா வரலால்.

(இ - ள்.) (அஞ்ஞானமாகிய) இருளின்மூழ்கிய கணகளின மலகேவலத்தி னிதமில்லாமல் நின்ற உயிர்களுக்கு உருவமுதலிய மூன்றையுமுன்னளித்து அவற்று ளுளதாகிய விகாரவகையால, வேறாகிய இருவகைக் கன்மங்களையுமிசைவித்து நுக ரச் செய்கின்ற தலைவராகிய கணேசப்பெருமானை, மயக்கம் பொருந்திய மாயையை யொழித்த திருமேனியோடு என் கண்கள் காணும்படி முன்னே யெழுந்தருளியதனால், அடியேனும் (இவ்வகையினரென்று அவரைக்) கூறுவேன் எ - று. (௯)

வாதங் கடந்து பலமாயை கன்ம வகையுங் கடந்த வைசெயு
மேதங் கடந்து பொருளொன்று மின்றி யெழுகின்ற மம்ம ருயிரின்
போதங் கடந்து துரியங் கடந்த பொருளோயை யானு முணர்வேன்
வேதங் கடந்த திருமேனி கொண்டென் விழிகாண முன்னா வரலால்.

(இ - ள்) வாதஞ்செய்தலைக் கடந்து, பலவகைப்பட்ட மாயாகன்மவகைகளை யுங்கடந்து, அவைசெய்கின்ற துன்பங்களையுங் கடந்து, ஒருபொருளுமில்லாமல் தோ ன்றுகின்ற மயக்கம்பொருந்திய உயிரின் தற்போதமுங்கடந்து, துரியத்தத்துவமுங் கடந்த பொருளாயுள்ள தேவரீரை, வேதங்கடக்கப்பட்ட திருமேனியைக்கொண்டு என்கண்கள் காணும்படி என்முன்னே யெழுந்தருளியதனால், அடியேனும் (இவ் வகையினரென்று) அறிவேன் எ - று (௧௦)

வெங்கட களிற்றின் மகவான் றுதித்து விழிநீ ருகுத்து ளுருகச்
சிங்கஞ் செலுத்தி யெதிர்வந்து நின்ற திகழ்முக்கண் வேழ முகவ
னிங்குற்று நீசெய செபமாதி யான மிதயங் களிக்க வமினிப
பொங்குற்ற காதல் வரம்வேட்ட தின்று புகலென்ன வோது மவனே.

(இ - ள்.) கோபக்கண்களையுடைய (ஐராவதமெனனும்) யானையை வாகன மாகக்கொண்ட இந்திரன் (இவ்வாறு) தோத்திரஞ்செய்து, கண்ணீர்சிந்தி மனமுருக, சிங்கவாகனமூர்ந்து அவனெதிரேயெழுந்தருளியிருந்த விளக்கம் பொருந்திய திரி நேத்திரங்களையுடைய விநாயகக்கடவுள் நீ யிங்கேவந்து செய்த செபத்திற்குஞ் சிறந்த தியானத்திற்கும் மனங்களித்தோம். இனி அதிகரித்த காதலையுடைய நீ விரும்பிய வரத்தை யிப்பொழுது கூறுகவென, அவ்விந்திரன் கூறுவான். எ - று (௧௧)

யோகத்தி னுலு முணரப் படாமை யுயர்ஞான யோக நிலையோர
பாகத்தி னுன்று படுகின்ற பாத பதுமங் கெடாது புரியும்
யாகத்தி னுன பயனுந் திறக்க மெனியேற் களித்தி யதுவும்
போகத்தின் மல்க விடரின்றி நின்று புகழோடு மாளும் வகையில.

(இ - ள்) யோகத்தினாலும் அறியப்படாமல் உயர்ந்த ஞானயோக நிலையிலுள்ளவர்கள் பாதத்திலே ஒன்றுபடுகின்ற பாததாமரை, நீ காத்துச் செய்யும் யாகத்தினாலான பயனாகிய சுவர்க்கலோகத்தை அடியேனுக்குக் கொடுக்கவேண்டும். அதுவும் போகத்தின் மிகும்படி துன்பமில்லாமலிருந்து, கீர்த்தியுடன் அரசுசெய்யும் வகையோடு (அநுக்கிரகிக்கவேண்டும்) எ - று (கஉ)

முன்னை யெனக்கு மறையோனு மிக்க மொழியா லெழுத்து மனுவைத்
தன்னு ணரத்தி னுரைசெய்து நீயித் தனிமந் திரத்தை மொழியின
மன்னுது விண்ணி னரசாட்சி யென்று வழிவற புறுத்து மகனைப
பின்னை மறந்து பிழையிற் படர்ந்து பெரிதான துன்ப னவினேன்.

(இ - ள்.) சொல்லுகின்ற இந்தச் சடக்கரமந்திரத்தைப் பிரமதேவனும் முன்னேயெனக்குத் தன்னுடைய ஆணையாலுபதேசித்து, நீ இந்த ஒப்பற்ற மந்திரத்தை விதித்தால் தேவலோக வரசாட்சி உனக்குப்பொருந்தாதென்று வற்புறுத்திக் கூறியதைப் பிற்காலத்திலே மறந்து, குற்றத்திற்சென்று பெரிதான துன்பமடைந்தேன் எ - று

பொன்னை னுரைப்ப விடாமுற றகன்று புகழாயி ரங்க ளுடையே
னின்னு னெழுத்தை யுரைசெய்து பூசை நெடிதாற்றி வந்த பரிசு
னுன்னுத தாகி யுரையாத தாகி யுறவிற் படாத பொருணீ
முன்னுகி நின்ற வருளா லெனக்கு முடியாமை யாவ துளதோ.

(இ - ள) (எனகுருவாகிய) வியாழபகவான உபதேசிக்க, துன்பமுழுவதுமகன்று, புகழத்தக்க ஆயிரங்கண்களையடைந்த அடியேன் தேவரீருடைய சடக்கர மந்திரத்தைக் கணித்துப் பூசையை மிகுதியாகச்செய்துவந்த தன்மையால், நினைக்கப்படாததாகியும் சொல்லப்படாததாகியும் பரிசிக்கப்படாததாகியுமுள்ள பொருளாகிய தேவரீர் என்முன்னுகி யெழுந்தருளிய, திருவருளால், எனக்கு முடியாதது யாதொன்றிருக்கின்றது ? எ - று. (கச)

கேடா மெனைக்கு முறுகா ரணங்கள் கிழவோய் பதத்தி னிறையன்
பாடாமை யாகு மதனு லெனக்கு னடிவாரி சத்தி னுழுவல
வீடாமை வேண்டு மதுவன்றி யுள்ள விழைவுய்க்கு மிங்குன் வடிவுக்
கோடாத சிந்தா மணியென்னு நாம முறலவேண்டு மூர்க்கு முருக.

(இ - ள்.) துன்பமாகிய வெல்லாவற்றிற்கும் பொருந்திய காரணங்கள், யாவுமுடைய தேவரீரது திருவடியில் நிறைந்த அன்பைச் செலுத்தாமையாகும், அதனால் அடியேனுக்குத் தேவரீருடைய திருவடித்தாமரையிற் பக்தி அழியாமல் (கொடுத்தருள) வேண்டும் அதுவல்லாமல், மனதில் விரும்பியவற்றைக் கொடுக்கும் இவ்விடத்திலுள்ள தேவரீர் திருவுருவத்திற்குச் சிந்தாமணிவிநாயகரென்னும் திருநாமமுண்டாகவேண்டும். அப்பெயரே [சிந்தாமணிநகரென்று] இக்கரத்திற்கு முண்டாகுக. எ-று.

இந்த்ரன் றனக்கு மிதுபோற் சிறக்க நிகழூர்க் கதன்றி யிவரு
[illegible] கடம்ப கவென்ற பேரு முறுகிற்க ஞரில் [illegible]
[illegible]
[illegible]
(இ - ள்.) [illegible]
[illegible]

கவடடுக கானிற கதழநதமான்
சுவடடுத தாரிது ரீஇயது
சவடடி ஞயககிது சாறறென
குவடடுத தோளவ கூறெனறார

(இ-ள்) கொம்புகளையுடைய வனத்தில விரைநதோடிய மானின சுவட்டு வழியே (தொடாநது) தேடி, அதனை வேட்டையாடிய வனககு இததீமைவிளைநதது யாதுகாரணம? மலையையொதத தோளையுடைய உருசகுமாஙகத ராசனே! கூறுக வென்றாகள் எ-று.

சவடு - மரககொமபு சுவடு - காலடி குவடு - மலை (௨)

வெற்றி வீமன விறன்மக
னுறற துறறவாக கோதினு
லறற மிலபொரு ளாஙகுறப
பறறி யேகினன பானமையால

(இ-ள்) வெறறிவாயநத வீமராசனுடைய வலிதஙகியமகனாகிய உருககுமாஙகதராசன நடநத விாததாநதததைத தனனிடம வநதவாகளுககுககூறினன குறறமிலலாத உணமைபபொருள ஆஙகடைதலால், அதனைத தகுதியோடு கடைபபிடிததுச சென்றனன எ-று (௩)

பொதுமபு சூழநதுபு கைநதெரி
வெதுமபு வெஙகடம விணடுதேன
றதுமபு பூமபொழில சாாநதவக
கதமப மாநகா கணடனன.

(இ-ள்) பொதுமபுசூழநது புகைநது தீயானது சுடுகின்ற கொடிய காட்டைககடநது தேனறுளிககும மலாசசோலை சோநத அநதச சிறநத கதமபநகரததைத தரிசிததனன (உருககுமாஙகதன) எ-று

பொதுமபு - மரபபொநது (௪)

தீாததா போறறுஞசிந தாமணித
தீாததனைத தெரிசிததுநோய
தீாததல செயயுஞசிந தாமணி
தீாதத நீாபடிந தாடினன.

(இ-ள்) புனிதமானவாகள் துதிசெயயுஞ சிநதாமணிவிநாயகரைத் தரிசித்து, (எலலா) நோயையுமொழிததருளசெயயுஞ சிநதாமணி தீாததநீரிலே மூழ்கி ஸநானஞ்செயதனன (உருககுமாஙகதராசன்) எ-று. (௫)

கருக்கி வெண்ணிறங் காட்டிமெய்
முருககு நோய்கெட முனபெய
ரிருக்க நலவெழி லெயதினு
னுருக்கு மாஙகத னுததமன.

(இ - ள்.) கருக்கச்செய்து வெண்ணிறத்தைக் காட்டி உடலைத் தின்று செய்யுந் தொழுநோய் கெடவும், [உருக்குமாங்கதனென்னும்] பழையபெயர் (நிலைபெற்று) இருக்கவும், உருக்குமாங்கதனாகிய உத்தமன் நல்ல அழகை யடைந்தனன் எ - று (௬)

செயிர றுக்குஞ் சிந்தா மணிப்
பெயர்வி நாயகர் பெய்கழற்
கயர்வி லாதமெய் யன்பொடு
மயரில் பூசைசெய் யகிஞன

(இ - ள்) குற்றத்தை யொழிக்குஞ் சிந்தாமணியென்னும் பெயரையுடைய விநாயகக்கடவுளுடைய வீரக்கழலணிந்த பாதங்களில், மயக்கமில்லாத பூசையைச் செய்தனன் சோர்வில்லாத உண்மையன்பினையுடைய வீமராசனே ' எ - று (௭)

அந்த ணாளர்க் கருமபொருள்
சிந்தி னான்றன் செவ்வியின்
வந்து ளார்கள் விமானமோ
டுந்தொ ழிற்கணத் தோர்சிலர்

(இ - ள்) வேதியர்களுக்கு அருமைப்பொருள்களை (தானமாரியாக)ச் சொரிந்தனன் அந்தக்காலத்தில் மிக்க அழகினையுடைய கணநாதர்கள் சிலர் விமானத்துடன் (அவ்விடம்) வந்தார்கள் எ - று (௮)

வேறு

அத்தலை நின்ற வேந்தற் கருங்கணத் தலைவர் சொல்வா
ரித்தலைக் கணேச குண்டத் திருமபுன மேழ்ந்து நீநன்
வித்தகக் களிற்றின் பூசை விளக்கினை யாத லாலே
வுத்தம வுனது மேன்மை யொருவர்க்கு முரைக்கொ ணாதே

(இ - ள்) அரிய கணநாதர்கள் அவ்விடத்திலிருந்த உருக்குமாங்கதராசனுக்குச் சொல்கின்றார்கள் உத்தமனே ' இவ்விடத்தில், கணேசதீர்த்தத்திலே மிக்க நீரின்மூழ்கி, திரிநேத்திரங்களையுடைய ஞானசொரூபியாகிய சிந்தாமணிவிநாயகக் கடவுளுடைய பூசையைச்செய்தனையாதலின், உன்னுடைய சிறப்பை எடுத்துச் சொல்ல ஒருவருக்கு முடியாது எ - று (௯)

கொங்கவிர் மாலைத் தெய்வதக் கோலமார் விமானமேவி
யைங்கர னுலக மெம்மோ டடைமதி யென்றார் நெடுஞ்
சிங்கவல் லேறநி னைஞர் செருக்கள முழக்குந் திண்டோட்
பைங்கழ லரசன் றோன்றல் பாதத்திற் பணிந்து சொல்வான்

(இ - ள்) மகரந்தத்தோடு விகசித்த (சற்பக) மாலையணிந்த அழகுபொருந்திய விமானத்தி லாரோகணஞ்செய்து எங்களுடனே ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமானுலகத்தை யடைகவென்றனர். வலிய ஆண்சிங்கத்தைப் போலப் பகைஞர்களது போர்க்களத்தைக் கலக்குகின்ற வலியதோள்களையும் பசியவீரக்கழலொலிக்கும் பெருமைதங்கிய தாளையுமுடைய உருக்குமாங்கதமன்னன் அதனைக்கேட்டு (அக்கணநாதர்களைப்) பணிந்து சொல்கின்றனன். எ - று

மதி - அசைச்சொல். "மியாயிகமோமதி யத்தையித்தை - வாழியமாளவீ யாழ்முன்னிலையசை" என்பது சூத்திரம் (௰)

வேறு

சின்மயசிற் குணவகண்டா காரசச்சி தானந்தன் சேர்ந்தோர் தம்மைத்
தன்மயமாக் கிடுமுதல்வன் காரணத்த னவன்றலைமை சான்ற
நன்மைதரு மருளெங்கே நானெங்கே நான்புரிந்த தவங்க ளெங்கே
யென்மனமெங் கேயெனது பிறப்பெங்கே யென்னுடைய பத்தியெங்கே.

(இ - ள்) சின்மயனும், சிற்குணனும், அகண்டாகாரனும், உண்மையறிவானந்தரூபியும், தன்னையடைந்தவர்களைத் தன்மயமாகச் செய்யும் முதற்கடவுளும், காரணத்தனுமாகிய அக்கணேசப்பெருமானுடைய முதன்மை மிக்க நன்மைபொருந்திய திருவருளெங்கே அடியேனெங்கே அடியேன்செய்த தவங்களெங்கே அடியேன் மனமெங்கே அடியேன் பிறவியெங்கே அடியேன் பத்தியெங்கே என்று.

சின்மயம் சிற்குணமென்பவற்றில், சித்=ஞானம் அகண்டம்=கண்டமில்லாதது ஆகாரம் - தேகம் சச்சிதானந்தம் சத்து+சித்து+ஆனந்தம் கணேசப்பெருமானுடைய உயர்வைக்குறிக்க "அவன் றலைமைசான்ற நன்மைதருமருளெங்கே" என்றும், தானும் தன்தவம் மனம் பிறப்பு பத்திமுதலியவற்றின் தாழ்வுகுறிக்க "நானெங்கே * * என்னுடைய பத்தியெங்கே" என்றுங்கூறினார் (கக)

பண்டுபுரி தவத்தானு மித்தடத்தி னீராடும் பலத்தினானு
மண்டர்தொழும் பெருங்கணத்தீர் நுங்கடரிசன மடியேற்காயிற் றென்னை
மண்டுபெருந் தவமாற்றிச் சாருகா சினியோடு மருவி வீம [னென்னுந்
னொண்டனையா யுயிர்த்தனனவே றிலையவனை யொழித்தெவ்வா றுறுவே

(இ - ள்) பூர்வத்திற்செய்த தவத்தினாலும், இக்கணேச தீர்த்தத்தில் மூழ்கிய பலத்தினாலும் உங்களுடைய தரிசனமெனக்குக் கிடைத்தது தேவர்களும் வணங்கத்தக்க பெருந்தவமுடையவர்களே! (எனதாயாகிய) சாருகாசினியுடன் வீமராசன் பொருந்தி நெருங்கிய பெருந்தவஞ்செய்து என்னைப்பூமியில் (மகனாகப்) பெற்றனர். (அவர்கட்குத்தந்தை) வேறொருவருமிலர் அவர்களை யெவ்வாறு விலக்கிவிடுவேனென்று (உருக்குமாங்கதன்) கூறினன் எ - று. (கஉ)

அறங்கிளரும் பெருங்கணத்தோ ரதுகேட்டுத் திருவுள்ளத் தலர்ச்சிகாட்டிக்
கறங்குதிரைப் பெருங்கடல்சூழ் கண்ணகன்ஞாலம்புரக்குங் காவலோய்கே
ணிறங்கிளர்பன் மலரணிந்த விந்தீர்த்தத் தவர்தம்மை நினைந்து தோய்ந்து
பிறங்குதருப் பணம்புரியி னவருமுடன் வருவரெனப் பேசினரால்.

(இ - ள்) தருமம் விளங்கும் பெருமைவாய்ந்த கணத்தலைவர்கள் அதனைச் செவியேற்று தமது நன்மனத்துள்ள மகிழ்வினை வெளிப்படுத்தி, மறிகின்ற அலைகளையுடைய பெரியகடல்சூழ்ந்த இடமகன்ற உலகத்தைக்காக்கும் உருக்குமாங்கத மன்னனே! கேட்பாயாக நிறம் விளங்கும் பலமலர்களையுடைய இந்தத்தீர்த்தத்திலே அவர்களைக்கருதி ஸ்நானஞ்செய்து, விளங்குகின்ற தருப்பணஞ்செய்தால் அவர்களும் உன்னுடனே வருவார்களென்று சொன்னார்கள் எ - று.

கறங்குதல் - சுழலல். (கங)

கணங்களுரைத் தமைகேட்டுக் காவலனு முடிந்தபசுந் தருப்பை வைத்திட
டிணங்குதருப் பையுமாளுய் தருப்பைமக னுமிருக் கின்றாய் வேத
னணங்குறயபப் படைத்திடப்பட் டாயாதைக குறித்துன்னை யாட்டி ஞனுங்
பிணங்குறுநன் பயனவாககுக கொடுக்கின்று யெனபபேசிய பெருநீராட்டி.

(இ - ள்) கணத்தலைவாகள கூறியதைககேட்டு, உருக்குமாங்கதனும, முடியிட்ட பசியதருபபையை வைத்து, பொருந்திய தருபபையுமாயினை, தருப்பைமகனுயுமிருக்கின்றனை, பிரமதேவனுல தனபமொழியபபடைத்திடபபட்டனை எவனா நினைதது உன்னை நீராட்டினுலும் அவாகட்குக குற்றமற்ற நலலபலனைக் கொடுக்கின்றனை யென்றுகூறி, மிகக நீராலபிடேகித்தது எ - று

"தருப்பையு மாளுய தருபபை மகனுயு மிருககின்றுய"—என்றது நீயே மூாததியும மூாததிமானுமாயுள்ளனை யென்று றபோலும . (கச)

தநதைதாய் முதலோரைக குறிததுநறுமபுனறாாடடிநதானுமாடிச
சிநதையுறு மகிழ்வோடுங கணேசர் யருளசெயத திவவுநலயா
முநதணு ளனைவியநத தீாததததை மிகபபோறறி யமல முறறுன
வநதுளாா தாமுமதி னுடனுடித தெயவவுரு மருவி ஞால

(இ - ள்) உருககுமாஙகதனும தநதைதாய முதலானவாகளைக கருதி நலல கணேசதீாததிலே மூழகி மனததினினறுநீஙகாத களிபபுடன கணாயிலேறி, தனககு அநுக்கிரகித்த தடவுகினற நலல மகிமையையுடைய நாரதமுனிவரைத தியானிதது, கணேசதீாததததைத துதிசெயது புனிதனாயினன உடன வந்தள்ள சேனை காவலா முதலியவாகளும அததீாததததில (அவவுருககுமாஙகதன) உடலமூழகி தெய்வவடிவததை யடைநதாாகள எ - று (கரு)

மறுவலுமங கினிதிருநத கணேசாதிருவடிபபூசை யயககித தேச
முறுகுவிமா னதததடுதத சேனையொடு மொருஙகேறி முடிகொணட மனன
னுறுதியொடு கவுணடினிய நகாசாாநது தானபல னுயிா தநதோாகி[தாா.
பெறுமுறையிற கொளககொடுததான சேனைகளு மவரவாநகுப பேணியீந

(இ - ள்) கிரீடமணிநத உருககுமாங்கத மனனன மீணடும அவவிடததில இனிதாக விருநத சிததிவிநாயகபபெருமானுடைய திருவடியிற பூசையைசசெயது, தனனையடுதத சேனையுடனே, ஒளிவீசும தெயவவிமானததில ஒனறுசகேறி, உறுதியோடு கவுணடின்னிய நகரததையடைநது, பெறறோா முதலானவாகளுககுத தான பலனைப்பெறுமுறையோடு பெறுமபடி கொடுததனன சேனை காவலாகளும (தஙகட்குக கட்குரிய) அவரவாகளுககு விருமபிக்கொடுததாாகள எ - று (கசு)

எம்பெருமான றிருவருளால வெவ்வேறு விமானஙகளெயத வநதப
பம்புநகர ராசாளுமவீமனமுத லோரெவரும பணிநதங கெயதி
யும்பர்தொழ வுருக்குமாங கதனோடு கணேசாதிரு வுலகஞ்சோநதாா
நமபியிசீர் வியாதமுனி யறிவாயென றலரிருநதோ னவிறறி ஞனல.

(இ - ள்) எமது பெருமானுகிய விநாயககடவுளுடைய திருவருளால வெவவேறுகிய விமானஙகள வநதடைய, அநத வளநெருஙகிய கவுணடினனியநகரததை யரசுசெயயும் வீமராசன முதலானவாகளெலலோரும வணங்கி அஙகடைநது, தேவா

கன் பணியும்படி உருக்குமாங்கதனுடன் கணேசப்பெருமானுடைய சிறந்த உலகத்தை யடைந்தாரகள மிக்க கீர்த்தியையுடைய வியாசமுனிவனே! அறிவாயாகவென்று, தாமரை மலரிலிருந்த பிரமதேவன் உரைத்தருளினன. எ - று. (கஎ)

அருந்தவத்து விசுவா மித்திரனை வீமனுற லாதி யாகத்
திருந்துமக னொடுமுத்தி சேர்ந்திடத்த வீறுகத திகழா நின்ற
பொருந்துபல சரிதமுங்கேட் டனைசோம காந்தவினிப் புகலக் கேளாய [ன்.
பெருந்தவத்துக்கிருச்சமதனுபாசனையென றுரைசெயவான பிருகுமேலோ

(இ - ள) அரியதவத்தையுடைய விசுவாமித்திர முனிவனை வீமராசன அடுத்தது முதலாகத் திருந்திய தன மகனாகிய உருக்குமாங்கதராசனுடன (அவன) முத்தி யடைந்ததீறாக விளங்குகின்ற பொருந்திய பல சரிதங்களையுங் கேட்டனை,சோமகாந்த ராசனே! இனிப் பெருந்தவத்தையுடைய கிருச்சமதனுபாசித்த வகையையுஞ் சொல்லக் கேட்பாயாக வென்று, மேலோனாகிய பிருகுமுனிவன சொலவானாயினன எ - று

சோமகாந்தன பிருகுமுனிவனை யடுத்த படலமுதல யாவும் பிருகுமுனிவரா லேயே சொல்லப்பட்டனவென்றும், பிறசரிதங்கள் இடையிடையே அவ்வவராலே சொல்லப்பட்டனவென்றுங்கொள்க (கஅ)

உருக்குமாங்கதன முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௫௭

# கிருச்சமதருபதேசம்பெற்றபடலம்.

மருக்கொண் மாமலரி னானைமுக நோக்கி மடமை
முருக்கி மேதகுவி யாதமுனி முன்ன னைமுன
முருக்கு மாங்கதனெ ழுந்தபினமு குந்தை யுறுநோயப
பெருக்க மெங்ஙனமொ ழிந்தது பேசு கவென.

(இ - ள) வாசமபொருந்தியதாமரைமலரிலெழுந்தருளியபிரமதேவனுடைய திருமுகத்தைப்பார்த்து, அறியாமையை யொழித்து மேம்பட்ட வியாதமுனிவனாகிய பெரியோன,முன்னே உருக்குமாங்கதன (இணங்காது)சென்ற பிறகு, முகுந்தையென பவள பொருந்திய காமநோயப்பெருக்க மெவ்வாறகன்றது? சொலவாயாகவெனக் கேட்க எ - று

முகுந்தையுறுநோயப் பெருக்கமென்றது உருக்குமாங்கதன சாபம்பெற்ற படலத்திற் கூறப்பட்டுளது ஆங்குக் கண்டுகொள்க (க)

முள்ள ரைக்கமல நாணமலரி னனமொ ழிகுவான்
றளரு மெல்லிடைமு குந்தையவள சாப மரசன்
கொள்ள வுய்த்தபினு மமமர்குடி கொண்டெ ழுமெழு
கொள்ளெ ரிக்கதுவி யாங்குளெ கிழ்ந்து ருகினாள.

(இ - ள்.) முட்பொருந்திய அடியையுடைய 'புதிய தாமரை மலரிலெழுந் தருளிய பிரமதேவன கூறுகின்றான் தளர்வாடிய மெலலிய இடையையுடைய முகுந்தை

யானவன் உருக்குமாங்கதமன்னவன் சாபத்தைக்கொள்ளும்படி கொடுத்தபின்னரும், மயக்கமானது குடிகொண்டு விளங்க, மெழுகானது ஒளிபொருந்திய அக்கினியிற் பட்டாற்போல மனங்கசிந்து வருந்தினள் எ - று.

அனை - அடி நாண்மலர் - அன்றலர்ந்த மலர்; புதியமலரெனக். தன்னு மெலவிடை யென்றது—"உபயதனமசையிலொடியுமிடை" என்றும், "ஈகசாற்றுக் காற்றுவிடை" என்றும், 'மருங்கோரிலக்கணம் [நன்னூல்]" என்றும் கூறியுள்ளன போலச் சுமையிறுக்காது துவளுமிடையென்பதாம் (௨)

வண்டி னார்க்குமலர் நந்தனவ னத்து லவுவா
டண்டி னார்க்குளிர்த டாகமுறு வாளபி ணைபுறங்
கொண்டி னார்க்குவிரை மானகலைகள் கண்டு குழைவாள்
பண்டி னார்க்குமணி வேயங்குழலப ரப்ப வழிவாள்.

(இ - ள்) வண்டுகளொலிக்கும் மலர்கள் பொருந்திய நந்தனவனத்திலுலாவு வாள் தடப்பமாகிய அலைகளையுடைய குளிர்ந்த தடாகத்தை யடைவாள் தமது பிணை யையுடன்கொண்டு இரைக்காக விரைந்துசெல்லும் மானகலைகளைக் கண்டு உருகுவாள் பண்ணொலி யெழுப்பும் அழகிய வேய்ங்குழலொலியெழுப்ப மனமழிவாள் எ - று

வேய் - மூங்கில் வேய்ங்குழல் - புள்ளாங்குழல் (௩)

மந்த மாருதம ருங்கசைய வன்னி விரவி
வந்த தெனக்கொலவளி யேயெனம ருண்டு முனிவா
ளந்தி லானமணித முங்கவடு கால னொலியோ
சிந்து கின்றதுயி ரென்றுதெரு மந்து கவல்வாள்

(இ - ள்) இளந்தென்றற்காற்றானது பக்கத்திலுலாவ, காற்றே! அக்கினி யோடு கலந்துவந்த தென்னசாரணமென்று மயங்கிக்கோபிப்பாள் அவ்விடத்தில், பசு வின் (கழுத்திலுள்ள) மணியொலிக்க, கொல்லுகின்ற இயமனோசையோ உயிர்ழி கின்றதென்று சுழன்று துன்புறுவாள் எ - று

அந்தில் என்றதை 'அந்திலாங்கசைநிலை இடப்பொருளாகும்" என்றதால் அசைநிலையெனக் கொள்ளினுமாம் அவ்விடத்திலென்றும் (௪)

சிறுமை யாளர்கள் பிறர்க்குவினை தீங்கு பெருமை
யுறுநர் செய்கலரொ லிக்கடனம லிகுழ லென
முறுகு வெந்துயர மூட்டுவது னக்கு முறையோ
குறுமு னிக்குரிசில் குன்றுளனெ னக்கு ழறுவாள்.

(இ - ள்) கீழ்மக்கள் பிறர்க்குண்டாக்குந் தீமையைப் பெருமையாளர்கள் செய்யமாட்டார்கள். ஒலிக்கின்ற கடலும் அழகிய குழலும்போலக் கடுமையாகிய வெவ்விய துன்பத்தை யெழுப்புவது உனக்கு நியாயமோ? குறுமுனிவராகிய அகத்தியப்பெரு மான் பொதியமலையிலிருக்கின்றனரென்று வாய்குழறிக் கூறுவாள் எ - று (௫)

வட்டி கைப்பலகை மீதிலவன் மானு ருவெலா
மொட்டி யொட்டினளவ ந்துறுக ரத்தி னிணையு
மொட்டி ளங்கிமுலைத்துணைமு யங்கும வதனங்
தொட்டு முத்தமிடு மாலையென லேது வளுறும்.

(இ - ள்.) சித்திரப்பலகையின்மேலே அவ்வுருக்குமாங்கதனுடைய மாட்சிமைப்பட்ட வடிவமுழுவதையும் மிகவுமொட்டி யெழுதி, பொருந்திய கையினால் தழுவுவாள் கோங்கரும்புபோன்ற ஒளிவீசும் இரண்டு இளமுலைகளாலு முயங்குவாள். முகத்தைத்தொட்டுமுத்தமிடுவாள். மலர்மாலையைப்போலத் துவள்வாள். எ - று. (௬)

நெட்டு யிர்ப்பெறியு நோதளிர் துவண்டு கருகப்
பட்ட பட்டவிட மெங்குமுயர் கொப்புள் பரவக்
கட்டு ணைப்புனலக விழக்குமுரு வெம்மை வெருவி
விட்ட கன்றதென மேகலையொ துங்க விழுமால்.

(இ - ள்) பெருமூச்சுவிடுவாள் தளிர்கள் துவண்டு கருகும்படி அவைபட்ட விடங்களிலெல்லாம் பெரிய கொப்புளங்கள் பரவவும், இருகண்களினின்றும் நீரைச் சொரிவாள். உருவத்தின் வெப்பத்திற்குப் பயந்து விடுத்துச் சென்றதுபோல மேகலாபரணமானது ஒதுங்கும்படி விழுவாள் எ - று

நோதளிரென்பதற்கு அழகிய தளிரென்றுகூறி, அவள் மேனியையொத்த தளிரென்றுவது பொருள்கூறுக (௭)

உற்று ழந்தவவ் வனனினுமு னாகக விநாய
முற்றும் வெந்துயரின் மூழ்கிநில மீது முடிசாய்த்
தற்ற முற்றவச மாயினள் னைத்து மறியாப்
பொற்ற விந்திரன்வி ழைந்துமயல் பூண்டு வருவான்.

(இ - ள்) (அவனுடன்) பொருந்திவருந்தியவளைக்கட்டிலும் சொல்லமுடியாத துயரமுழுதும் பெருந்துன்பத்தில் மூழ்கி, பூமியின்மேல் சிரசைச் சாய்த்துப் பரவசமானாள் அதனையெல்லா முணர்ந்து மனமழிந்த சிறுமலைபோன்ற இந்திரன் (அவளை) விரும்பிக் காமமயக்கமுற்று (உருவமாறி) வருவானாயினன் எ - று (௮)

வேறு

கழல்படுத்த திறங்கிய கமல பாதமுங்
கழலொலி செயுங்கணைக் காலு நெஞ்செலாங்
கழல்வேள் சரங்களிற் கதுவி மாதரார்
கழலிளங் காய்பொரக் கவின்செய் கச்சுமே.

(இ - ள்) வீரக்கழலைத்துக்கட்டிய தாமரைபோன்றபாதமும், வீரகண்டாமணியானது ஓசையிடுகின்ற கணைக்காலும், மனமுழுதும் கழலும்படி மன்மத பாணங்களாற் சுடப்பட்டுள்ள முருகந்தையின் காலிலணிந்த இளங்காய்போல அழகு செய்யுங் கச்சும் எ - று

இதுமுதல் மூன்றுசெய்யுள்களால் இந்திரன் முருகுந்தைபோல வந்தவகையை வருணிக்கின்றனர் (௯)

விரற்றலைப் புட்டிலும் விளங்கு செங்கையி
னரற்றெறும் நாணடு சிலைப்பு மார்பத்
திரைத்துமென் மலர்த்தொடை யிசைந்த மார்பமு
நிரைத்தடங் கணைப்புதை நிலவு தோள்களும்.

(இ - ள்.) விரலினுனியில் புட்டிலும், விளங்குகின்ற சிவந்தகையிலே ஒலிக்கின்ற வலிமையுடைய நாண்பூட்டிய வில்லும், வண்டுகளொலித்து மெல்லிய மலர் மாலை பொருந்திய மார்பும், வரிசையாகிய பரந்த அம்புகள் புதைந்து விளங்கும் தோளுகளும் எ - று. (௧௦)

பொறபுரி யாறபுறஞ சூழ்ந்த குஞசியும
பொறபவே யுருககுமாங கதன்மெயப புலவிய
பொறபெலாந தழீஇக்கொடு புலமபிச சோாந்தவப்
பொறபினை மருங்குறப பொருககென்றெயதினை

(இ - ள்) பொறபுரியினுலே புறததிரகடடிய குடுமியும அழகு செயயுமபடி உருமாவகதராசன தேகததிறபொருநகிய அழகு முழுவதையுந தழுவிககொணடு புலம்பிச, சோாநதுள்ள அவவழகியாகிய முருநதையின சமீபததிற பொருநதவிரைநது சோநதனன எ - று

குஞசி - ஆணமகன தலைமயிா பெண தலைமயிாாக குழலெனறும அளக மெனறுஞ சொல்லுவா (௧௧)

மருககுழன மாகராண மறுததுப போநதவவ
வுருககுமாங கதனுமீண டுறறு ளானெனப
பொருககென வெழுநதனள புகக வஞசனுந
தருக்கறு நயமொழி தழுவிக கூறுவான.

(இ - ள) மணநதஙகிய கூநதலையுடைய முருநதையெனபவள (தனகருததைத்) தடுததுசசென்ற அவவுருசகுமாஙகத மனனனுமை திருமபி (தனபாலவிருபபுகொணடு) வநசடைநதனனென்ற, விரைநது எழுநதனள (உருககுமாஙகதனபோல வேடஙகொணடு)வநத வஞசகனுகிய இநதிரனுமை அகஙகாரமறறநயவாாததைகளோடு தழுவிச்சொலகினறுன எ - று (௧௨)

ஏநதிள வனமுலை யிரணடும பாயநதுதண
சாநதகங கிழிதரத தழுவிக கைகளான
மோநதனன் புடகுரன முழகககங கேடடனன
மாந்தின னிதழ்நறு மருவிப புலவினன.

(இ - ள) அணணுந்த இளமைவாயநத அழகிய முலைகளிரணடும பாயநது குளிர்ந்த சாநதபபூசசானது கிழிடடுமபடி தழுவிககொணடு கைகளாலே மோநதனன; (எண்வகைப) புட்குரலகளின (ஒலியைககணட ததிலே) முழஙககேடடனன் இதழூரலாகிய தேனைடபருகினன, அவளைத தழுவிககூடினன எ - று

புட்குரலெட்டும முன விளககபபட்டன (௧௩)

வாட்டடங் கணணியு மகிழநதன ளுனாங
கோட்டிளங் குவிமுலை கோட்டு மண்கொள
வூடடிய காதலின முயங்கிச செய்யவா
யோட்டமும பருகின ளுவப்புற றுளரோ.

(இ - ள்.) வாட்படைபோலும் பரந்த கணகளையுடைய முருந்தையும மீண்டும் அவன்மார்பிலே கட்டமாகிய இளமைததஙகிய குவிநதமுலையானது கோட்டுமண்

கொள்ளும்படி அதிகரிக்கச்செய்த ஆசையுடன் மயக்குற்று, சிவந்தவாயிதழையும் பருகினள். சந்தோஷமுற்றனள். எ - று.

யானையானது மதமுற்றகாலத்தில் நிலத்தைக் கொம்பாற்குத்தி மண்ணைக் கொள்வதுபோல, முலையாகிய யானையும் அவன் மார்பிற் குத்திக் கோட்டுமண் கொள்ளவென்றா (௧௪)

துடக்கின னிந்திர னென்று சூதத்தவேள்
முடக்கிய தடக்கையின் முனைகொ ளம்பெலா
மடக்கின னெரிபிறத்தகை வரிவிற் றாழ்த்தினன்
னடக்கினன் முகுந்தையோ டமர்ந்த போரினே.

(இ - ள்) இந்திரன் மயங்கினனென்று, அச்சங்கொடுத்த மன்மதன் முடக்கிய பரந்த கையிலுள்ள கூர்மைவாய்ந்த அம்புகளையெல்லாம் மடக்கினன் தூக்கிய கையிற்றாங்கிய வரிக்கட்டமைந்த வில்லைத் தாழ்த்தினன். முகுந்தையோடு செய்த காமப்போரை யடக்கினன் எ - று.

இச்செய்யுளால் முகுந்தை காமமயக்கொழிந்தாளென்றபடி (௧௫)

தருந்தனிக் கலவியாற் றழைத்த நெஞ்சொடு
முகுந்தைதன் முனிப்பணி முடிப்பச் சென்றனள்
புருந்தகை தவவுருப் போக்கிப் போந்தனன்
னெருந்தழல் வயிரவே லேந்தன் விண்ணமே.

(இ - ள்) தகுதியாகிய ஒப்பற்ற புணர்ச்சிமயக்கத்தால் நிரம்பிய மனத்துடன் முகுந்தையானவள் தன் கணவன் பணிவிடையைச் செய்யச்சென்றனள். பிரகாசிக்கின்ற தீயைச் சொரியும் வச்சிரவேலைத்தாங்கிய ஆகுருற்ற தேவராசனாகிய இந்திரன் தானவந்த வஞ்சகவடிவத்தையொழித்துத் தேவலோகத்தை யடைந்தனன். எ-று (௧௬)

முற்றிழை முகுந்தைதன் மோட்டி னிந்திரற்
கற்றைநாட் கருத்தரித் தையி ரண்டெனச்
சொற்றது மதியிடைத் தோன்ற லீன்றனள்
பற்றிய கருங்கடல் பரிதி கான்றென.

(இ - ள்) முற்றிய ஆபரணமணிந்த முகுந்தையென்பவள் தன்வயிற்றில் இந்திரனுக்கு அத்தினத்திலே கருப்பமடைந்து, பத்தாவது என்று சொல்லத்தக்க மாதத்தில், கருமைபொருந்திய சமுத்திரமானது சூரியனைப்பெற்றதுபோல ஓர்புதல்வனைப் பெற்றனள் எ - று.

ஐயிரண்டெனச்சொற்றதுமதி - பத்தாமாதம் (௧௭)

அண்டமு நடுக்குற வார்த்து வந்துவீழ்ந்
தொண்டரை கிடந்தொளிர் கின்ற மைந்தனைக்
கொண்டலூர் தவனுக்குக் குறித்த தோர்கலா
மண்டிய பெருந்தவன் மகிழ்ந்தெ டுத்தனன்.

(இ - ள்.) அண்டமும் நடுக்குறும்படி ஆர்ப்பரித்து வந்து வீழ்ந்து ஒள்ளிய பூமியிற் கிடந்து பிரகாசிக்கின்ற புத்திரனை, மேகவாகனனாகிய இந்திரனுக்கு உதித்ததை யுணராத மிக்க பெருந்தவமுடைய கவிமுனிவன் களிப்புற்றெடுத்தனன். எ - று.

கவியெனப் பட்டவக் கருணை மாதவன்
சவிமணி மைந்தற்குச் சாத காதிக
ளவிசொரிந் தமரருக் கன்பு செய்திரும்
புவியவர் புகழ்தரப் போற்றிச் செய்தனன்.

(இ - ள்) கவிமுனிவனென்று சொல்லப்பட்ட அக்கிருபைவாய்ந்த பெருந் தவமுடையவன் சிறந்தமைந்த மாணிக்கம் போன்ற புதல்வனுக்கு, தேவர்களுக்கு அவி சொரிந்து அன்புசெய்து, பெரிய பூலோகத்தார் புகழும்படி சாதகாதி கருமங்கள் மேம்படச்செய்தனன் எ - று.

அவி - தேவருணவு (௧௯)

வேறு.

குருச்சந் திரனை வென்றமுகக் கோல முகுந்தைத் தனிமைந்த
னுருச்சந் தவரி சனவிழுதும் பிறவுந் திமிர்ந்தொண் புனலாட்டிக்
கருச்சந் தொடுகா ரகிற்புகைத்துத் தனப்பா லூட்டப் பனிருநாள்
திருச்ச மதனென் றொருநாமங் கிளந்தான் மகற்குக் கிளர்தவத்தோன்.

(இ - ள்) நிரந்தங்கிய (பூரண) சந்திரனை வென்றமுகத்தையுடைய அழகிய முகுந்தையென்பவள் ஒப்பற்ற புத்திரனுடலைச் சந்தனமும் அரிசனமும் விழுதுகளும் பொடித்துக் கலந்த ஒள்ளிய நீரால் முழுக்காட்டி, தேவதாரு சந்தனக் கட்டை காரகிற்கட்டை முதலியவற்றின் பொடியாற்புகையிட்டு, முலைப்பாலூட்டி வளர்க்க, விளங்குகின்ற தவத்தையுடைய கவிமுனிவன் பன்னிரண்டாந் தினத்தில் திருச்சமதனென்னும் ஒருபெயரைக் கூறி நாமகரணஞ்செய்தனன் எ - று (௨௦)

கருப்ப நிலைக்கா றுமாண்டிற் கரிசின் முறையா லுபநயனம்
விருப்பி னியற்றி மறையாதி விளங்கத் தெரித்தான் கவியென்பான்
திருச்ச மதனு மொருமுறையிற் கேட்டு முழுதுந் தெரிந்துணர்ந்து
வெருச்செய் பவத்தின் வேரறுக்கும் வெற்றிப் படைபோ லாயினனே.

(இ - ள்) கவிமுனிவன் திருச்சமதன் ஜனித்ததற்கு ஆறாம் வருடத்தில், குற்றமற்ற முறைப்படி உபநயனத்தை ஆசையோடுசெய்து, வேதமுதலியவற்றை விளங்கும்படி யுணர்த்தினன். திருச்சமதனும் ஒரேதரங்கேட்டு (ஐயந் திரிபு அறியாமையொழிய) முற்றும் ஆராய்ந்தறிந்து அச்சத்தைச் செய்யும் பிறவியின் வேரையறுக்குமாயுதப் படைபோலாயினன் எ - று (௨௧)

ஒழுக்க முதலா கியநெறியி னிறழா தொழுகக் கவிமகிழ்ந்து
வழுக்கி லாத கணாநாந்த்வா வென்ன மனுவை யுபதேசித்
தழுக்கி லாதா யிம்மனுவை யனுட்டிப் போடு கணேசனையு
முழுக்க வருள்வான் கணேசனென மொழிந்தா னவனு மதுபெற்றான்.

(இ - ள்) ஒழுக்கமுதலாகிய வழியிற் பிறழாது நடக்க, கவிமுனிவன் களிப்புற்று, குற்றமில்லாத "கணாநாந்த்வா" என்னும் மந்திரத்தை யுபதேசித்து, களங்கமில்லாதவனே! இம்மந்திரத்தை அனுட்டிப்புக் கிரமத்துடன் கணேசக்கடவுள் (அதனால்) கணேசப்பெருமான் உன்விருப்பம் முற்றுப்பெற அநுக்கிரகிப்பாரென்று கூறினன். திருச்சமதனும் அம்மந்திரத்தைப் பெற்றனன் எ - று. (௨௨)

நாளு நியதிக் கடன்முடித்து நாம வினைக டொக்கெல்லை
யாளு மைங்கைக் கணேசர்திரு வடித்தா மரைக ளுளத்திருத்தி
மூளு மன்பி லவர்மனுவை முறையி னனுட்டிப் பொடுங்கணித்துக்
கேளும் பிறக்கென் றிடவுலகங் கேண்மை கொள்ள விளங்குநாள்.

(இ - ள்.) நாடோறும் நித்தியகருமத்தை முடித்து, அச்சத்தைத்தரும் வினைகளையொழித்து என்னை யனுக்கிரகிக்கும் ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமான் திருவடித்தாமரைகளை மனதிலிருக்கச்செய்து அதிகரித்த ஆசையுடன் அவருடைய திருமந்திரத்தை முறைப்படி அநுட்டிப்புடன் கணித்து, உறவினரும் பின்னென்று சொல்ல உலகமுழுவதும் நட்புகொள்ளும்படி விளங்குங் காலத்தில் எ - று.

துள்ளிக் கயல்வா னிடைத்தாவத் துடுமென் றிறங்கி யிளநாகு
வள்ளைக் குதட்டுந் தடமுடுத்த மகத நாட்டிற் கோனெவர்க்குந்
தள்ளை யனையான் பெருங்கொடையான் றனசூ ரனெனும்பெயரான்
றெள்ளை யகன்ற வுள்ளத்துத் தொடுத்த தருமச் சிந்தையான்.

(இ - ள) சேற்கெண்டைகள் துள்ளி ஆகாயத்திலே தாவவும், இளங்கன்றுகள் விரைந்திறங்கி வள்ளைக்கொடியைக் குதட்டுகின்ற தடஞ்சூழ்ந்த மகதநாட்டரசன் எல்லோருக்குந் தாயைப்போன்றவன், மிக்க ஈகைத்தன்மையுடையவன், தனசூரனென்னும் பெயருடையவன், துன்பமகன்ற மனத்திலே பொருந்திய தருமசிந்தையையுடையவன். எ - று (௨௪)

அன்ன மருட்டு நடைக்கற்பி னுற்ற மனைவி யம்பிகையும்
பொன்னை வெள்ளி தனைமருட்டும் புந்தியமைந்த வமைச்சர்களுந்
தன்ன துடலு முயிருமெனத் தக்க மரபால் வழியொழுக
மின்ன லறச்செங் கோலோச்சி யிருந்து மகிழுங் காலத்தில்.

(இ - ள) அன்னத்தை மயங்கச்செய்யும் நடையையும் கற்பின் மேம்பாட்டையுமுடைய மனைவியாகிய அம்பிகையென்பவளும், பொன்னையும் வெள்ளியையும் மயக்கிய மனமமைந்த மந்திரிகளும், தன்னுடைய உடலும் உயிருமென்று சொல்லத்தக்க முறைப்படி நீதிவழியேயொழுகவும் துன்பமகலவும் செங்கோல் செலுத்திக்கொண்டு களிப்புற்றிருக்குங்காலத்தில். எ - று. (௨௫)

பெற்ற குரவன் றனைக்குறித்துப் பிதிராக் கூட்டு நாளெய்த
முற்ற வுணர்ந்த வசிட்டனையு முழுத்த தவத்தை திரிதனையு
மற்று முயர்ந்த முனிவரையும் வருவித் தானம் றவரோடுங்
கற்று மிகுந்த கிருச்சமதன் கலந்து கலைப்போ ராற்றினான்.

(இ - ள) பெற்றதந்தை நிமித்தமாகப் பிதிராக்கு உண்பிக்குந்தினம் [சிராத்தநாள்] வரவும், முழுவதுமுணர்ந்த வசிட்டமுனிவனையும் முழுமையாகிய தவத்தையுடைய அத்திரிமுனிவனையும், அவரல்லாத உயர்ந்த பிறமுனிவர்களையும் வருவித்தனன். அவர்களுடன் (நூல்களைக்) கற்றுமேம்பாடுற்ற கிருச்சமதமுனிவன் அளவளாவிச் சாத்திரப்போர் செய்தனன் எ - று. (௨௬)

வாதி னேற்ற வத்திரியவ் வாதின் வெல்ல மாட்டாது
சாத லனைய கொடுங்கோபத் தழல்கொப் புளிக்க வெதிர்நோக்கிப்

(இ - ள்.) அதிகரித்த தோடமடங்காமல் விரைவோடுசென்று, தன்னைப்பெற்ற தாயை (நோக்கி) முகுந்தாய்! மிக்ககாமமுடையவளே! என்முன்னே வருக. எனக்குத் தந்தையாவன்? நடந்ததை உள்ளபடியே கூறுவாயாகவென்றனன். முகுந்தை (அதனைக்கேட்டு) மனந்தளர்ந்து நடுநடுங்கி நடந்த விருத்தாந்தத்தையே (உண்மையாகச்) சொல்லினள். எ - று.

தூர்த்தை - காமமேலீட்டாற் பலரையும் புணர்பவள். (௯௧)

வே று.

மிருக வேட்டையின் மேவிய வுருக்குமாங் கதனீர்
பருக வந்தனன் படியிலா வழகுகண் டவனுக்
குருகி யுன்றனை யுயிர்த்தனே னுணங்கணாக காரவம்
பெருகி னிசைசையா ரொழுகநூல் பேசிய முறையால்.

(இ - ள்) மிருகவேட்டைக்காகவந்த உருக்குமாங்கதராசன் (இவ்வாச்சிரமத்திற்கு) நீர்பருகும்படி வந்தனன் (அவனுடைய) ஒப்பில்லாத தேகப்பொலிவைப்பார்த்து மனமுருகி, மையூட்டிய கண்ணையுடைய மாதர்களுக்கு ஆசையதிகரித்தால் மனஞ்சென்றவழி நடக்க நீதிநூற்களிற் சொல்லியமுறைப்படி, (அவனைக்கூடி) உன்னைப் பெற்றேன் எ - று (௯௨)

விருப்பின் மைந்தனே யுள்ளவா றீதுவென விளம்ப
நெருப்பின் மேலொரு நெருப்பினை நெடிதுபெய் தாங்குப்
பொருப்பு நேர்தவன் புகைந்துபுள் ளினங்கு ராத
வருப்ப மாவனத் திலந்தையா குகவெனச் சபித்தான்.

(இ - ள்) ஆசையையுடைய மகனே! உள்ளவகை யிதுவென்று (முகுந்தை) கூறவும், நெருப்பின்மேலே வேறொரு நெருப்பை மிகுதியாகப் பெய்தாற்போல, மலைபோன்ற (பெருந்) தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் கோபித்து, பறவைக் கூட்டங்களணுகாத துன்பமைந்த வனத்தில் இலந்தையாகுகவென்று சாபமிட்டனன். எ - று (௯௩)

ஒடுங்கி நின்றதா யொருமக னுரைத்தமை கேட்டு
நெடுங்கு ணத்தவ தாயென நினைந்திலை யெனைநீ
நடுங்கச் செய்தனை யாதலி னீயுமுன் னடுங்கக்
கொடுங்கு ணச்சிறுன் கூடக நினக்கெனச் சபித்தாள்.

(இ - ள்) அடங்கிநின்ற முகுந்தையெனனுந் தாயானவள் ஒப்பற்ற தன் மைந்தன்கூறிய சாபமொழியைக்கேட்டு, மிக்க நற்குணமுடையவனே! என்னைத் தாயென்று கருதினையில்லை நடுக்கமடையச் செய்தனை யானபடியால், நீயும் உள்ள நடுங்கும்படி, உனக்குக் கொடுமையாகிய குணத்தையுடைய சிறுமைத்தன்மை வருக வென்று பிரதிசாபந் தந்தனள். எ - று (௯௪)

கலந்தை வந்தொளிர் முலையவள் கடுச்சா பத்தா
லிலந்தை வந்தெழு வனத்திடை யிலந்தையா யிருந்தாள்
வலந்தை வந்தமேதான் மன்னவன் மகன்றமையைக் குறித்து
நலந்தை வந்தமா தவனுள நாணியங் கிருந்தான்.

(இ - ள்.) ஆபரணமணியைப்பெற்றுப் பிரகாசிக்கின்ற குழைகளையுடைய முகுந்தை யென்பவள் தன்னையணுகிய சாபத்தால், இலந்தைகள் மலிந்த [illegible] இலந்தைமரமாயிருந்தனள். வெற்றிபொருந்திய தோள்கள் பொருந்திய உருக்குமாங்கதனுடைய புதல்வனன்மையைக் கருதி, நன்மைபொருந்திய பெருந்தவத்தைச்செய்த திருச்சமதமுனிவன் மனதில் வெட்கங்கொண்டு அவ்விடத்திலிருந்தனன். எ - று. (௩௫)

அழிந்த மானத்தின் வாழ்தலி னுக்கையை யொறுத்துக்
கழிந்து போதலே நன்றெனக் கருதிடு மளவில்
வழிந்த மாமத முகத்தவ னருளின்வா னவர்க்குப்
பொழிந்த தேனெனப் புரந்தரன் மகனெனக் கேட்டான்.

(இ - ள்) அழிந்த மானத்துடன் வாழ்வதைக்காட்டிலும் உடலைவெறுத்து இறந்துபோவதே உத்தமமென நினைக்குங்காலையில், மதமொழுகும் யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுளுடைய திருவருளால், தேவர்களுக்குச் சொரிந்த தேன்மாரி போல, இந்திரன் மகனென்று சொல்லக்கேட்டனன் எ - று. (௩௬)

சிறிது சிந்தையைத் தேற்றின னமைதி செய்த
வுறுவ ராதியோ ரனைவரு முற்றடி வணங்க
மறுவி னல்வரம் பெறுகுது மெனமதித் தந்தக்
குறுவ னத்தினை விடுத்தொரு கொடுவன மடுத்தான்.

(இ - ள்) மனத்தைச் சிறிதுதேறச்செய்து அமைதித்த முனிவர் முதலானவர்களெல்லாரும் பொருந்திப் பாதங்களைப் பணியும்படி, குற்றமில்லாத நல்வரத்தை யடைவோமென்று யோசித்து, அந்தச் சிறுவனத்தைவிட்டு வேறொரு பெரிய வனத்தை யடைந்தனன் (திருச்சமதமுனிவன்) எ - று.

கொடுவனமென்றதால் புலி சிங்கம் முதலிய துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கும் பெருவனமெனக்கொள்க.

தேற்றினன் - முற்றெச்சம். (௩௭)

இதுமு குந்தையின் சரிதமென் றிதழ்முறுக் கவிழ்ந்த
பதும மென்மலர்ச் சேக்கையான் பகர்ந்தனன் செய்ய
மதும லர்த்திரு மாயினின் றகழ்மனை போந்து
முதுத வம்புரி வியாதனு முனிவரன் மகிழ.

(இ - ள்) இதுவே முகுந்தையென்பாளுடைய சரித்திரமென்று, செவ்விய தேனொழுகுந் தாமரைமலரில் வசிக்குந் திருமகளை மாயினின்று விலக்கிப் பூமியில் வந்து முதிர்ந்த தவத்தைச்செய்த வியாதனென்னும் பெயரையுடைய முனிசிரேட்டர் மகிழும்படி, இதழ்கள் கட்டவிழ்ந்த மெல்லிய தாமரைமலர்ச் சேக்கையையுடைய பிரமதேவன் கூறினன். எ - று. (௩௮)

ஏந்த லைங்கரூற் கினியமந் திரவுப தேசந்
தந்த தந்திட முகுந்தைதன் னகன்பெற்ற துணைத்தா
மந்த மெய்த்தவன் வரம்பெற லறிகெனப் பிருகு
சுந்த ரம்பெறு சோமகாந் தனுக்குரை தொடுப்பான்.

(இ - ள்.) எந்தையாகிய ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமானுக்கு இனிதாகிய மந்திரோபதேசத்தை முகுந்தைமகனாகிய கிருச்சமதமுனிவன் தந்தையாகிய கவிமுனிவனாற் செய்யப்பெற்ற வகையைக் கூறினோம் அந்த உண்மைத்தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் வரம்பெற்றதையும் அறிவாயாகவென்று பிருகுமுனிவர் அழகுபெற்று விளங்குஞ் சோமகாந்தராசனுக்கு உரைசெய்வார் எ - று.

கிருச்சமதருபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௯௩௯

---

# கிருச்சமதர் வரம்பெறுபடலம்.

உலகங்க ளனைத்துந் தொடிக்குமுன் முன்னாகியமெய்ம் பெருமா னிறைநூல், பலவுந் தெளிகின்ற கிருச்சமதன் பட்டுற்றவ னுற்ற வரத் தினையும், இலகும்படி சொல்லுக வென்றுதவ மெழிலார்குமவியாசன் வினவுமம், மலர்மேல் லணையான் மகிழ்கூர்ந் தவன்முன் வரம்பெற்றது மோதவிக்கத் தனனே.

(இ - ள்) உலகங்களெல்லாவற்றையும் தொடிக்குமுன்னாற் படைத்த எம்பெருமானருளிய தமிழ்மையான பலநூல்களையுந் தெளிகின்ற கிருச்சமதமுனிவன் (தவமானது) சென்று, அவன் பெற்ற வரத்தையும் விளங்கும்படி சொல்லவேண்டுமென்று, தவத்தின் அழகு விளங்கும் வியாசமுனிவர் வினவவும், மெல்லிய தாமரைமலரணையையுடைய சதுமுகக்கடவுளிருந்து, அவன் வரம்பெற்றதையுஞ் சொல்லத்தொடங்கினன் எ - று. (௧)

பழிமல கியகா னமொழிந் தபின்மே லுகானமடைந் தகிருச் சமதன், வழிதண் மதுமல் லிகைமுல் லையிள மயிலைக் கொடிமா தவிபந் தரிடும், பொழிலும் புதுமா மலரோ டைகளும் பொங்கும் புனல்வா வியுமவேள் விமறை, மொழியும் படிசெய் யுமுனிக் கணமும் முடிவா னவர்வா ழுக்கையு நோக்கினனே.

(இ - ள்) பழிமிகுந்த வனத்தை விடுத்து, சமீபத்திலே பொருந்திய (பெரு) வனத்தை யடுத்த கிருச்சமதமுனிவன், குளிர்ந்த தேனைச்சொரியும் மல்லிகையும் முல்லையும் இளமைதங்கிய இருவாட்சிக்கொடியும், குருக்கத்திப் பந்தரிட்ட பொழிலும், அன்றலர்ந்த பெரிய மலரோடைகளும், பொங்குகின்ற நீரையுடைய தடாகங்களும், யாகங்களை வேதங்கூறிய வகையாகச்செய்யும் முனிவர்கூட்டங்களும், கிரீடமணிந்த தேவர்களுடைய இருக்கையுங் கண்டனன் எ - று. (௨)

அங்குற் றமரா தவர்தம் மமையத் தவர்தா டொழுவாங் கவர்நல் வரவேற், றிங்குற் றிருவென் னமகிழ்ந் துதினை மெழிலார் புலியின் னலமா னபதந், தங்கும் பெருமெல் விரலூன் றியொருந் தகைப்பெருமா னுருவங் கருதி, முங்கும் பொறியைந் துமடக் கிமனு மொழியின் றனன்முற் றுதவத் திறனே.

பொங்கு முழுவற் புணரிப் புணையானான்
செங்கை குவித்துத் திருந்தவிது கூறுவான்.

(இ - ள்.) சிங்கத்தின் முதுகிலே மேம்பட்ட (சித்திபுத்திகளென்னும்) தேவிமாருடன் அவ்விடத்திலெழுந்தருளிய மலரடித்தராகிய விநாயகக்கடவுளுடையதிருவருளின திறத்தைக்கேட்டு, அதிகரிக்கின்ற விடாதுதொடர்ந்த அன்புக்கடலுக்குத் தெப்பமான இருச்சமதன செவ்வியகையைக்கூப்பித் திருத்தமாக இதனைச் சொல்லலானான். எ - று.

உழுவல் - விடாதுதொடாதல் உழுவலன்பு என்பன வாதியிற்காண்க
கேளா - செய்யாவெனனும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (௧௭)

காண்டல் கருத லரியாயிவற்றுறு காணுமையக்
காண்டல் கருத லுரையாலுநான் கண்டிடறத
வேண்டும் பொருளினனு முண்டிட விமலா நீ
வேண்டேக னுமருளாத தளாது வேண்டுகேன்.

(இ - ள்) தரிசித்தல் சிந்தித்தல் கூறுதலென்னு மிவற்றூற றரிசிக்கமுடியாத தேவரீரைத் தரிசித்தலானும் சிந்தித்தலானும் துதித்தலானுந் தரிசித்த அடியேனுக்கு விரும்பும் பொருள் பின்னுமொன்றுளதோ? நின்மல சொரூபியே! தேவரீர் வேண்டேனென வேண்டேன் தேவரீர் திருவருளைத் தவளாமல வேண்டுகேன் எ - று

வேண்டுகேன் இதில் கு சாரியை வேண்டுவேனெனபது பொருள் (௧௮)

எண்பத்து நான்குநூறாயிரமா மியலபிறப்பிற
பண்புற்ற மானிடமாம் பவமரிது மானிடத்து
மெண்பெற்ற நால்வருணத் தியைந்திடல் தரிதவற்று
ணண்புற்ற வந்தணரா யணைவது மரிதாமால

(இ - ள்) எண்பத்துநான்கு லடசமாக விடலகின்ற பிறவியில் அழகுபொருந்திய மானுடமாகிய பிறவி (கிடைப்பது) அரிது மானுடப்பிறவியிலும், எண்ணுதல் பெற்ற (பிராமணாதி உத்தம) நாற்குலத்திற் பொருந்துத லரிது. அவற்றுள்ளும யாவரும் நண்புகொண்ட வேதியராகப் பிறப்பதும அரிதாகும எ - று.

எண்பத்துநான்கு நூறாயிரம் பிறப்பு என்றதை,

"ஊர்வ பதினொருமொன்பது மானுடம
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்து—சீரிய
பந்தமாந் தேவர் பதினொ கயனபடைத்த
அந்தமில்சீர் தாவரநா லைந்து"—என்பதனானறிக

எண்பெற்ற நால்வருணமென்றது, அநுலோம பிரதிலோம அந்தரான விராத்தியரென்னு மித்திறத்தோரை விலக்கி உயர்குடியாகிய பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர வருணங்களை யுணர்த்தியதெனக (௧௯)

அந்தணரு ளறிவுடைய ராதலரி தறிவருளுஞ்
சிந்தைமகி ழனுட்டானஞ் செய்குநரா குவதரிது
சிந்தைமகி ழனுட்டானஞ் செய்பவருட் டிரிவிதமாம்
பந்தமறச் சிவஞானப் பற்றுடையா ரரியர்களே.

(இ - ள்.) இந்தக் கிரேதாயுகத்தில் இந்நகரமானது புட்பகநகரமாம். மேம்பட்ட திரேதாயுகத்தில் விளங்குகின்ற மணிபூரகநகரமாம். நெருங்கிய துவாபரயுகத்தில் குற்றமொழிக்கும் பாணநகரமாம். குறைந்த அழகுடைய கலியுகத்தில் பத்திரநகரமாம். எ - று. (உக)

கற்றவநீ விழைந்தவெலா நல்கினமுன் பாற்சிறுவ
னற்றமிலா மிகுவலியோ டாமொருவா ளியினன்றி
மற்றையரா லழியாத வரத்தினனாய் நமதடியன்
புற்றவனா யொருவனுறு மோங்குநம தின்னருளால்.

(இ - ள்.) நல்ல தவத்தையுடைய கிருச்சமதமுனிவனே! நீ விரும்பியவற்றையெல்லாம் கொடுத்தோம். உன்னிடத்திலே ஒரு சிறுவன் அற்றமில்லாத பெருவலியுடன், சிவபெருமானுடைய ஒரு பாணத்தாலல்லாமல் பிறரால் இறவாத வரமுடையவனாய், நம்முடைய திருவடிப் பத்தியுடையவனாய், நமது மிக்க இனிய திருவருளால் ஒப்பற்றவனாகப் பிறப்பான் எ - று.

அற்றம் - துன்பம் - அற்றமிலாவலி யென்பதற்கு மிக்க வலியெனக்க. (உஉ)

வேறு

பெருந்திறன் மகனே மாதப் பெலியினு நினைந்த கீர்த்தி
யிருந்தமூ வுலகத் துண்டாந் திருச்சமத முனிவ நம்மைப்
பொருந்துகா ரியங்க டம்மின் முந்துற நினைந்து பூசி
வருந்துத லின்றி வேட்ட வரமெலாம் பெறுவை மாதோ.

(இ - ள்.) மிக்க வலியமைந்த அந்தப்பெலியென்னும் உன்மகனைக் காட்டிலும் உனக்குக் கீர்த்தியானது திருத்தமுற்ற திரிலோகங்களிலும் உண்டாகும் சிறப்பமைந்த கிருச்சமதமுனிவனே! பொருந்திய காரியங்களிலெல்லாம் நம்மை முதலிலே தியானித்துப் பூசைபுரிந்து வருத்தமில்லாமல் விரும்பியவரங்களையெல்லாம் பெறுவாய் எ - று.

காரியாரம்பத்திலேயே கணபதி பூசைசெய்வோர் நிர்விக்கினமாக அதனை முடித்துப் பலனடைவாராதலின் "நம்மைப் பொருந்து காரியங்கடம்மின் முந்துற நினைந்து பூசி - வருந்துதலின்றி வேட்டவரமெலாம் பெறுவை" என்றார். (உங)

நினைத்தெமைப் பூசை யாவர் நிசப்படுத்தினு மவர்க்குப் பொல்லா
வினைத்தொடர் பனைத்து நீங்கி விழுத்தகு நினைந்த நன்மை
யனைத்தையு மெளிதின் வல்லே யடைகுவ ரெமைத்தொழாரே
லெனைத்துள விடரும் பொல்லா வினைகளு மெய்து வாரே.

(இ - ள்.) சிறந்த தவத்தையுடையவனே! எம்மை எவர்கள் கருதிப் பூசை செய்தாலும், அவர்கள் தங்கட்குறும் பொல்லாவினைத் தொடர்ச்சிமுழுவதையுமொழித்து நினைந்த நன்மைமுழுவதையும் இலேசாகவே விரைவிலடைவார்கள். எம்மைப் பணியார்களாகில், உள்ளனவாகிய எல்லாத் துன்பங்களையும் பொல்லாத வினைகளையும் அடைவார்கள் எ - று.

வல்லே - விரைவுகுறிக்கும் இடைச்சொல். (உச)

அருமறை யளந்துங் காணு வமலனா வரங்க ணல்கி
யிருவினை மலங்கண் மூன்று மிரித்தவ ருளாக் கோயின

மருவுவான் மறைந்து போந்தார் வரம்பெற்ற முனிவ னுவகையாக
குருமணிக் கோயி லொன்று குயிற்றியக் கோயி லுள்ளான்.

(இ - ள்.) அரியவேதங்கள் அளவிட்டுங் காணமுடியாத நின்மலராகிய கணேசப்பெருமான் (இவ்வகையாக) வரங்கள்கொடுத்து, இருவினையையு மும்மலங்களையு மொழித்த பரம பத்தர்களுடைய இதயாலயத்தை யடையும்படி அந்தர்த்தானமாயினர். வரங்களைப்பெற்ற திருச்சமதமுனிவன் அங்கே ஒப்பற்ற நிறமமைந்த மணிகளாற் செய்த திருக்கோயிலொன்று செய்வித்து, அத்திருக்கோயிலினுள்ளே ன் எ - று (உ௫)

வேறு

சாதமலி பத்தியினுற் சார்ந்தவரு ளகமன்று
பாதமிகப் புரிவானைப் பரானந்த பூரணனை
வரதகண பதியென்று வைத்தொருதீர்த் தமுந்தொட்டு
விரதமொடப் புனலாட்டி மேதகப்பூ சித்திருந்தான்.

(இ - ள) உண்மைமிக்க பத்தியுடன் பொருந்தியவர்களுடைய மனமாகிய சபையிலே, நடனத்தை மிகுதியாகச் செய்பவனாகிய பரானந்த பூரணனுமாகிய கணேசப்பெருமானை வரதகணபதி யென்று திருநாமமிட்டுப் பிரதிட்டைசெய்து, (அங்கே) ஒரு தீர்த்தமுமெடுத்து விரதத்துடன் அந்நீரா லபிடேகித்து மேம்பாடுற்ற பூசைசெய்திருந்தனன் எ - று (உ௬)

வேறு

கணேசர் மேனியி லாடுமக் காமரு தீர்த்தங்
கணேச தீர்த்தமெ னொருபெயர் கலந்தது நகருங்
கணேசர் பேரரு ளாற்றலந் திருந்தகா ரணத்தால்
கணேச மாநக ரெனும்பெயர் கதுவிய தம்மா

(இ - ள) கணேசப்பெருமானுடைய திருமேனியிலாட்டிய அந்த அழகிய தீர்த்தமானது கணேச தீர்த்தமென்று ஒருபெயரைப்பெற்றது. அந்த நகரமும கணேசப்பெருமானுடைய பேரருளோடு கூடியிருந்த காரணத்தால், சிறந்த கணேசநகரமென்னும் பெயரை யடைந்தது எ - று

அம்மா - வியப்பிடைச்சொல் (உ௭)

சித்தி யாவையும் யாவர்க்குஞ் செறித்திடுந் திறத்தால்
சித்தி மாநக ரெனவுஞ் சிறந்தது நகருஞ்
சித்தர் மாதவர் தேவர்கண் முதலியோர் தம்முட்
சித்தி மேவின ரளவிலர் சிறந்தவந் நகரில்.

(இ - ள்) எல்லாச் சித்திகளையும் எல்லோருக்கும் மிகுதியாகக் கொடுக்கும் ஆற்றலால், அந்நகரமானது சிறந்த சித்திநகரமென்றொரு சிறப்புற்றது. சித்தர்கள் பெருந்தவசிகள் தேவர்கள் முதலானவர்களில் அந்நகரத்திலே (தமது இஷ்ட) சித்திகளை யடைந்தவர்கள் எண்ணிறந்தவர்கள் எ - று. (உ௮)

கலியு யிர்த்தருள் காமரு திருச்சம தன்முன்
புவியி யத்தகப் புகழ்முகக் களிற்றிறை யருளா

[illegible]
[illegible]

(இ - ள்.) [illegible] பெற்றருளிய அழகிய இருச்சமதமுனிவன் முனிவே [illegible] உலகமானது களிப்பெய்துதற்கு, புள்ளிகள் வாய்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் திருவருளால், பிரகாசிக்கின்ற வரம்பெற்ற வகையினைவரும், புடைத்த [illegible] நீங்கிய வியாதமுனிவனே ! என்று நான்குமுகங்களையுடைய பிரமதேவன் கூறினான். எ - று. (௨௯)

சோம காந்தனே தூத தகு கவிமகன் பெற்ற
சேம வானவர மறிந்தனை யினியவன் சிறுவன்
வாம மாவொரு மருபபினன் மந்திர கணிதத
தேம மாதா வழிதியென நியமபுவன பிருகு.

(இ - ள்) சோமகாநத ராசனே ! தகக புனிதமான கவிமுனிவர் மகனுன இருச்சமதமுனிவன் பெற்ற சேமமாகிய சிறநத வரததை யுணர்நதனே. இனி அவன் மகனுகிய பெலி அழகுபொருநதிய ஏகதநதராகிய கணேசப்பெருமானுடைய திருமந்திரத்தைக கணித்தவகையை அழகுபொருநத உணரககடவையெனறு பிருகு முனிவர் சொலலததொடஙகினர். எ - று. (௩0)

இருசசமதா வரமபெறுபடலம முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௩௬௯

---

# கிரிபுரன் வரம்பெறுபடலம்.

கருவி முகிலக ணிரைநிரையாய்க கவிழ்க்த நெடிய தடஞ்சிலம்பி
னருவி யெனமும மதமபொழியு மானை முகவ னருளவரத்தாற்
பொருவி லமரா முனிவரெலாம போநது வணஙகிப பணிபுரிய
மருவு மகிவேள விகதிறையாய வதிநதா னவைய கிருசசமதன.

(இ ள்) (உலகுக்கு) காரணபூதமான மேகஙகள வரிசைவரிசையாக(நீரை)க் கவிழ்த்த நீணட விசாலமான மலையில, அருவியாறுபோல மும்மதஙகளைச் சிந்தும் யானைமுகததையுடைய விநாயககடவுள அருள்புரிந்த வரததினுல், அத்தகைய இருச்சமதமுனிவன ஒப்பில்லாத தேவாகளுமுனிவாகளும யாவரும வநது பணிந்து ஏவல் செய்ய, அவிபொருந்திய யாகததிற்குத் தலைவனுய வசிததனன். எ - று. (௧)

மடஙக லுகைக்கும் களிறுமுக வரதன் பாத மலர்த்துணையின்
முடங்கு மதுகாற் சுரும்பினங்கண் மூசும் பனிமென் [illegible]
குடங்கை கொடுபூ சித்தவன்மெய்க் கோல [illegible]
மடங்கத் தலஞ்சைய் பலவொருநா ளமாக்தா னரிய [illegible]

(இ - ள்.) [illegible]
[illegible]
[illegible]

போன்ற கையிற்கொண்டு பூசைசெய்து, அவ்வெம்பெருமானுடைய உண்மையாகிய அழகிய மந்திரத்தையுங் கணித்து, மனமடங்கத் தவஞ்செய்கின்ற கிருச்சமதமுனிவன், ஒருநாள் அரிய யோகத்திலமர்ந்தனன் எ - று (௨)

நெடிது யோக முழந்தனபி னிகரி றவத்துக் கிருச்சமதன்
கொடிது விழித்துப் பார்த்தானக் கொடிய பார்வை தனினின்றும்
படியும் விசும்பும் பாதலமும் பறம்பு நடுங்கக் கடைநாளி
னிழியும் வண்ணம் மிகவார்த்திட் டெழுந்தான் வலியி னொருமைந்தன்

(இ - ள்) ஒப்பில்லாத தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் நெடிதுயோகமிருந்து, கொடுமையோடு கண்விழித்துப் பார்த்தனன்; அந்தக்கொடிய பார்வையினின்றும், பூமியும் ஆகாயமும் பாதலமும் மலையும் நடுக்கமெய்தவும், ஊழிகாலத்தின் இடியும் கீழ்ப்படவும், மிகவும் ஆர்ப்பரித்து வலிமையோடு ஒரு புத்திரனெழுந்தனன் எ - று

யோகமுழந்தல் - யோகிருத்தல் (௩)

செய்ய நிறமும் பொழுது திவளு முடியுங் குண்டலமும்
மெய்யுந் திணிதோ ளங்கதமும் பிறங்கு மரைநாண் முதற்பலவும்
வெய்ய கதிரோ னொளியழுங்க விளங்கு மொளியு முடையானைப்
பொய்யி றவத்துக் கிருச்சமதன் பொற்ப நோக்கி நடுங்கினான்

(இ - ள்) செவ்விய நிறமும், மிக்க அழகும், துலங்குகின்ற முடியும், குண்டலமும், வலிய தோள்களிற் பூட்டிய அங்கதமும் விளங்குகின்ற அரைஞாண் முதலிய பலவும், சூரியவொளியு மழுங்கும்படி விளங்கும் பேரொளியுமுடைய அவனை உண்மையாகிய தவத்தையுடைய கிருச்சமதன் அழகுறப்பார்த்து அச்சமெய்தினன் எ-று.

அங்கதம் - தோளணி. வெய்யகதிர் - சுடுகின்ற கிரணங்களையுடையவன், சூரியன். பொய்யில் - பொய்மையில்லாத, உண்மையாகிய வென்றும். (௪)

யாவ னிவனென் றமைந்தே யிறைவ னருளா லருமைந்த
னாவ னெனப்பின் றெளிந்தமுனி யாரீ யென்னப் பலிசொல்வான்
மேவு தவத்தோ யறியாமை வியப்பி தேநின் விழிபார்த்த
வோவில் பார்வை யிடையுதித்த வுனக்கு மகனே னென்னப்பா

(இ - ள்) கிருச்சமதமுனிவன் இவன் யாவனோ என்று துன்பமடைந்து, பின்னர், இறைவராகிய விநாயகப்பெருமான் திருவருளால் ஆகாருகின்ற புதல்வனாவானென்று தெளிவுற்று, நீ யாவன்! என வினவ, பலிசொல்லினான்: பொருந்திய தவத்தையுடைய எந்தையே! என்னையறியாமை ஆச்சரியமுடையதே. உன் கண்ணுற்றுப் பார்த்த கெடுதலில்லாத பார்வையினிடத்திற் பிறந்தேன் உனக்கு மகனேன் எ - று (௫)

அன்னை நீயே பிதாநீயே யனைத்து நீயே யெனச்சிலநாள்
மன்ன வளர்ப்பின் யானுமுமை வைய மொருங்கு தாட்படுப்பேன்
பின்ன ரமுதி யெனவலிமை யென்னப் பேசப் பெருமுனிவன்
றன்னு ணடுங்கி யதுமறைத்துத் தனையற் கிதனைச் சாற்றுவான்.

(இ - ள்) தாயு நீயே, தந்தையுநீயே, யாவுநீயே, என்னைச் சிலதினங்கள் பொருந்தவளர்த்ததால் யான் மூவகை யுலகத்தையும் ஒருசேர என்காற்கீ ழடக்குவேன்.

என்வலிமையைப் பின்னறியக்கடவாய்' எனக்கூற, பெரிய கிருச்சமதமுனிவன் தன் மனநடுங்கியதை மறைத்து மகனாகிய பலிக்கு இதனைச் சொல்லுவான். எ - று.

உள் - மனம் இஃது இடவாகுபெயர் (௬)

ஆதி யந்த நடுவின்றி யகண்டா கார மாயொன்றாஞ்
சோதி யான விநாயகர்தந் தொன்மை மனுநா னொன்றுண்டு
நீதி யாகக் கணித்துவரு நிகரி லதனை யுரைசெய்வேன்
றீதி லாது கணியுனக்குச் சித்தி யனைத்தும் வருமென்று

(இ - ள்) முதலும் இடையுங் கடையுமில்லாமல், அகண்டாகாரமாய் ஒன்றாகிய சோதிசொரூபரான விநாயகப்பெருமானுடைய பழைமையான மந்திரம் நான் எக்காலமும் நீதியோடு கணித்துவருகின்ற ஒப்பில்லாதது அதனை உனக்குக் கூறுவேன் குற்றமில்லாமற் கணிப்பாயாக உனக்கு எல்லாச்சித்திகளும் வருமென்று எ - று.

தந்தை தானே மகனாகிச் சாரு மென்னு முறையானு
மெந்தை பெருமா னருள்செய்த வியல்பி னானுங் கிருச்சமதன்
மைந்தன் றனக்குக் கணநாதா வென்னு மனுவை யுபதேசித்
தந்தண் மறைநூல் விதியானே யனுட்டிப் பனைத்தும் புகன்றொழிந்தான்.

(இ - ள்) தந்தையே மைந்தனாகி வருவானென்னும் முறைமையாலும், எந்தையாகிய கணேசப்பெருமான் அனுக்கிரகித்த வியல்பினாலும், கிருச்சமத முனிவன் தன் மகனாகிய பலியென்பவனுக்கு "கணநாதா" என்னுமந்திரத்தை யுபதேசஞ்செய்து அழகிய வேதநூல் விதிப்படி (அதனுடைய) அனுட்டிப்பு முதலிய வெவற்றையுங்கூறி விடுத்தனன் எ - று.

கணநாதா வென்னுமந்திரம் ஆதியிற் கவிமுனிவரால் தனக்கு உபதேசிக்கப்பட்டிருந்தது அதனையே கிருச்சமதமுனிவன் மைந்தனுக்குரைத்தனன் (௮)

நீறு மேனிக் கிருச்சமதன் னெடிய மலர்க்கான் பணிந்தேத்தி
யாற்றல் சான்ற பலியென்பா னருங்கோ ணிங்கா தந்தையைப்போற்
போற்றி யொருதா ணிலத்தூன்றிப் பொறிக ளடக்கி யுணவாதி
பாற்றிக் தவஞ்செய் தன்னெருட்டம் பதினா யிரத்தீர் தடிற்பாரி.

(இ - ள்) வலிமைமிகுந்த பலியென்பவன், அவ்விடத்தே நீங்காமல் பக்கலில், திருவெண்ணீறணிந்த உடலையுடைய கிருச்சமதமுனிவனுடைய நெடியமலர்போன்ற திருவடியைப்பணிந்து துதிசெய்து தனபிதாவைப்போல, துதித்து ஒருபாதத்தை நிலத்திலூன்றி ஐம்பொறிகளையடக்கி ஆகாரமுதலியவற்றை விலக்கிப் பதினாயிர வருடகாலந் தவஞ்செய்தனன் எ - று.

நீறுமேனி யென்பதற்குத் திருநீறுசணணிந்த திருமேனியெனினுமாம் ()

கொடிய தவத்தி னெழுந்துகனல் கொழுந்து பரந்து மிக்கசுடலு
நெடிய விசும்பி னமரரெலா நெடிது ணடுங்கி முறையிட்டார்
படியில் கருணை விநாயகனார் பரிந்து பலனுக் கருள்கொடுப்ப
வடியற் கதிரா யிரகோடி விரவி யென்முன் றோன்றினார்

(இ - ள்) தீக்கொழுந்தானது (அவன்செய்யுந்) கொடிய தவத்தினின்றெழுந்து (எங்கும்) பரவி மிகவுஞ் சுடுதலும், பெரிய ஆகாயத்திலுள்ள தேவர்கள் யாவரும

கொண்டமர்ந் திடநீ புரிந்ததவக் கோலக் கயிற்றி னிறுகுறக்கட்
டுண்டிங் கடைந்தாம் வரங்கேளென் றுரைப்பப் பலியும் வரங்கொள்வான்.

(இ - ள்) தண்ணிய தாமரைமலர்போன்ற கண்களும், தண்ணியதாமரை மலரிருக்கையும் பொருந்திய (திருமால் பிரமனென்னும்) இருவராலும், தீ விழியை யுடைய உருத்திரனாலும், பழமையாகிய வேதத்தினாலும் அளவிடப்படாத வொப்பற்ற நாம், பெரிய அன்பைக்கொண்டாக, நீ செய்த தவமாகிய வலியகயிற்றால் இறுகுறக்கட்டுண்டு இங்குவந்தனம். வரங்கேட்கவென்றுகூற, பலியும் வரங்கொள்வானாயினன் எ - று.

தண்டாமரைக்கண் மரிருவரென்றதை, 'தண் தாமரையாகிய கண் அமர் விண்டு" என்றும், "தண் தாமரைக்கண் அமரும் பிரமன்" என்றும் சொல்வகை செய்க. இரண்டாவதில், கண் - ஏழனுருபு (கஎ)

மருள்கால் வினைகள் கால்சீத்து வளர்மெய்ஞ் ஞானப் பேரொளியே
யருள்கா ரணித்த திருமேனி யலங்கு மொளியி னிரேணுவின்
லிருள்கால் சீத்து வையகத்தி லிலகா நின்றார் மழையாதிப்
பொருள்கால் பரிதி மதியங்கி யென்பேர் பூண்ட புலவர்களே

(இ - ள்) மயக்கத்தைச் செய்யும் வினைகளை யடியோடுகளைந்து வளர்கின்ற உண்மைஞான மயமாகிய பேரொளியே! தேவரீருடைய திருமேனி அருள்வடிவேயாம் விளங்குகின்ற அவ்வொளியின் அணுவொன்றால், மழைமுதலிய பொருள்களும் வாயுவும் சூரியனும் சந்திரனும் அக்கினியுமென்ப பேர்கொண்ட தேவர்கள் இருளையடியோடொழித்துப் பூமியில் விளங்குகின்றார்கள் எ - று.

மழையாதிப் பொருள்கால் என்றதற்கு மழைமுதலிய பொருள்களைத்தரும் என்ப பொருளுரைப்பினுமமையும் (கஅ)

வரையாப் பெருமைப் புகழோயிவ் வையமுழுது மற்றுனது
விரையாக் கவியா ணடக்கின்ற தன்றோ வேதசாத்திரமு
முரையா நின்ற வுலகனைத்து முன்றுசொரூப மெனவந்த
வரையா நின்று தெரிசனமே யனைத்து வரமு மடியேற்கே.

(இ - ள்) அளவிடப்படாத பெருமையுங் கீர்த்தியுமுடைய கடவுளே! இவ்வுலகமுழுவதுந் தேவரீரது கட்டளையால் நடக்கின்றதல்லவா? வேதசாஸ்திரங்களும் சொல்லுகின்ற வெல்லாவுலகங்களும் தேவரீரது சொரூபமென வந்த எல்லையாம். தேவரீருடைய தெரிசனமே அடியேனுக்கு எல்லாவரங்களுமாம் எ - று. (ககூ)

மூவா முதல்வன் றிருக்காட்சி முகிழ்த்த கருணை யாலயானே
தாவாப் பெருமப் பேறுடையே னென்றந்தை யவனும் பேறுடையா
னோவாத் தவமும் பயன்பட்ட தென்று மறியாச் சிறியேனிங்
கீர்வா நினைபி யாதறிந்திட் டறைகே னறைய மாட்டேன்.

(இ - ள்) அழியாத முதல்வராகிய தேவரீருடைய திருக்காட்சியாகிய அரும்பிய கிருபையால் அடியேனே கெடாத பெரும்பாக்கியமுடையவனாயினேன். என் பிதாவாகிய கிருச்சமதமுனிவனும் பாக்கியமுடையவனாயினான், (என்னுடைய) கெடாத தவமும் பிரயோசனப்பட்டது. யாதுமுணராத சிறியேன் இப்பொழுது

தேவரீருடைய சிறப்பை யானுணர்ந்து கூறுவேன். ஆ! ஆ! (ஒன்றுங்) கூறமாட்டேன். எ - று.

ஒன்று என்பது சிறுமையைக் குறிக்கவந்தது (கஎ)

மெய்யா வெனக்கு வரந்தருதன் மெய்ம்மையே யாயின் மூன்றுலகும்
பொய்யா தெனக்கு வசமாகப் புணர்க்க வலாரி முதற்றேவர்
கையாப் புடைய மரபினராய்க் கடைகாத் தடியே னிடுமேவ
லையா தாற்றிச் செவிகளுக்கு நவைதீர் கொற்ற மெனையுறுக.

(இ - ள்) உண்மையானவனே! அடியேனுக்கு வரத்தைத் தருதலுண்மையே யாயின் மூவுலகங்களும் உண்மையாக எனக்கு வசமாகப் பொருந்துக. வலாரியாகிய இந்திரன்முதலிய தேவர்கள் கையைக்கட்டிக் கொள்ளுதலுடைய மரபின்வழி வருபவர்களாய், கடைவாயிலிற் காத்திருந்து, அடியேன் கொடுக்குங்கட்டளையைக் கெடாமற் செய்து காதுக்குக் குற்றமொழிந்த வெற்றி என்னையடைக எ - று (கஅ)

எந்தப் பொருளை யெந்தெந்த வேலை யெளியேன் விழைந்தாலு
மந்தப் பொருளை யந்தந்த வமயத் தளியேற் களித்துறுக
சந்தப் பதும மலர்புரைநின் றாளி லன்பு மிகவுறுக
பந்தப் பவமவிட் டந்தத்திற் பரநா னுறுக வெனவிரந்தான்

(இ - ள்) எந்தப்பொருளை யெவ்வெக்காலங்களில் அடியேன் விரும்பினாலும், அந்தப்பொருளே அவ்வச்சமயங்களில் அடியேனுக்கு இலேசாகப் பொருந்துக. அழகிய தாமரைமலரையொத்த தேவரீருடைய திருவடியில் பிரீதியும் அன்புண்டாகுக. இறுதியில், பந்தமாகிய பிறவியையொழித்து அடியேன் பரத்தினையடைக வென்று யாசித்தனன் எ - று. (ககூ)

ஆரா வமுதா யடிநினைப்ப மடியா ருள்ளத் தலரூறும்
பேரா னந்தப் பெருக்கான பெரிய பெருமா னருள்செய்வார்
வாராய் சிறுவா நீவிழைந்த வரங்கள் கொடுத்தா நின்னேவ
றீரா தியற்றி மூவுலகுஞ் சேவை புரியு மெஞ்ஞான்றும்

(இ - ள்) ஆராவமுதமாய், திருவடியைத் தியானஞ்செய்யும் அடியவர் மனத்தில் ஊற்றெடுக்கின்ற பேரானந்த வெள்ளமும் பெரிய பெருமானுமாகிய கணேசப்பெருமான் அருள்புரிவார் சிறுவா! வருவாயாக நீ விரும்பிய வரங்களைக் கொடுத்தோம் மூவுலகினரும் உன் கட்டளையை நீங்காமற்செய்து எக்காலமும் உன்னைச் சேவை செய்வர். எ - று

ஆராவமுது - தெவிட்டாவமுதம்

மூவுலகும் என்றதற்கேற்பச் சேவைபுரியுமென அஃறிணை முடிபுதந்தனர்

இரும்பு வெள்ளி யிரணியத்தா லியன்ற மூன்று புரமுனக்கு
விரும்பிக் கொடுத்தா மவற்றினுக்கு விளம்பு நாமந் திரிபுரமே
யரும்பு புகழோய்க் குலகனைத்து மிறைவு நாமந் திரிபுரனே
கரும்ப னெரிய விழித்தவனோ கணையா லன்றி யழியாவே.

(இ - ள்) இரும்பினாலும் வெள்ளியினாலும் பொன்னினாலும் அமைந்த மூன்று புரங்களை உனக்கு விருப்புறுக கொடுத்தோம். அப்புரங்கட்குச் சொல்லுகின்ற

பெயருந் திரிபுரமெனப்படுமாம். அரும்பிய கீர்த்தியையுடைய உனக்கு உலகமுழுவதுஞ் சொல்லும் பெயருந் திரிபுரனெனப்படுமாம். மன்மதனை யெரியும்படி விழித்தருளிய சிவபெருமானுடைய ஒப்பற்ற கணையாலல்லாமல் அவை (வேறொருவராலும் எவ்வகையிலும்) அழியமாட்டா. எ - று.

திரிபுரன் - மூன்று நகரங்களையுடையவன்.
கருமபன் - கருப்புவில்லை யேந்தியவன், மன்மதன். (௨௧)

நினைத்த விடத்திற் றிரிபுரமு நினைக்கு முன்னஞ் செலும்வண்டு
கனைத்து மதுவுண் டெட்டிரண்டு கட்கைச் சடையா னொருகணையா
லனைத்து மழிக்கு மஞ்ஞான்றே யழியா முத்தி யுறுவையென
வெனைத்து மருளி யேரம்ப னிமமென் றுங்கு மறைந்தனனால்.

(இ - ள்) கருதுமுன்னரே நீ கருதியவிடத்திற்குத் திரிபுரங்களுஞ் செல்லும். வண்டுகளொலித்துத் தேனைப்பருகிக்கும் அடுக்கின்ற கொன்றைமாலையணிந்த சிவபெருமான் ஒரே கணையால் அவையெல்லாவற்றையுமழிக்கும் அப்பொழுதே அழியாத மோட்சத்தை யடைவையென்று எல்லாவற்றையும் அருளிச்செய்து விநாயகக்கடவுள் விரைந்து அந்தர்த்தானமாயினர். எ - று.

தேவர்களணிந்த மலர்மாலைகள் வாடாமையும், அவற்றில் வண்டுகள் மொய்யாமையுமாகிய இயற்கையுடையனவாகவும், "வண்டுகனைத்து மதுவுண்டெட்டிரண்டு கட்கைக்கை" என்றது உலகிலுள்ள கொன்றைமலர்க்குரிய இயற்கையை யுணர்த்திய விசேஷணமெனக். (௨௨)

பமர மடுக்குங் கடமத்தப் பனைக்கைம் முகவ னருள்வரங்கேட்
டமரர் நடுங்கிப் பெருங்கவலை யாழி படிந்தார் திரிபுரனும்
விமல தவத்துக் கிருச்சமதன் விரைத்தா ளிறைஞ்சிப் பேறுரைத்துச்
சமரிற் கிளருங் கருத்தினொடு தங்கி னனப்புட் பகனத்தில்.

(இ - ள்) வண்டுகள் மொய்க்கும் கன்னமதத்தையும் பனையைப்போன்ற துதிக்கையையுமுடைய யானைமுகக்கடவுள் அருள்புரிந்த வரத்தைத் தேவர்கள் கேட்டுப் பயந்து பெரிய துன்பக்கடலில் மூழ்கினார்கள். திரிபுரனும் புனிதமான தவத்தையுடைய கிருச்சமதமுனிவனுடைய வாசந்தங்கிய (தாமரைபோன்ற) திருவடியைப் பணிந்து (தான்பெற்ற) பேற்றைக்கூறி, போரில் விளங்கும் எண்ணத்துடன் புட்பகனத்திலே பொருந்தினன். எ - று.

ஆழி - ஆழமுடையது, வட்டமாயுள்ளது, கடல். (௨௩)

புள்ளூ றறியா விதழ்ப்பரந்து பொகுட்டு வாய்ந்த தெய்வமணக்
கள்ளூறியதா மரைக்கடவுள் கணேசர் கமலத் தாண்மலர்த்தே
னுள்ளூ றுளத்து வியாதனெனு மறவோய் பலியே திரிபுரனுந்
தெள்ளூறியமெய் வரம்பெற்ற செய்தி யிதுவா மெனப்புகன்றான்.

(இ - ள்) பறவைகளின் துன்பமறியாத இதழ்களைப்பரந்து, பொகுட்டமைந்த தெய்வமணம்பொருந்திய தேன்சிந்திய தாமரைமலரிலெழுந்தருளிய பிரமதேவன், கணேசப்பெருமானுடைய பாததாமரையின் தேனானது ஊற்றெடுக்கும் உள்ளத்தையுடைய வியாதமுனிவனே! பலியெனப்படுவோனே திரிபுரனுக்குத் தெளிவமைந்த உண்மையாகிய வரத்தைப்பெற்ற செய்தி இஃதாகுமெனக்கூறினன். எ - று. (௨௪)

அன்று பலிமா தவமாற்றி யமலன் அருள்சேர் புட்பகத்தை
யின்று புவியோர் வங்காள மெனப் பரவக்கொள வரமுனைப்ப
நன்று தெரிந்தா யினிச்சோம காந்த வவன்கோ னடத்தியது
மன்ற வறிவா யெனக்கிளப்பான் மறுவில் பிருகு மாதவனே.

(இ - ள்) சோமகாந்தராசனே! அக்காலத்திலே, பலியென்பவன், பெருந்தவஞ்செய்து கணேசப்பெருமானுடைய திருவருளையடைந்த புட்பகவனத்தையே, இக்காலத்தில் உலகினர் வங்காளமெனக் கூறுகிறபா அவன்பெற்ற வரத்தை (யான்) சொல்ல நன்குணர்ந்தனை இனி அத்திரிபுரன் அரசுபுரிந்ததையும் பொருந்த வுணர்வாயென்று பெருந்தவசியாகிய பிருகுமுனிவர் சொல்லுவாராயினர் எ - று (உ௲)

திரிபுரன் வரம்பெறுபடலம் முற்றிற்று

ஆகந் திருவிருத்தம் - ககூ௭௩

---

## திரிபுரனரசாட்சிப்படலம்.

அரிபுகைத்த கருளு நாலவா யைங்கையா றனைய தானக்
கரிமுகன் கருணை பெற்றுக் களித்தபி னுற்றல் சான்ற
திரிபுரன் யாது செய்தான் செப்பென வியாதன் கேட்பப்
பெரியகுண் டிகைசே ரங்கைப் பிரமனே துரைக்கப் புக்கான்

(இ - ள்) வல்லமைமிக்க திரிபுரன், சிங்கவாகனத்தைச் செலுத்தியருளும் தொங்கிய வாயையும் ஐந்துகரங்களையும் ஆறுபோன்ற மதப்பெருக்கையுமுடைய யானைமுக விநாயகக்கடவுள் கிருபையைப்பெற்று மகிழ்ந்தபிறகு யாதுபுரிந்தனன்? சொல்லவேண்டுமென வியாதமுனிவன் வினவ, பெரிய கமண்டலம்பொருந்திய அழகிய கையையுடைய பிரமதேவன் சொல்லத்தொடங்கினன் எ - று (க)

கண்டவர் வியக்கு மந்தக் கணேசமா புரத்தி லன்னோன்
கண்டகச் சிலையாற் கோயில் கண்டலங் கரித்துக் கண்ணுற்
கண்டதெய் வண்ண மந்த வண்ணமே கணேச மூர்த்தி
கண்டகச் சிலையாற் செய்து காதலாற் பதிட்டை செய்தான்

(இ - ள்) கண்டவர்கள் வியக்கத்தக்க அந்தச் சிறந்த கணேசபுரத்திலே, அந்தப் பலியென்பவன், வயிரக்கற்களால் திருக்கோயிலமைத்து அழகுசெய்து, தான் கண்ணுற்றறிசித்த தெய்வவண்ணமோ அவ்வண்ணமே கணேசப்பெருமானை வயிரக் கல்லாற்செய்து ஆசையோடு அவ்வாலயத்திற் பிரதிட்டைசெய்தனன் எ - று. (உ)

கண்டகம் - வயிரம்

நித்தலும் பூசை யாற்றிச் சிலபக லீங்கிப் பின்னர்ப்
பைத்தவா ருதிசூழ் மண்ணிற் பார்த்திபர் தமமோ டேற்றுப்
பத்தியி னிறைஞ்சி னோக்குப் பணிகொடுத் திறைஞ்சா தாரைச்
செற்றுவேற் றுருவி னேடும் விணைகொளச் செலுத்தி னானே.

(இ - ள்) நாடோறும் பூசைசெய்து சிலதினங்கள் கழிந்தபிறகு, பசியகடல் சூழ்ந்த பூமியில் அரசர்களோடெதிர்த்துப் பக்தியோடு பணிந்தவர்களுக்குப் பணிகொடுத்து, பணியாதவர்களைக்கொன்று வேற்றுவடிவுடன் ஆகாயத்தை (இடமாக) கொள்ளும்படி அனுப்பினான் எ - று. (௩)

இடங்கொள்பா தலத்தி னேகி யெரிமணிச் சூட்டுப் பேழ்வாய்
விடங்கொள்வா லெயிற்றி னோர்கள் விடங்களி லவர்க ளாகி
மடங்கவன் போரி லென்று மணிமுத லான செல்வ
மடங்கலுங் கவர்ந்து கைக்கொண் டவனியின் மீண்டு போந்தான்

(இ - ள்) இடங்கொண்ட பாதலத்திற்சென்று, பிரகாசிக்கின்ற மாணிக்கம் பொருந்திய உச்சிக்கொண்டையையும், பிளவுபட்ட வாயையும், விஷத்தையும், வெளிறிய பல்லையுமுடையவர்கள், விஷமில்லாதவர்களாகி மடங்கும்படி வலிய போரில்லையென்று, இரத்தினமுதலிய செல்வங்கள் முழுவதையுங் கிரகித்து உடன் கொண்டு பூமியில் திரும்பவும் வந்தனன் எ - று (௪)

திக்கினும் பாத லத்துஞ் சிறந்தவா னிலத்துஞ் சாலத்
தொக்கதா னவர்க ளெல்லாந் துன்னினர் வணங்கிப் போற்ற
மிக்கருட் பார்வை நல்கி வேண்டிய சிறப்புச் செய்து
தக்கதன் பதாதி யாக்கிக் கொண்டனன் றறுகண் வீரன்

(இ - ள்) திசைகளிலும், பாதலத்திலும், சிறந்த ஆகாயத்திலும் மிகுதியாகக் கூடிய அசுரர்கள் யாவரும் ஒன்றுகூடி வணங்கித் துதிசெய்ய, மிக்க கிருபாநோக்கஞ் செய்து, வேண்டிய சிறப்புகளைத்தந்து, தகுதியாகிய தன் சேனையாகச்செய்து கொண்டனன் அஞ்சாமைத் தன்மையுடைய அசுரதிரிபுரன் எ - று

பதாதி - காலாட்சேனை   தறுகண் - அஞ்சாமை (௫)

விசிமுர சியம்ப வேலும் விசிகமு மழுவுந் தண்டு
மசியுமற் றெவையு மேந்தி யவுணர்க டிங்க ளில்லா
நிசியென மருங்கு மொய்ப்ப ஞெரேலெனப் புவியி னேகிப்
பசியபொன் னகரிற் கற்பப் பணிமலர்ச் சோலை புக்கான்.

(இ - ள்) இழுத்துக்கட்டிய பேரிகை யொலிசெய்யவும், வேலாயுதமும், அம்பும், மழுவும், தண்டமும், வாளும், மற்றெல்லா ஆயுதங்களுந் தாங்கி, அசுரர்கள் அப்பக்கத் திரவுபோலப் பக்கலில் நெருங்கிவரவும், விரைவாகப் பூமியினின்று சென்று, பசிய பொன்னகரத்திலே குளிர்ந்த கற்பகமலர்ச்சோலையிற் புகுந்தனன். எ - று

திங்களில்லா நிசி - சந்திரன் இல்லாத இரவு இஃதிருளை விசேடிக்கக் கூறியது. அமாவாசியையெனக் கொள்க. ஞெரேல் - விரைவுக்குறிப்புத்தரு மிடைச்சொல். பொன்னகர் - தேவநகரம் (௬)

மைந்துறு வீர ராங்கு வைகிய சிலத ரோடு
ஈந்தன வனத்தைச் சாட னவையறு தேவ னூர்த
தித்திறற் கோடிச் சொன்னு மெய்திய வவுணர் கோனு
முந்தினன் றாதை தம்மை யவருமப் போதுரைக்க லுற்றார்.

(இ - ள்) வலிமைபொருந்திய வீரனும் [illegible] வல்லமையில் [illegible] குற்றமற்ற விதவனாதர்கள் இந்திரனுக்கு விரைந்து [illegible] யத்தை) கூறினார்கள். ஆக்கைகெடாத அவுணர் தலைவனான திரிபுரனும் [illegible] செலுத்தினன். அத்தூதுவருஞ்சென்று (இந்திரனுக்குச்) சொல்லலானார்கள். எ - று.

மைந்து - வலிமை   சிலதர் - ஏவலாளர் (எ)

எரியுமிழ் குலிச வேற்கை யிந்திர வெங்கள் கோமான்
திரிபுரனிவற்குப் போந்தான் றெரிசனஞ் செய்ய வேமோ
புரிவொடும் வாரா யாகிற் பொன்னுல காட்சி நீக்கிப்
பரிவுறத் தரும லோகம் புகுத்துவான் படர்ந்து நின்றான்.

(இ - ள்) தீயைச் சொரியும் வச்சிரவேலையேந்திய இந்திரனே! எங்கள் தலைவனான திரிபுரன் இங்கே வந்துள்ளான். அவனைத் தெரிசனஞ்செய்ய வருவாயாக. ஆசையோடு (அங்ஙனம்) வாராதிருப்பையாயின், (உன்னுடைய) பொன்னுலக ராச்சியத்தை யொழித்து, துன்பமடையும்படி இயமதருமலோகத்திற் புகுத்தும்படி வந்திருக்கின்றான். எ - று. (அ)

அல்லதூஉ மடுபோ ராற்று மாற்றலுண் டாயின் வல்லே
வல்லபல் படையி னோடும் வருகவென் றுரைத்தா னியாது
சொல்லுவ தென்றார் கேட்டுத் தொடிக்கரத் தூணிற் றாக்கி
நல்லதென் றிலங்க நக்கு நாமவேற் குலிச வேந்தன்.

(இ - ள்) அன்றியும், (எம்மிறைவனோடு) கொல்லுகின்ற போர்புரியும் வல்லமையுண்டாயிருக்குமாயின், விரைவில் வலியமைந்த பலபடைகளோடும் (போர்க்கோலமாய்) வருகவென்று கூறினன் (ஆதலின்) நீ சொல்லுவதியாதென்று கேட்டனர். அச்சத்தைச்செய்யுங் குலிசவேலேந்திய இந்திரன்கேட்டு, தொடியணிந்த கையைத் தூணிலடித்து நல்லது! என்று விளங்கச் சிரித்து எ - று. (கூ)

கடிமலர்க் கமலம் பூத்த காடெனக் கண்கள் சேப்ப
முடிவது தேரா னாகி முற்றுபோர் கடுத்தே தென்னா
விடியிடித் தென்னவன் சொல்லியம்பிமற் றவரைப் போக்கிக்
கொடிநகர் முரசிற் சாற்றிக் கொழும்படை யெழுக வென்றான்

(இ - ள்) வாசந்தங்கிய தாமரைமலர்விகசித்தகாடுபோலக் கண்கள் சிவக்க, முடிவது (இன்னதென்று) உணராதவனாகி, முடிவாகிய போருக்குவந்தேனென்று, இடியிடித்தாற்போலக் கொடுஞ்சொல்லாற்கூறி, அத்தூதுவரை யனுப்பிவிட்டு, துவசங்கட்டிய நகரத்தில் முரசறைவித்து, செழியபடை யெழுகவெனக்கூறினன் எ - று.

போர்க்கடுப்பேனெனக் கூறவேண்டியிருப்ப, அடுத்தேனென்றது துணிவு பற்றிவந்த காலவழுவமைதி. (௧௦)

விடுத்திடுந் தூதர் மீண்டு விண்ணவர் கோமான் போகின்
கடுத்தலை கருதி நின்று மீளயென் றிறைஞ்சிச் சொன்னார்
தொடுத்தபூண் கழற்கால் வீரன் றுணர்புடை மெரியி னெய்யை
மடுத்தெனை வெகுளி பொங்க வரவினை நோக்கி நின்றான்.

(இ - ள்.) விடுத்த தூதுவர்கள் திரும்பிவந்து, தேவர்கள் தலைவனாகிய இந்திரன் இப்பொழுது போருக்குவருதலே வினைத்திருக்கின்றானென்று பணிந்துசொன்னார்கள். அழகிய வீரக்கழலணிந்த காலையுடைய வீரனாகிய திரிபுரன் கொழுந்துவிடுகின்ற நெருப்பில நெய்யைப் பெய்தாற்போலக் கோபமதிகரிக்க, (இந்திரன்போருக்கு) வருகையை எதிர்பார்த்திருந்தனன். எ - று.

துணர்-பூங்கொத்து, துணர்படுமெரி யென்றதற்குக் கிளைத்த நெருப்பெனக்.

படையொடு படைக ளேந்தும் பாங்குற மணிப்பொற் கோயிற்
கடைமுக னமரா பேரமான களிற்றா சிவர்ந்து சொறக்
குடைகொடி மிடைய வார்ந்த குருமயிற் கவரி துள்ள
வுடைகட லோதை யென்ன வொலிமுர சியம்பச் சென்றான்.

(இ - ள்.) நால்வகைச் சேனையும் ஆயுதங்களோடும் பக்கத்திற்பொருந்த, அழகிய பொன்னாலாகிய அரண்மனைவாயிலின் கடைமுகத்தினின்று, யானைகளுக்கரசாகிய ஐராவதத்திலாரோகணித்து, வெற்றிக்குடைகள் கொடிகள் நெருங்கவும், பொருந்திய நிறமமைந்த மயிற்பீலியுஞ் சாமரையுந்துள்ளவும், உடைபட்ட கடலொலிபோல ஒலிக்கின்ற பேரிகைமுழங்கவும், தேவராசனாகிய இந்திரன் (போர்க்கோலமாகிச்) சென்றனன். எ - று. (௧௨)

கரணங்க ளுயிர்க்கு வாய்ந்த காட்சியிற் றனக்கு வாய்ந்த
வரணங்கள் விசித்த வாக்கை யமரர்கண் மருங்கு சூழ
விரணங்கொ ளயிர வொள்வே லிந்திர னெய்த லோடு
மிரணங்கண் டனைய னாகித் திரிபுர னமரி னேற்றான்.

(இ - ள்) உயிர்க்குக் கரணங்கள் துணையாகப் பொருந்தியகாட்சிபோல, தனக்குப்பொருந்திய காவல்களைக்கட்டிய உடலையுடைய தேவர்கள் பக்கஞ்சூழ, இரணத்தைக்கொள்கின்ற ஒளிவயிரவேலையேந்திய இந்திரன்(போருக்கு) வரவும், திரிபுரன் இரணத்தைக் கண்டாற்போன்றவனாகிப் போர்செய்யுங் கருத்தினெதிர்த்தனன். எ - று.

"கரணங்க * * * இந்திரன் எய்தலோடும" என்றது உயிர்க்கு அந்தக்கரண புறக்கரணங்கள் துணையானவாறு, இந்திரன் தன் பரிவாரங்களாகிய தேவர்கள் புடைசூழ்ந்து துணைவரவுமெனபதாம. (௧௩)

புண்ணிய மோடு பாவம் பொருதெனு வவுண சேனை
விண்ணவ ரோடு போ ராற்றி மிடலறி தொழிய நோக்கிப்
புண்ணிடை வேலிட் டனைய பொருதெழு மனத் தனாகித்
திண்ணிய வாமா ஊர்ந்து திரிபுர னமரிற் செய்தான்.

(இ - ள்) புண்ணியத்துடன் பாவமானது போர்செய்தாற்போல அவுணர் சேனையானது தேவர்களோடு (எதிர்த்துப்) போர்செய்து, சிறிது வலிமையொழிய, திரிபுரன் பார்த்து, புண்ணில் வேற்படையைச் செருகினாற்போல, பொருமுதலுற்ற மனமுடையவனாகி, வலியதாகிய குதிரையை வாகனமாகக்கொண்டு (தேவர்சேனையை) யெதிர்த்தனன்.

அமரில் என்பதை அமரினாட்டெனக்கொண்டு, தன்மெய்புனைந்த படைக்கலங்களோடு மாற்றானை எதிர்த்தனெனக் கூறினுமாம். (௧௪)

அற்றன படையோ டங்கை யறுந்தன தாரோ டார
மிற்றன கழலோ டெண்டோ ளிறந்தன முடியோ டென்னி
செற்றின குடையோ டியூர்க ளிந்தன வலியோ டேக்க
மற்றிய வமரர் சேனை முரிந்தன வவுணன் றாக்க.

(இ - ள்.) அவுணனாகிய திரிபுரன் தாக்குதலால், ஆயுதத்தோடு அழகிய கைகளற்றன. மாலையோடு மார்புகள் அறுந்தன. வீரகண்டாமணியோடு ஒளிரிய கால்கள் இறுபட்டன கிரீடத்துடன் சிரங்கள் அழிந்தன குடலுடன ஈரல்கள் விழுந்தன. வல்லமையுடன் விடாமுயற்சிகள் சிதறின. தேவசேனைகள் (இவ்வகையாக) முடிவுற்றன. (தப்பினவை) முரிந்தோடின. எ - று. (௧௫)

மந்தரங் கலக்கப் பட்ட வாருதி யனைய சேனை
யிந்திர னோக்கி நோனா னெரியெழ விழித்துச் சீறிக்
கந்தடு களிநல் யானை காலெனக் கடுக வுந்தி
வெந்திற லவுண னோடு வெய்யபோர் விளைத்தா னன்றே.

(இ - ள்) மந்தரகிரியாற் கலக்கப்பட்ட பாற்கடலைப்போன்ற (தேவர்) சேனையை இந்திரன்கண்டு மனம்பொறாதவனாகி, (கண்களில்) தீசொரியக் கோபித்து, கட்டுத்தறியைக் கோபிக்கின்ற நல்லமதச் செருக்குடைய ஐராவதமென்னும் பட்டத்து யானையைக் காற்றுப்போல விரைந்துசெலுத்தி, வெவ்விய வலியுடைய திரிபுரனுடன் கொடும்போர் புரிந்தனன் எ - று. (௧௬)

தொடுத்தபல் வாளி விட்ட தோமரங் குந்த நேமி
விடுத்திடும் பாச மோச்சும் வெய்யவாண் முசலந் தண்டந்
தடுத்தறு மந்தி ரங்க டமையுநேர் விடுத்துத் தள்ளி
யுடுத்திரள் சிந்த வார்த்திட் டுந்தினன் பரியைத் தீயோன்.

(இ - ள்.) பலபாணங்களைத் தொடுத்தனன் இருப்புலக்கை ஈட்டி சக்கரம் இவற்றைவிட்டனன் பாசத்தை வீசினன் கொடியவாள் முசலம் தண்டம் இவற்றைச் செலுத்தினான் கொடியோனாகிய திரிபுரன் நட்சத்திரத்தொகுதி சிந்தும்படி ஆர்ப்பரித்து, இந்திரனேவிய அஸ்திரங்களைத் தடுத்து அஸ்திரங்களையு நேரேவிடுத்துத் சாய்த்து, குதிரையைத் தூண்டினன் எ - று (௧௭)

பாய்பரி தனது முன்கால் பனைக்கைமால் யானை நெற்றித்
தோய்தர நாட்ட லோடுந் துணையென வவுணர் கோமான்
காய்கதிர் வாளா லோச்சிக் கடவுளர் கோமான் செங்கை
வாய்தரு வயிர வேலு மானமு நிலத்தில் வீழ்த்தான்

(இ - ள்) பாய்ந்துசெல்லுங் குதிரையானது தன்னுடைய முன்காலை, பனைபோன்ற துதிக்கையுடைய பெரிய ஐராவதத்தின் நெற்றியிற்படும்படி வைத்தவுடனே, அவுணர்தலைவனான திரிபுரன் காய்கின்ற கிரணத்தையுடைய வாட்படையால் வெட்டி, தேவராசனாகிய இந்திரனுடைய செங்கையிலுள்ள வச்சிரவேலையும் மானத்தையும் நிலத்தில் வீழ்த்தினன். எ - று (௧௮)

கற்றவன் கடிதின் மீட்டக் கைதுக நெளிந்து தாழ
வுற்றிடு நிலத்தில் வீழ்ந்த வுருப்பவிர் குலிசத் தைக்கொண்

டங்கின்மேல் வந்த வேழ மத்தகந் தடிந்து வீரஞ்
சிந்தினன் றீயோன் வல்லே தேவர்கோ னிலத்திற் பாய்ந்தான்.

(இ - ள்.) கொடியோனாகிய திரிபுரன் குதிரையை விரைந்து திருப்பி, அக் குதிரையை வளைந்து தாழ்ச்செலுத்தி, நெடியபூமியில் விழுந்த அழகுற்று விளங்குகின்ற வச்சிரத்தைக் கையிற்கொண்டு, அவ்விடத்தில மேலுற்றுவந்த ஐராவதமென்னும் யானையின் மத்தகத்தை வெட்டி வீரத்தை யழித்தனன். உடனே தேவர்கள் தலைவனான இந்திரன் பூமியிற் குதித்தனன் எ - று.

குலிசம் - வச்சிராயுதம் (௧௯)

உழுந்துகண் ணடியின் மேலா லுருளுமு னெழுந்து தாவிக்
கொழுந்துகொள் வீரத் தோடங் குதிரைமே லிருந்தான் றன்னைச்
செழுந்தனிக் கடகக் கையாற் சென்னியிற் புடைத்தான் றேவர்
விழுந்துவந் தனைசெய் நோன்றாள் வேந்தன்மூர்ச் சித்தான் றீயோன்.

(இ - ள்.) தேவர்கள்பணிந்து வணக்கஞ்செய்யுஞ் சிறந்த பாதங்களையுடைய தேவேந்திரன், உழுந்தானது கண்ணடியின்மேலே உருளுதற்குமுன் முற்பட எழுந்து பாய்ந்துசென்று, மிகுந்தவெற்றியோடும் புரவியின்மேலிருந்த திரிபுரனை, செழியவொப்பற்ற கடகமணிந்த கையினாலே தலையிலடித்தனன்; கொடியோனாகிய திரிபுரன் மூர்ச்சித்தனன். எ - று.

புடைத்தல் - மோதுதல்.

உழுந்துகண்ணடியின் மேலாலுருளுமுன னென்றது நிகழ்ச்சியின் விரைவினை விளக்கக்கூறியதாம். (௨௰)

மூர்ச்சைநீட் டொழிந்த பின்னர் முடிகெழு மமரர் வேந்தன்
றார்ச்சிறை மார்பத் தோடித் தாக்கினன் வலனு மூர்ச்சித்
தோர்ச்சியுற் றனியென் னோடு மொன்படை யொழித்து மல்லுப்
போர்ச்செயல் விழைக வென்றான் பொருக்கென வவுணன் சொல்வான்.

(இ - ள்.) (திரிபுரன்) மூர்ச்சைதெளிந்தெழுந்தபிறகு, விளங்குகின்ற கிரீடமணிந்த தேவேந்திரனுடைய மாலையணிந்த மார்பிற்பாய்ந்து மோதினான். அவ்விந்திரனும் மூர்ச்சையடைந்து அதுதெளிந்து யோசித்து நீ யென்னோடும் ஆயுதப்போரை யொழித்து மற்போர்புரிக வென்றனன் அவுணனாகிய திரிபுரன் (அதற்குவிடையாக) விரைந்து கூறுகின்றான். எ - று. (௨௧)

பதங்கமோ வடவைத் தீயைப் பட்டாசிறைக் காலிற் சிந்துங்
கதங்கொடா அமெனக்கு நீமனக் கருத்திலு ளழிந்தா யஞ்சே
லிதங்கெடா திருக்க வேண்டி னிருநிலத் திருக்கை யீந்தேன்
மதங்கொள்வா னகர்க்குச் சென்று வாழ்கநின் கிளையோ டென்றான்.

(இ - ள்.) வடவாமுகாக்கினியை ஒருபதங்கமோ தன்னுடைய வீசுகின்ற சிறகின் காற்றினாலழிக்கும்? கோபத்தைச் சிந்தும் எனக்கு நீ சிறிதும் மனதில் வருந்தி [illegible] அஞ்சவேண்டாம். நன்மையழியாதிருக்க வேண்டுமாயின், பெரியபூமியில் (உனக்கு) வாழ்க்கையைக் கொடுத்தேன். கெர்வப்படாமல் அமரேபோய் உன் சுற்றினை [illegible] எ - று.

சொரிய இந்திராணி பூமியின்மேல்விழுந்து, அம்மவோ ! அம்மவோ ! என்று புலம்பித் துன்புறறு, தேவர்களோடும் பொன்னுலகத்தை விடுத்து (அவன்வீழ்ந்த விடத்துக்கு) ஓடிப்போயினள். எ - று (உசு)

நிலைபொழி யமர ரெல்லா நேரிழைச சசிதன் னோடு
மிலைப்புடன் களைதுப் போகி யிநதிரன் கிடப்பக் கணடு
தலைப்படி மெழுத்தோ வென்று தளாவுநீர்த தவனோ டந்த
மலைப்புழை முழைக டோறும வைகினா கரநது மாதோ

(இ - ள) இருககைகயைவிடுத்த தேவர்கள யாவரும், இநதிராணி தேவியோடும்சென்று, இநதிரன இளைப்புடன் களைத்துக்கிடக்கக் கணடு, தலையிலெழுதிய வெழுததோவென்று, அவன மனததளர்ச்சியை யொழிதது, அவவிநதிரனுடன் அந்த இமயமலையின் புழைகளாகிய குகைகளிலெல்லாம ஒளிநது வாழநதாரகள். எ - று ()

செங்கண் நீஙகி யநதத திரிபுா னனகு கோடடு
வெங்கயத் திவாநது வெறறி முரசொடு * வளைகள் விமமப்
பொங்கெழின மாட மேடைப பொனனகா புகுநது வேநதன
றங்கிய கோயில சாாநது தவிசினவீற றிருநதா னனறே.

(இ - ள) அநதத திரிபுரன போர்களதலையொழிந்து, வெவவிய நான்கு கொமபுகளையுடைய ஐராவததினமேலேறிககொணடு வெறறிமுரசும (வெற்றிச்) சஙகுமும ஒலிகக, மிகக அழகையுடைய மாடஙகளும மேடைகளும பொருநதிய பொனனகரததிற பிரவேசிதது, இநதிரனவசிககும கோயிலையடைநது, சிங்காசனததில வீறறிருநதனன எ - று (உஅ)

நிரமபிய களிப ளைகி நீடுவான குடிக ளெலலாம
பரமபுதன னாணைக குளளே பயிலுமா முரசிற சாறறி
யரமபையா நடனஞ செயய வமைநதுககின னராகள் வீணை
நரமபுளாந திசைக கேடக்க நலததக வாசு செயதான.

(இ - ள) நிரமபிய களிபபுடையவனாகி, தொனமைவாயநத சிறநதகுடிகள யாவரும பரவிய தனகட்டளைககுடபடடு வாழுமபடி பேரிகையறைநது, அரமபா ஸதிரீகள் நடனஞசெய்யவும, கினனராகள வீணையின நரமபுகளைத தடவி இசைப பாட்டுகளை யெழுபபவுங கடடளையிடடு, நனமையாக அரசுபுரிநதனன. எ - று.

களியன - களிபபுடையாவன. (உகூ)

சிலபகல் கழிநத பினனாத திசைமுக னுலகஞ சாாநதா
னலரவன் வருவ தெணணி யாழியா னுலகம புக்கான
மலரவன் றனனைக் கொண்டு மாலுமவை குநத நீஙகிப்
புலவாகள் காந்து வைகும பொனனிம யததைச சாாநதான.

(இ - ள.) சிலதினங்கள் செனறபிறகு, (திரிபுரன்) பிரமனுடைய சத்திய லோகததை யடைந்தனன். பிரமதேவன (அவனை) வருவதை யோசித்து, சக்கராயுத

* முரசொடுவளைகள் விம்மவென்றும் பாடம். வளைகள் - மலைகள் தம்மைச் சிறகரிந்த இந்திரனின்மையின் தாம் சுகப்பட்டனவென மலைகள் பூரித்தனவென்

மேந்திய விண்மூர்த்தியின் வைகுந்தலோகத்திற் சென்றனன். அந்தத் திருமாலும் பிரமதேவனை யுடன்கொண்டு வைகுந்தத்தைவிட்டு, தேவர்கள் மறைந்துவசிக்கும் பொன்மயமான இமயமலையை யடைந்தனன். எ - று. (௬௦)

சார்ந்தவன் பிரம னில்லாச் சத்திய வுலகை நோக்கி
யார்ந்ததன் னூணை யங்கு மமைத்துவை குந்தத் தெய்தி
யூர்ந்திடு மணையி னுறு மொழிந்தமை யுணர்ந்திட டாங்கு
கூர்ந்தன னூணை வைத்துக் குவலயந் திறங்கி னானே.

(இ - ள்) (அவ்வாறு) சேர்ந்த திரிபுரன் பிரமதேவனில்லாத சத்தியலோகத்தைப் பார்த்து, பொருந்திய தன் ஆக்கினையை அங்கே (நடக்கும்படி) நிறுத்தி, வைகுந்த நகரமடைந்து, திருமாலுஞ் சென்றமையை யறிந்துகொண்டு, அவ்விடத்துங் கூர்மையான தன் ஆக்கினையை நிலைநிறுத்திவிட்டுப் பூமிக்குவந்தனன் எ - று.

ஊர்ந்திடுமணையினான் - நடந்துசெல்லும் பாம்பைச் சயனமாகவுடையவன்; திருமால். (௬௧)

வரம்பல கொடுத்த வைந்து கைவள்ளலைப் பூசை யாற்றிப்
பரம்பர வரமுன் றந்த பாழியம் புரிசை மூன்று
முரம்பெற வின்று நாயேற் குதவுக வென்று நின்றான்
புரம்பல வளத்தி னோடும் பூத்தன விசும்பி னம்மா.

(இ - ள்) பலவரங்களை யருளிய ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகப் பெருமானைப் பூசைசெய்து, பரத்துக்கும்பரமானவனே! முன்னே (எனக்கு) வரமாகக்கொடுத்த பெரிய அழகிய மும்மதில்களையும் வலிமையோடு இப்பொழுது அடியேனுக்கு அருள்புரிகவென்று நின்றனன் (திரிபுரன்) அப்பொழுது ஆகாயத்திற் பலவளங்களோடும் முப்புரங்கள் தோன்றின எ - று. (௬௨)

வேறு

கற்பகப் பொதும்பருங் காம தேனுவு
மொற்பமா நிதிகளும் பொருவி லாதபல்
லற்புதப் பொருள்களு மளவில் செல்வமு
முற்பவித் தனவுறு புரங்கண் மூன்றுமே.

(இ - ள்) கற்பகச்சோலையும், காமதேனுவும், அழகுபொருந்திய (சங்கநிதி பதுமநிதிமுதலிய) நிதிகளும், ஒப்பில்லாத பல அற்புதப்பொருள்களும், எல்லையில்லாத செல்வமும், பொருந்திய முப்புரங்களிலும் உற்பவித்தன எ - று.

நிதி - எடுக்குந்தோறுங் குறைபடாதது. (௬௩)

இந்திர னுலகமு மெண்ணத் தக்கமாக் கிய
வந்தண னுலகமு மாழி யேந்திய
சுந்தர னுலகமுந் துணையு றாவெனி
னிங்கொரு புரங்கள் பேசற் பாலதோ.

(இ - ள்) இந்திரலோகத்தையும் பிறலோகங்களையும் படைத்தபிரமனுடைய சத்தியலோகமும், சக்கராயுதமேந்திய அழகுவாய்ந்த திருமாலினுடைய வைகுந்த

லோகமும் (முப்புரங்கட்குச்) சமானமாகாவெனின் வேறொரு நகரமானது ஒப்பாகச் சொல்லுந் தன்மையையுடையதோ? எ - று.

அந்தணன் - பிரமன் அழகிய தன்மையையுடையோன். (௬௪)

தடையற வெங்கணுஞ் சாரலல்லவா
யுடையவன் முத்தியை யுறும்போதலா
லிடையழி வின்மையி னெயில்களு மூன்றுமுன்
னடைதரு சூக்கும வாக்கை போன்றவே.

(இ - ள்) எல்லாவிடங்களிலுந் தடையின்றிச் செல்லவல்லமையுடையனாகிய திரிபுரன் முத்தியையடையும் அக்காலத்தில்லாமல், இடையிலே அழிவில்லாமையால், மும்மதில்களும் முன்னேயடைந்த சூக்கும தேகத்தை யொத்தன. எ - று.

வாய் - வழி. வல்லவாயென்றதால் வல்லமையென்றும். (௬௫)

கரும்பொனின் வெள்ளிபொனிற் காமர் செம்பொனிற்
றரும்பெரு முப்புர முயிர்த மக்கெலாம்
விரும்பிய போகங்கள் விளைத்து நல்கித்
மரும்புதல் செய்யுமுன் றாக்கை யுமொப்புடை

(இ - ள்) கரும்பொன்னினாலும், வெண்பொன்னினாலும், அழகிய செம்பொன்னினாலுஞ் செய்துள்ள பெரிய திரிபுரங்களும், உயிர்கட்கெல்லாம் இச்சித்த போகங்களை யுண்டுசெய்து, நல்ல இதத்தையும் உண்டாக்குகின்ற மூவகைத் தேகத்தையும் ஒத்திருக்கும். எ - று.

கரும்பொன் வெண்பொன் செம்பொன் என்பன முறையே இரும்பு வெள்ளி பொன் என்பனவாம். மூன்றாக்கைகள் - தூலதேகம் சூக்குமதேகம் காரணதேகமென்பன. (௬௬)

திண்டிற லுடையவன் றிரிபுரப்பெயர்
கொண்டவன் றிரிபுரங் குலவி நின்றமை
கண்டனன் களியுறு களிப்பி னீடிறை
னண்டர்கள் பிரான்றிரு வருள்வ ழுத்தினன்

(இ - ள்) மிக்க வல்லமையுடையவனாகிய திரிபுரனென்னும் பெயருடையவன் திரிபுரங்கள் சமைந்து நின்றமையைக் கண்டனன், எல்லையற்ற ஆசையதிகரித்தனன். தேவர்களுக்குத் தலைவராகிய கணேசப்பெருமானுடைய திருவருளைப் பணித்தனன். எ - று. (௬௭)

தனையர்கண் மூவரைத் தன்ம னத்திற
னினையுமுன் றோற்றின னவர்க்கு நீடிய
வனையமுப் புரமுமூன் றாக வைகிய
வனைபுக ழுலகமும் வழங்கி னானரோ.

(இ - ள்) மூன்று புத்திரர்களைத் தன் மனத்தினாலே நினைக்குமளவின் படைத்தனன். அவர்களுக்குப் பெரிய அந்தத் திரிபுரங்களையும் மூன்றாகவிருக்கப் புகழ்பொருந்திய உலகத்தையுங் கொடுத்தனன். எ - று.

மூன்றாக வைகிய வுலகமென்றது சுவர்க்க மத்திய பாதலமென்னுந் திரிலோகங்களை. (௬௮)

செய்பவர்கள் மனத்தில் விரும்பிய எல்லாப்பொருள்களையும் (இரும்பியவண்ணமே) கொடுத்து, அவர்கள் செல்லவிரும்பிய விடத்திற்குச் சென்று (இவ்வண்ணமாக) இருந்து, நீங்காத பகைஞர்களைக் குலத்தோடும் அழியும்படி யழித்து, ஆகாயத்திலிருக்கும் தேவர்களஞ்சும்படி யிருந்தனன். எ - று (௬௫)

மீட்டுமிரு வரைச்சண்டன் பிரசண்ட னெனமனத்தின் வேறுவண் டாக்கிக்
கோட்டமிலசண் டனைபபிரம வுலகத்து மாதவன்வை குந்தந் தன்னி
லீட்டுபுகழ்ப் பிரசண்டன றனையுமவர் போலிருப்ப வேவிப் பின்னர்
மோட்டிளமென் முலைமனைமா துடன்கூடி யொருமகனை மூகிழ்த்தா னன்றே.

(இ - ள) சண்டன பிரசண்டனென்று மீட்டும் வேறிருவரை மனதாறபண்டத்து, கோணுதலில்லாத (வலியுடைய) சண்டனைப் பிரமலோகத்திலும், தேடிய பிரதாபத்தையுடைய பிரசண்டனை விஷ்ணுலோகத்தில் வசிக்கும வைகுந்தலோகத்திலும், அவர்களைப்போலிருக்க கட்டளையிட்டு, பிறகு, பூரித்த இளமைதங்கிய மெல்லிய முலையையுடைய மனைவியுடன சேர்ந்து ஓர்புதலவனைப் பெறறனன. எ - று.

பிரசண்டனறனையு மென்பதிலுள்ள உம்மையைப்பிரித்து வைகுந்தந்தன்னிலென்பதனேடு கூட்டிககொள்க. (௬௭)

திரிபுரனிவ் வாறுலக முழுவதுந்தாட படுத்துமிகு செலவ மல்க
வரிமதர்த்த கண் மடமாதர் பெருமபோகக கடலமூழ்கி யறங்கள் பேணி
விரிபுகழெண் டிசைபோாப்ப விநாயகாபூ சனையோடு விமலை பாக
ருரிமைகொளுஞ் சிவலிங்க பூசனையும் புரிந்துலப்பில காலம வாழ்ந்தான்.

(இ - ள) திரிபுரன் இவ்வகையாக உலகமுழுவதையுந் தன்னடிப்படுத்தி, மிக்க செல்வமதிகரிகக, அரிபரந்து மதர்த்த கண்களையுடைய இளமை வாய்ந்த மங்கையர்களது மிகக போகசாகரததின மூழ்கி, தருமங்கள் (எல்லாவற்றையும்) காத்து, பரந்த கீர்த்தியானது எட்டுத்திசைகளையு மறைககும்படிவிநாயகக்கடவுளபூசையுடன், விமலையாகிய உமாதேவியாரைப பாகமாகவுடைய சிவபெருமானுக்கு உரிமையாகக கொள்ளததகக சிவலிங்கபூசையையுஞ் செய்துகொண்டு, எல்லையில்லாத (நெடுங்)காலம் வாழ்ந்திருந்தனன. எ - று. (௬௮)

தேக்குபுகழ்த் திரிபுரனமுன் னரசாட்சி புரிந்ததிது தெளிக நீயுன்
றூக்கமிகு வியாதமுனிக் குரைத்தனனுன் முகனதனை யுனக்குச் சொன்னே
னீக்கியபூங் கழற்சோம காந்தவினி விண்ணேர்கள் விமலற் போற்றிப்
பாக்கியஞ்சேர் வரம்பெறற தறிகவெனப் பிருகுமுனி பகா ஆற்றுன்.

(இ - ள்.) தேக்கிய கீர்த்தியையுடைய திரிபுரன் முற்காலத்தில் அரசாட்சி செய்ததனை இதுவாகும். நீ யறிகவென்று மனஞ்சோர்வை மிகுந்த வியாதமுனிவருக்கு, நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் கூறினன. அதனை யுனக்குக் கூறினேன். (கவிழ்) கட்டிய அழகிய வீரக்கழலையுடைய சோமகாந்த ராசனே! இனி, தேவர்கள் சிவபெருமானைத் துதிசெய்து பாக்கியம்பொருந்திய வரத்தைப்பெற்றதனையும் அறிவாயாகவென்று பிருகுமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ - று.

திரிபுரன்ரசாட்சிப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௪௯௪

# தேவர்கள் வரம்பெறுபடலம்.

இமய மால்வரைக் கந்தரத் தெய்திய
வமரர் யாதுசெய் தாரரு ளாயெனுந்
திமில மாமறை செய்தவி யாதனுக்
கிமிழு மார்வத் தியம்புவ னான்முகன்

(இ - ள்) பெரிய இமயமலைக்குகையி லடைந்த தேவர்கள் யாது செய்தனர்? அருள்வாயாகவென்று வினவும், திமிலமாகிய வேதத்தை யருளிச்செய்த வியாதமுனிவருக்கு, பிரமதேவன் அரும்பிய ஆசையோடு சொல்வானாயினன் எ - று

திமிலம் - பேரொலி. (௧)

புகலி டம்பிறி தின்றிப் பொருப்பினு
ளகனு டைந்தழி வெய்து மமரர்முன்
மகதி யாழ்முர னாதவ னண்ணினன்
முகம லர்ந்தவர் தாழ்ந்து மொழிகுவார்.

(இ - ள்) புகலிடம் வேறில்லாமல், இமயமலையில் மனங்கசிந்து துன்புறும் வானவர்களுக்கு முன்னே, மகதிவீணையை வாசிக்கும் பெருந்தவசியாகிய நாரதமுனிவர் வந்தனர் (அவரைக்கண்ட) அத்தேவர்கள் முகமலர்ச்சிகொண்டு பணிந்து சொல்பவர்களானார்கள். எ - று.

புகல் - அடைக்கலம். அகன் - அகம் என்பதன் போலி (௨)

வெய்ய முப்புரன் வெற்றிமி குந்தனன்
வைய மூன்றுந் தனாணை யுய்க்கின்று
ஐய னேயவ னாலலைப் புண்டியாம்
நைய நெஞ்சொடு நாளுமி ளைந்துளேம்.

(இ - ள்) ஐயனே! கொடிய திரிபுரன் வெற்றியில் மிகுந்திருக்கின்றனன், மூவுலகங்களிலுந் தன்னாக்கினையைச் செலுத்தினன் யாங்கள் அத்திரிபுரனால் அலைப்புண்டு வருந்திய மனத்துடன் நாடோறுந் துன்புறுகின்றோம் எ - று (௩)

யாவ னால்வர மெய்தின னன்னவன்
யாவ னாலிறு மியாங்களி னிச்செயல்
யாவ தோதுக வென்றனர் நாரதன்
யாவு முந்தெரிந் தேயினி தோதுவான்.

(இ - ள்.) அந்தத்திரிபுரன் யாரால் (அத்தகைய) வரமடைந்தனன்? (அவன்) யாரால் அழிவுறுவான்? யாங்கள் இனிச்செய்யத்தக்கது யாது? (அவற்றை யெல்லாம் தெளிவாக வெங்கட்குக்) கூறுகவென்று கேட்டனர். நாரதமுனிவர் எல்லாவற்றையும் (ஞானநோக்கால்) அறிந்து இனிதாகச் சொல்கின்றனர். எ - று (௪)

மோக்குங் கையுடை முன்னவன் பூசையா
லாக்கிக் கொண்டன னாற்றலோ டியாவையு

மூக்க மிக்கவ னானையா ரமபினுற்
றூக்க வல்லவ சங்கர னேயரோ.

(இ - ள்) (தேவர்களே ! அததிரிபுரன்) தொங்குகின்ற கையையுடைய மூன் றெழுகிய விநாயகக்கடவுளுடைய அர்ச்சனைப்பலனால் வல்லமையுடன் எல்லாவற்றை யுந் தேடிக்கொண்டனன். செய்தொழிலில மனச்சோர்வின்மையை மிகுதியாகவுடைய அததிரிபுரனை ஒரேகணையால் அழிக்கவல்லவா சங்கரபகவானேயாவர். எ - று.

மோக்கும - முகந்துகொள்ளும். இதனைத்தொங்குமென்றும் (௫)

அந்த வீச னவனொடு முப்புரஞ்
சிந்த நறுக்குந் திருக்கர மைந்துடை
மைந்தன் சூட்சியும் வேண்டும தக்களிற்
றெந்தை யைச்சர ணெய்துக நீயிரே.

(இ - ள்) அந்தச் சிவபெருமான் திரிபுரனுடன் முப்புரங்களை யழித்தற்கும் ஐந்து திருக்கரங்களையுடைய மூத்தபிள்ளையாருடைய யோசனையும் வேண்டும் (ஆன படியால்) நீங்களும் மதநீர்பொழியும் யானைமுகக்கடவுளை (அதுகருதி)ச் சரணமடையுங் கள் எ - று (௬)

சேட்டைத் தேவர்தந் தேவபி ரான்கழ
லோட்டை நெஞ்சுடை யோமுறல் யாதென
வேட்டை யெய்தியி ரங்கலிர் மந்திரங்
கேட்டு நன்குகி ளந்தனுட் டிக்கவே

(இ - ள்) சேட்டை தங்கிய தேவர்கட்கெல்லாந் தேவநாயகனாகிய கணேசப் பெருமானுடைய திருவடியை ஒட்டையாகிய மனத்தையுடைய நாமடைதல் யாங்ஙன மென்று தளர்ச்சியுற்று வருந்தாதீர்கள் (கணேசப்பெருமானை மகிழ்விக்கும்) மந்திரத் தைக் கேட்டுணர்ந்து நன்றாக உச்சரித்து அநுட்டிக்கக்கடவீர்கள் எ - று

சேட்டை - குணக்கேடு ஒட்டை நெஞ்சு - நிலையில்லாதமனம். எட்டை தளர்ச்சி. (௭)

வாச நீர்படி நாடி வருகெனப்
பேசி னன்பெருந் தேவர்கள் யாவரும்
வீசு தெண்டிரை மென்புன லாடினார்
பூசி வெண்பொடி போந்துவ ணங்கினார்.

(இ - ள்.) மணமமைந்த நீரில் மூழ்கி வரக்கடவீர்களென்று கூறினன். (அத னைக்கேட்ட) பெருமைபொருந்திய தேவர்களெல்லோரும், எறிகின்ற தெள்ளிய அலையையுடைய மெல்லிய நீரில மூழ்கினவர்களாய், வெள்ளிய திருநீற்றைப் பூசிக் கொண்டு (நாரதமுனிவர்பால்) வந்து பணிந்தார்கள். எ - று. (௮)

வணங்கு தேவர்க்கு மாதவ னாரத
னிணங்க வோரெழுத் தாலியை மந்திர
மணங்கு தீர்தர வஞ்செவி யோதினன்
குணங்கொள் கண்ட னவர்கூறிட் டேனுண,

(இ - ள்.) (அவ்வாறு) பணிந்த தேவர்களுக்குப்பொருந்த,பெருந்தவசியாகிய நாரதமுனிவன் ஏகாட்சரத்தாலாகிய மந்திரத்தை, துணபமொழிய அவாகள்செவியிற பொருந்தக்கூறினன். (அதன் அநுட்டிப்புக்) கிரமததுடன அவாகள் அதைச சபிகக்ச் செய்து (இச்சையின்படி) சென்றனன். எ - று. (௯)

ஒற்றைத தாளினின் றுயபாக ளனபிறைல்
வெற்றி யானை முகத்து விநாயகன
பொறற சேவடி புந்திவைத் துததவ
முற்று மாமனு வோதினா பல்பகல.

(இ - ள்) தேவாகள ஆசையோடு ஒற்றைததாளிலே நின்று, வெற்றிபொருந்திய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளுடைய அழகிய சிவந்த திருவடியில மனதைச்செலுததிப் பலகாலந்தவஞ்செயது சிறந்த மந்திரத்தைக கணித்தாாகள, எ - று

ஒன்று+தாள=ஒற்றைததாள. (௧௦)

அன்பி னர்ககவா தமமினு மனபின
னெனப ணிககு மிரஙகும பராபரன
வனபு நெஞசுடை யாாககொரு வைகலு
முனபு றுதவன முனபுநின றுனரோ.

(இ - ள்.) அனபுடையவாகளுக்குத தமமைககாட்டிலும அனபுடையவரும, என்னுடைய பணிவிடைக்கும (திருவுளம) இரஙகும பராபரனும, கடின சித்தமுடையவர்களுக்கு ஒருநாளுந காட்சியளிக்காதவருமாகிய கணேசபபெருமான (அத தேவாகளுக்குக) காட்சிதநதருளினா எ - ற

என்பணிககுமெனறது பததிமுதிாசசியிலலாத என்னுடையவெனறு குறித்தது, பணிக்கும் எனறதிலுளள உமமை இழிவு சிறபபுகுறிப்பதாம (௧௧)

வே று

பொன்முடியு மதனருகே பொழிகிரண விளமதியும
பன்மணிசசெய குணடலமுட பணைததோளி னஙகதமு
மினமறியுந திருமேனி விளஙகொளியு மனைாநாளும
வன்மருப்பி னிடைச்சுற றும் வாாநதுதிரள புழைககரமும.

(இ - ள்.) பொன்னாலாகிய கிரீடமும், அககிரீடததருகே கிரணஙகளைச சிந்தும் பாலசந்திரனும், பலரததினஙகளா லிழைதத குணடலமும, பூரிதததோளகளில வாகுவலயமும், மின்னலைத தோறகச்செயயுந திருமேனியின விளஙகுகின்ற பிரகாசமும், அன்னானும், வலிய தந்தத்தினிடையே சுற்றிலும வடிநது திரணட துதிக்கையும். எ - று.

துதிக்கை இருதநதங்கட்கிடையிலுளள உறுப்பாகலானும்,அஃது திரண்டிருப்பதொன்றாகலானும், 'வனமருப்பினிடை * * * திரள்புழைக கரமும" என்றார்.

பாசத்தை யகப்படுக்கும் பாசமுநது ணியுமழுவும்
வாசத்தி னறுங்கமல மலருமணி நாறகரமுந
தேசத்தி னில்லாத திருவழகுந் திகழ்வெய்த
கேசத்தி னெதிர்நின்ற கிமலனையா வருங்கண்டார்.

(இ - ள்.) பாசபந்தத்தை அடியோடு பறிக்கும் பாசக்கயிறும், அணியும், மழுப் படையும், வாசத்துடன் கூடிய நல்ல தாமரைமலரும், அழகிய திருக்கரங்களும், உலகத்தில்லாத சிறந்த பொலிவும் விளங்கும்படி அனையோடு எதிரே வந்த புனிதராகிய கணேசப்பெருமானை எல்லோருந் தரிசித்தார்கள் எ - று. (௧௩)

பருதியெதிர் வரமலர்ந்த பங்கயம்போன் முகமலர்ந்து
வெருவுதலோ டன்புளத்தில் விரவமர ரகள்வல்லே
திருவடியி னெதிர்வீழ்ந்து சென்னியிரு கரமேற
வருவிவிழித் துணைகாட்ட வளனுறப் பழிச்சுவார்.

(இ - ள்) சூரியன் எதிரே தோன்றலால் விகசித்த தாமரைமலர்போல முகமலர்ச்சிகொண்டு, அச்சத்துடனே ஆசையும் மனத்திலுண்டாகத் தேவர்கள் விரைந்து, (கணேசப்பெருமானுடைய) திருவடியிலே நேராகப் பணிந்து, சிரமிசை யிருகரங்களும் ஏறவும், இருகண்களில் (ஆனந்த) அருவி தோன்றவும், பக்தியதிகரிக்கவும் (பின்வருமாறு) துதிக்கலானார்கள் எ - று (௧௪)

வேறு.

தத்துவா தீத போற்றி தத்துவப் பொருளே போற்றி
தத்துவ முதலே போற்றி தத்துவ சொரூப போற்றி
தத்துவத் தியன்ற தாத்து விதங்களு மானாய் போற்றி
தத்துவ வறிவுக் கெட்டாத் தயங்குபே ரறிவே போற்றி.

(இ - ள்.) தத்துவாதீதனே! போற்றி தத்துவப்பொருளாயுள்ளவனே! போற்றி தத்துவங்கட்கு ஆதியே! போற்றி தத்துவங்களின் சொரூபியே! போற்றி. தத்துவத்தியன்ற அத்துவிதங்களும் ஆனவனே! போற்றி தத்துவவுணர்ச்சிக்கு எட்டாது விளங்கும் பேரறிவானவனே! போற்றி எ - று

திருமூலர் திருமந்திரம்

"அறிவு சிவமிரண் டென்ப ரறிவிலார்
அறிவு சிவமாவ தாரு மறிகிலார்
அறிவு சிவமாவ தாரு மறிந்தபின்
அறிவே சிவமா வமர்ந்திருப் பானே."—என்றபடி, இறைவன் அறிவுமயமாயிருத்தல் கருதி "பேரறிவே" என விளிக்கலாயிற்றென்க. (௧௫)

உடலினுக் குயிரே போல வுயிர்க்குயி ரானாய் போற்றி
யுடலுயிர்க் கறிவு நல்கி யுடலினைக் கழிப்பாய் போற்றி
யுடலுயி ரெனப்பி னீங்கா வொற்றுமைப் பொருளே போற்றி
யுடலுறை யுயிர்க்கு மெட்டா வொளிர்பெருஞ் சோதி போற்றி.

(இ - ள்) தேகத்திற்குச் சீவனையேபோல உயிர்களுக்குயிரானவனே! போற்றி. உடலிலுள்ள உயிர்கட்கு அறிவைக்கொடுத்து சரீர வாஞ்சையைக் கழிப்பவனே! போற்றி. உடலும் உயிரும்போலப் பின்னர்நீங்காத ஒற்றுமைப்பொருளா யுள்ளவனே! போற்றி. உடலுறைகின்ற உயிர்கட்கும் அதீதப்பட்ட பிரகாசிக்கின்ற பெருஞ்சோதி சொரூபனே! போற்றி. எ - று. (௧௬)

விரவுதத் துவத்தி னீங்கி மேலென நின்ற வாவி
வரமுற வுருவு கொண்டு வந்தருள் குரவ போற்றி
பரவுமைந் தொழிலை நீக்கி யுயிரினைப் பணிப்பாய் போற்றி
துரியத்தி னுயிரா வாங்குஞ் சுடர்ப்பெருங் கடலே போற்றி.

(இ - ள்) கலந்த தத்துவங்களினின்றும் மேம்பட்டு[த்தத்துவாதீதனாகி] நின்று, விருப்புறு வரங்களைப் பெறும்படி திருவுருவங்கொண்டு வந்தருளிய ஆசாரியனே! போற்றி. துதிசெய்யத்தக்க (சிருட்டி முதலிய) ஐந்தொழில்களையு மகற்றி உயிர்களைக் கட்டளையிடுபவனே! போற்றி. துரியத்தினுயிரா வாங்குஞ் சுடர்மயமான பெருங்கடலே! போற்றி. எ - று. (கஎ)

பத்தர்கள் வழங்கா நின்ற பலவுங்கைக் கொள்வாய் போற்றி
புத்திகள் போகத் தார்க்குப் புணர்த்தருள் போகி போற்றி
முத்தியை யோகத் தார்க்கு முடித்தருள் யோகி போற்றி
எத்தொழி லவர்க்கு மந்தப் பயனருள் இறைவ போற்றி

(இ - ள்) அடியவர்கள் கொடுக்கும் பலபொருள்களையுங் கைக்கொள்பவனே! போற்றி. போகத்தை விரும்பினவர்களுக்குப் புத்திகளைக்கூட்டியருளும் போகியே! போற்றி. யோகிகளுக்கு முத்தியைக்கொடுத்தருளும் யோகசுரூபியே! போற்றி. எத்தொழிலுடையவர்களுக்கும் (அத்தொழிற்குரிய) அப்பயனை யளித்தருளுந்தலைவனே! போற்றி. எ - று. (கஅ)

வேண்டிய வடியார்க் கெல்லாம் விக்கினந் தடுப்பாய் போற்றி
வேண்டிவந் தனைசெய் யார்க்கு விக்கினங் கொடுப்பாய் போற்றி
வேண்டுவார் வேண்டிற் றெல்லாம் விளைத்தருள் விமல போற்றி
மாணட்டுட் டார்களைக் கொல்லு மறமிகு மள்ள போற்றி.

(இ - ள்) (திருவடியைப்) பணியுமடியவர்களுக்கெல்லாமிடையூறுகளைத் தவிர்ப்பவனே! போற்றி. விரும்பி வந்தனைசெய்யாதவர்களுக்கு இடையூறுகளைக் கொடுப்பவனே! போற்றி. அடியவர்கள் வேண்டிய பொருள்களையெல்லாம் உண்டு செய்தருளும் மலரகிதனே! போற்றி. மாட்சிமைபட்ட கொடியோர்களைக் கொல்லும் பாவத்தொழின் மிக்க மள்ளனே! போற்றி. எ - று. (ககூ)

வழுத்திய துதிகள் கேட்டு வள்ளலார் சுரரை நோக்கி
விழுத்தகு வரங்கள் யாவை விளம்புக தருது மென்றான்
பழுத்தவன் புடையா ராய பண்ணவர் பணிந்து சொல்வார்
தொழுத்தையேந் துயர மெல்லாந் தோன்றலுக் கஞ்ஞாத தன்றே.

(இ - ள்.) (அவ்வாறு) தோத்திரஞ்செய்த துதிகளை வள்ளலாராகிய கணேசப்பெருமானார் கேட்டுத் தேவர்களை நோக்கி, (நீங்கள் விரும்பிய) மேன்மையாகிய வரங்கள் யாவை? சொல்லக்கடவீர்கள். (அவற்றைக்) கொடுப்போமென்று கூறினார். பழுத்த அன்புடையவர்களாகிய தேவர்கள் (விநாயகப்பெருமானை) வணங்கிச் சொல்லுவார்கள்: அடியேங்கள் துன்பமுழுவதுந் தேவரீரறியாததல்லவே? எ - று. (உ0)

செம்மணி வரத்தான் மாறுத் தீங்கெமக் கிழைத்து வைய
மும்மையுந் தன்கைக் கொண்டு முடிவிலா வாற்றல் சான்ற

கொம்மைமுப் புரத்தி னானைக் கொய்யமொனக் கொன்று பின்னை
விம்மமே னுமெமக்குத் தீர்க்க வேண்டுமென் றிரந்து நின்றார்.

(இ - ள்) சுவாமீ! தேவரீரருளிய வரத்தினால் ஒழியாத துன்பத்தைப் பெற்றுக் கட்டுவிளைத்து, மூவுலகங்களையுந் தன் சுவாதீனஞ்செய்து கொண்டு, எல்லையில்லாத வல்லபமிகுந்த வலிய திரிபுரனை வில்லாவிற்கொன்று, (அதன்) பிறகு அடியேங்கட்குற்ற துன்பநோயைப்போக்கியருள வேண்டுமென்று (தேவர்கள்) பிரார்த்தித்து நின்றார்கள் எ - று. (௨௧)

அஞ்சிய தேவா ருங்க ளல்லலோ டழிவி லாற்றல
விஞ்சுமுப் புரத்தி னானை விளித்திடுஞ் சூழ்ச்சி செய்து
மஞ்சணி மிடற்றி னானை வல்விரைந் தடைமி னென்று
செஞ்சொலி னியம்பி னைங்கைச் செம்மலா ரிதுவுஞ் சொல்வார்.

(இ - ள்) அச்சமடைந்த தேவர்களே! உங்கள் துன்பத்துடன், அழிவில்லாத வல்லபமிக்க திரிபுரனையும் அழிவுசெய்யும் ஆலோசனையைச் செய்து, அழகிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானை அதிகவிரைவிற் சேருங்களென்று, ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமான் செவ்விய சொற்களாற்கூறி (மேலே) இதனையுஞ் சொல்லினார் எ - று. (௨௨)

அந்தரத் தமரர் நீயி ரறைந்ததோத் திரத்தை மும்மைச்
சந்தியி னியம்பு வார்க்குச் சகலசித் தினமு நீருஞ்
சிந்தையி னினைந்த வெல்லாஞ் சேருமென் றருளி வல்லே
வெந்திற லவுணர் கோமான் மேவுமங் காளஞ் சார்வார்.

(இ - ள்) ஆகாயத்தில் வசிக்கும் தேவர்களாகிய நீங்கள் கூறிய தோத்திரத்தை மூன்று [illegible]ங்களிலுஞ் சொல்பவர்களுக்கெல்லா இடையூறுகளுமகலும். மனதில் விரும்பி[illegible]யங்கைகூடுமென்றருளிச்செய்து வெவ்விய வலியமைந்த அவுணர் தலைவனாகிய திரிபுரன் வாசஞ்செய்யும் வங்காளநகரத்தை விரைவாகச் சார்ந்தனர் எ - று. (௨௩)

இருபிறப் பாளர் தம்மு ளிலகொரு திலக மென்னத்
திருவுரு வுடைய ராகித் தேவியு மருங்கு நண்ண
அருமறை முனிவர் சூழ வடுத்துவங் காள மென்னுந்
திருநகர் வீதி யூடு சென்றவன் கோயில் புக்கார்.

(இ - ள்) வேதியர்களுக்குள்ளே விளங்குகின்ற ஒரு திலகம்போல, சிறந்த திருமேனியுடையவராகி, தேவியாரும் பக்கலில் வரவும், அரியவேதமுனிவர்கள் புடைசூழவும் வந்து வங்காளமென்று சொல்லுஞ் சிறந்த நகரத்தின்வீதிவழியே சென்று, அத்திரிபுரன் மாளிகையை யடைந்தனர். எ - று. (௨௪)

அரியணை பொலிய வைகி யரசுவீற் றிருக்கு மன்னன்
திரிபுர னோக்கி யன்பு திளைத்தெழ வெதிரே சென்று
தரியலர் பலரைத் தேய்த்துத் தழும்பிய தாளி னானை
[illegible]மையின் வணங்கிப் போதத் தொளிர்தவி சிருத்திச் சொல்வான்.

(இ - ள்) சிங்காசனத்தில் அழகுறவிருந்து செங்கோலோச்சும் [illegible]மையுடைய திரிபுரன் கண்டு, அன்பானது அதிகரித்தெழுதலால் [illegible]

முத்தலைச் சூலத் தண்ணன் முறையுளி வழிபா டாற்ற
நித்தலும் பூசை கொண்டு நின்மலக் கணேசர் வைகு
மத்தரு மூர்த்தி தன்னை யளித்திடல் வேண்டு மென்றங்
குத்தம மறையோன் சொல்ல வுவந்தவ னுரைக்க லுற்றான்.

(இ - ள்) முத்தலைவாய்ந்த சூலப்படை தாங்கிய சிவபெருமான் முறைப்படி வழிபாடுசெய்ய நாடோறும் பூசையைக்கொண்டு நிர்மலராகிய கணேசப்பெருமான் எழுந்தருளியுள்ள அந்தத் தருவாகிய மூர்த்தியைக் கொடுக்கவேண்டும் என்று உத்தமவேதியர் கூற, அத்திரிபுரன் களித்துச் சொல்லினான். எ - று. (௯0)

அங்கநான் மறைக டேர்ந்த வந்தணீ ரந்த மூர்த்தி
சங்கரன் பால தென்று தளரலை யதனை யந்தச்
சங்கரன் விண்டு வாதி சகலவிண் ணவர்க ளோடு
மிங்குநின் முன்ன ருய்ப்பே னென்வலி யறிக வென்று.

(இ - ள்) ஆறு அங்கங்களும், நான்குவேதங்களுந் தேர்ந்தவேதியரே! (நீர் சொல்லும் சிந்தாமணியென்னும்) அந்தமூர்த்தி சிவபெருமானிடத்துள்ளதென்று மனந்தளரற்க; அம்மூர்த்தியை அந்தச் சிவபிரான் திருமால்முதலிய எல்லாத்தேவர்களோடும் இவ்விடத்தில் உன்முன்னே வருவிப்பேன் என் வல்லமையை யறியக்கடவாயென்று. எ - று.

வேதாங்கம்—மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிடமெனப்படும். (௯௧)

தண்ணடை பத்துந் தூசுந் தமனியக் குழையு மென்று
மண்ணுதல் புரியாத் தேசு வளர்மணிப் பலவு நல்கி
யண்ணலே சிலநாட் குள்ளே யழைப்பித்துத் தருது மிங்கே
நண்ணிவாழ்ந் திருக்க வென்று நயந்துகைக் குவித்து நின்றான்.

(இ - ள்) பத்துத் தண்ணடைகளும், ஆடையும், பொற்குழையும், எக்காலத்துங் கெடாத ஒளிவளரும் பலரத்தினங்களுங்கொடுத்து, பெருமையுடையவரே! (அதனை) சிலதினங்களிலே வருவித்துக்கொடுப்போம். இவ்விடத்திற் பொருந்தி வசித்திருக்கவேண்டுமென்று கூறிக் கைகூப்பினின்றனன். எ - று.

தண்ணடை - வயல் (௯௨)

முப்புரன் மொழியக் கேட்டு முகமலர்ந் தந்த ணாள
னிப்புரந் தனக்குப் பாங்க ரிலகிய வனத்து வாழ்து
மொப்பிலா மூர்த்தி தன்னை யொய்யெனத் தருக வென்று
செப்பின னாசீர் வாதஞ் செய்தன னெழுந்து போனான்.

(இ - ள்) திரிபுரன் (அங்ஙனஞ்) சொல்லக்கேட்டு, வேதியர் முகமலர்ச்சியுற்று, இந்நகரத்தின் பக்கலிற் பிரகாசிக்கின்ற வனத்திலிருக்கின்றோம். சமானமில்லாத அந்தச் சிந்தாமணிமூர்த்தியை விரைவிற்கொடுப்பாயாக வென்றுசொல்லி, ஆசீர்வாதஞ்செய்து எழுந்துபோயினார். எ - று. (௯௩)

கொங்கை வீப்பொற் கொடிஞ்சிக ளாகவு
மூக்கு கூம்புத யாசல மாகவும.

(இ - ள்.) மந்தரகிரிமேல் கட்டமாகவும், ஆகாயமளாவிய ஆணைமயுடைய இமயகிரி மிக்க ஒளிபொருந்திய அழகிய கொடிஞசிகளாகவும, உதயகிரி செலுத்து கின்ற கூம்பாகவும். எ - று.

கொடிஞ்சி - தேர்மொட்டு. (ரு)

வழுவி லேலீனய மால்வரை யாவையுங
தழுவு தூணிரை யாகவுந தததுவங
குழிசி யாகவுங கொணடற குழாமெலாங
கெழுமு கினற கிடுகுக ளாகவும

(இ - ள்.) தவறுதலிலலாத மறறையபெரிய மலைகளெலலாம பொருநதிய தூண்வரிசையாகவும், தததுவஙகள குடமாகவும, மேகக்கூட்டஙகளெலலாம விளங குகின்ற இடுகுகளாகவும். எ - று

இடுகு - சுறறுமரம (சு)

காம மாதியுங கன்மேந தியஙகளு
மேம மார்நதஞா னேநதிய மெனபவுஞ
சேம வாபர ணததிர ளாகவும
வாம வண்டஙகண மாலைக ளாகவும

(இ - ள.) காமமுதலியனவும் கனமேநதியஙகளும மேனமைதஙகிய ஞானேந் திரியங்களென்று சொல்லப்படுவனவும சேமமாகிய ஆபரணததிரளாகவும, அழகிய அணடஙகள் மாலைகளாகவும். எ - று. (எ)

புராண மஙகம புணாமணி யாகவும
விராவு டுககள விதானஙக ளாகவு
முராவு மேழுகட லோணடினை யாகவும
பராம ருக்குவா தாமபடி யாகவும.

(இ - ள்.) (பதினெண) புராணஙகளும, (ஆறு) அஙகஙகளும கட்டிய மணி களாகவும, கலந்துள்ள நட்சததிரஙகள விதானஙகளாகவும, மோதுகினறசகத சமுத திரங்கள் ஒன்றிய திரைசசீலைகளாகவும, திக்கஞதகக (அடட)மருததுககள படிக கட்டுகளாகவும். எ - று. (அ)

கங்கை யாதிக கடவு ணதியெலாம
பொங்கு சாமரை வீசிடு பூவையா
தங்க ளுகவு மறமையா வாடுறலாம
பங்க மிலலாப பதாகைக ளாகவும.

(இ - ள்.) கங்கைமுதலிய தேவநதிகள யாவுங அவவிடத்தில உயர்கின்ற சாமரைவீசும் பணிமாறும் பெணகளாகவும, பிறநதிகள யாவுங கெடுதலில்லாத கொடிகளாகவும். எ - று. (கூ)

இரவியும வாரமுஞ சோமதபனா னுளகளுங
கருவு மேவாக கபெபென வாகவு

தனித்திருந்தலர் விழிகளுஞ்சரங்கண்முன் னெறிந்துக்
குனித்த வில்லியைக் குமைத்தகண் பொருத்தியின் னித்து
மனித்தர் தேவர்கள் ஞானமனு வானவோ ரெழுத்தை
யினித்த காதலா னெண்ணிமா தவஞ்செய்திட் டுறைவார்.

(இ - ள்) ஏகமாயிருந்த, பரந்த இருவிழிகளும், (மலர்ப்)பாணங்களை முன்னே பிரயோகித்துவிடுத்த கரும்புவில்லையுடைய மன்மதனைப் பொடிபடுத்திய நீவிழியம் முகிழும்படி தியானஞ்செய்து மனிதர்களும் தேவர்களும் ஞானவான்களாகிய கணேசப்பெருமானுடைய ஏகாக்ஷர மந்திரத்தைமிக்க ஆசையோடு தியானித்துப் பெருந்தவஞ்செய்து இதனைச் சொல்கின்றார் எ - று (௧௯)

சயசர் வேசனே சகலமு மறியுந்தத் துவனே
யயர்வி லாப்படைப் பளிப்பழிப் பருளுங்கா ரணனே
மயரி லாதவ வானவ ரனைவர்க்கு மிறைவ
வுயருநாதநீ யாதலா லுன்னையா னிரக்கேன்.

(இ - ள்) சர்வேசனே! ஜய! எல்லாவற்றையுமுணர்ந்த தத்துவ சுரூபியே! சோர்வில்லாத சிருட்டி திதி சங்காரங்களை யநுக்கிரகிக்குங் காரணமானவனே! மயக்கமில்லாதவனே! தேவர்களெல்லோருக்குந் தலைவனே! உயர்வாகிய தலைவன் நீயே யாதலின் உன்னை யான் யாசிக்கின்றேன் எ - று. (௨௦)

எம்பி ரானுன தியற்கையா கியவெழி லுருவ
நம்பி னேற்கெதிர் காட்டுக நாரணன் முதலா
வும்ப ராதிரி புரனுறைக் குடைந்துபோய்க் காந்து
செம்பொன் மேருவிற் றெருமந்தா ரின்றைநாள் காறும்.

(இ - ள்) எம்பெருமானே! தேவரீருடைய இயற்கையாகிய அழகிய திருவுருவத்தை, நம்பினவெனக்கு எதிரே காட்டியருள்க. திருமால்முதலாகிய தேவர்கள் திரிபுரனுக்குத் தோற்றுச்சென்று, செம்பொன்மலையாகிய மேருபர்வதத்தில் ஒளித்துக்கொண்டு இன்றுவரையில் வருந்துகின்றார்கள். எ - று. (௨௧)

தெளிக்கத் தக்கவர்க் கருள்செயுந் தேவநின் னருளா
லளிக்கத் தக்கவ ரவரிட ரகன்றுபோய்த் தத்தங்
களிக்கத் தக்கவாழ் பதவிகள் கைக்கொளப் புரத்தை
விளிக்கத் தக்கசூழ்ச் சியுமெனக் கருளுதல் வேண்டும்.

(இ - ள்.) அன்புடன் பணியத்தக்கவர்களுக்குத் திருவருள்புரியுந் தேவனே! தேவரீருடைய திருவருளால் அருள்புரியத்தக்கவர்கள் துன்பமகன்று சென்று தங்கள் களிப்புறத்தக்க வாழ்விடமாகிய பதவிகளைக் கைக்கொள்ளும்படி திரிபுரங்களை யழிக்கத்தக்க சூழ்ச்சியையும் எனக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டும் எ - று. ()

ஐந்து பூதமு மடிகளா ரிணையினைச் சென்ற
விந்த வையக [illegible]

பொருந்துகின்ற திருநாமம் யாது? கூறியருள்கவென்றனர் அதிகரிக்கின்ற குளிர்ச்சியாகிய கிருபையுடன் விநாயகக்கடவுள் கூறுகின்றார் எ - று. (௪௭)

எம்மை நாடிநீ யிருந்தவம் பலபக லிழைத்த
செம்மை யாலுன தானனத் திருமலர் நின்று
மும்மை வையகத் துயிரெலாங் காப்பமுன் வந்தாம்
மம்ம நம்பெயர் கணேசனென் றறிகநஞ் சயின்றோய்.

(இ - ள்) விடபானஞ்செய்த சிவபிரானே! எம்மை விரும்பி நீ பல்காலம் பெருந்தவஞ் செய்த தன்மையால் உன்னுடைய முகமாகிய சிறந்த தாமரை மலரினின்று, திரிலோகங்களிலுள்ள ஆன்மாக்களையெல்லாங் காக்கும்படி (உனக்கு) முன்னே தோன்றினம். நம்முடைய திருநாமங் கணேசனென்றறிவாயாக எ - று. (௪௮

முக்கு ணத்திராப் பகன்முழு வதுமவிளை யாடு
மக்கு ணத்தினே மருந்தவத் தாலடுத் தமையான்
மிக்கு ளத்துறு விழைவெலாம் விரைந்துகேட் டுக்க
விக்க ணத்தருள் வாமென விசனு ருரைப்பார்.

(இ - ள்) முக்குணங்களால் இரவும் பகலும் எப்பொழுதுந் திருவிளையாடல்புரியும் அக்குணமுடையேம் (உம்முடைய) அரிய தவத்தாற் பிரசன்னமாயினமையின், மனத்திற் பொருந்திய மிக்க விருப்பங்களையெல்லாம் விரைவிற் கேட்டுக்கொள்க இக்கணத்திலேயே யருள்புரிவாமென்றுகூற, சிவபெருமான் கூறுகின்றார் எ-று

அல்ல லுற்றிடு மமரர்கள் புகழ்முப் புரங்கள்
கொல்லுஞ் சத்தியைக் கொடுக்கநான் மறைக்குமுன் னாக
வொல்லும் பீசத்தி னோடெனக் குனபெய ராகச்
சொல்லு முன்பெயர் மந்திரந் தொடுத்தருள் புரிக.

(இ - ள்) துன்புற்ற தேவர்கள் கரிப்பெய்த திரிபுரங்களைக், கொல்லுகின்ற வல்லமையைக் கொடுத்தருள்க நான்கு வேதங்கட்கும் முற்பட்டதாகப் பொருந்திய பீஜாட்சரத்துடன் நும் பெயராகச் சொல்லுகின்ற மந்திரத்தை எனக்கு உபதேசித்தருள்க. எ - று (௫௦)

அந்த மந்திர வலியினா லாற்றன முப்புரமும்
வெந்திடப் புரிவேனென்ன விநாயக ரருள்வார்
நந்தம் பீசதா னத்தினா னவையிலா நாமம்
ஐந்து கொண்டநின் றனக்குள தாவது மதியாய்

(இ - ள்) அந்த மந்திரத்தின் வல்லமையால் வலியமைந்த முப்புரத்தையும் வெந்துவிழும்படி செய்வேனென்று (சிவபெருமான்) கூற, விநாயகக்கடவுள் கூறுகின்றார். நம்முடைய பீஜாட்சரதானத்தினால் குற்றமில்லாத ஐந்துகொண்ட திருநாமம் உனக்குண்டாகுக எ - று

உளதாவது - துவ்வீற்று வியங்கோள். (௫௧)

அதனில் வேறுமோர் பீசத்தைக் கூட்டியம் மனுவைப்
பிதமொ டெங்கள் மென்றுபின் னிதனையீந் சொல்வார்

வசிய மாதியா வுலககா ரியங்கண்மற் றெவையு
நசிவி லாவகை யியற்றினு நாரணன் முதலாக்
கசியு மானிட ரந்தமாக கவிக்தல வெவரு
நொசிவி லாதபூ சனையிய றியற்றுநூன் முறையால்.

(இ - ள்.) வசிய முதலாகிய மற்றெல்லா உலககாரியங்களும கெடுதலில்லாத வகையாகச்செய்தாலும, திருமாலமுதலாக இரங்குகின்ற மனிதரிறுதியாகத் தோன்றினவாகளெல்லோரும, (ஆகம) நூன்முறைப்படி அழிவில்லாத (உமக்கு) பூசையைச் செய்யக்கடவா. எ - று. (௧௭)

யாவ ராயினு நினையிறைஞ் சாதுசெய கருமம
யாவ தாயினும பயமின்றி யிறுகவான சைவ
மேவி லாவயி ணவமிவை புறமவா தாமும
பாவ காரிக ளாகுக நினைபபணி யாரேல.

(இ - ள) எவராறுலும உமமைப்பணியாது செய்கின்றகாரியம் யாதாயினும் பலனில்லாமலழிக. சிறந்தசைவம கெடுதலில்லாத வைணவம (ஆகிய) இமமதங்களிற் பொருந்தினவாகளும உமமை வணஙகாதவாகளாகிற பாவகாரிகளாககடவர்கள் எ - று.

வரங்க ளினனண மீயசுரா வழஙகலு மகிழ்நது
கரங்க ளைநதுடைக கணேசாகட டுரைபபாதி யாதம
புரஙகள் கொலலநாம புகனமனு கணையிடத் தாக
வரஙகள கொலலுஞ்சூ லததிடத தரகமந திரிக்க.

(இ - ள.) சிவபெருமான இவவகையாக வரங்கள கொடுககவும், ஐந்து திருக கரஙகளையுடைய கணேசபபெருமான் மகிழ்வுறறு உறுதியாக மொழிகின்றனர் கொடியவரஙகளையுடைய திரிபுரஙகளையழிககநாம கூறிய மநதிரததைக் கணையினி டததிலும வரஙகளையழிககுஞ் சூலததினிடததிலும அபிமந்திரிககககடவை. எ - று. ()

விடுககுங காலையிற சதமுறை விளமபுக மீள
மடுககுங காலையி னமமுறை மநதிரித திடுகென்
றெடுககு மினனரு ளாலியம புதலுமீச னாரை
தொடுககு மனபினு னனறெனச சாறறமைக கூவி.

(இ - ள) செலுததுங காலததில் நூறுமுறை உருசசெய்க. மீணடும் திரும பப்பெறுகையில அமமுறையே [நூறுஉரு] மநதிரிககவென்று, மிக்க இனியகிருபை யுடன கூறவும, சிவபெருமான அதிகரிககின்ற அன்புடன் நலலதென்று தேவர்களை விளிதது எ - று (௨0)

பாவ னைக்குமெட் டாப்பரி பூரண ரமது
பாவ னைக்கெளி தாப்பரின் றிதோவிருக் கின்றார்
பூவ லாத்தொடை யாதியாற் பூசனை புரிந்து
மேவு மந்திர மாயிரம் விரித்தல ரிடுமின்.

(இ - ள்.) பாவனை செய்தற்கு எட்டாத பரிபூரணராகிய விநாயககடவுள நம்முடைய பாவனைக்கு எளிதாக இதோ விளங்கி யிருக்கின்றார், மலர்கள் விசேஷத மாலை முதலியவற்றால் பூசைசெய்து பொருந்திய மந்திரத்தை ஆயிரமுறை செபித்து அர்ச்சிக்கக்கடவீர்கள் எ - று. (௨௧)

நுமது பீழைக ணொடிக்குமுன் னூறுமென் றருளக்
கமல நேத்திர னாதியோர் கண்ணுத லருள்பெற்
றமல னாகிய கணேசனை யாகம விதியாற்
றமமெ லாமறப் பூசித்தோ தினாசகத் திரமும்.

(இ - ள்.) உம்முடைய துன்பங்களை நொடிப்பொழுதின் முன்னே யழிப்பபொன்று (சிவபெருமான்) அருளிச்செய்ய, செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் முதலிய தேவர்கள் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் றிருவருளைப்பெற்று மலரகித்தராகிய கணேசப்பெருமானை ஆகமமுறைப்படி (தமத) தாமசகுணமுழுவதும் மழியும்படி பூசித்து, ஆயிரமந்திர ஜபமுஞ் செய்தனர் எ - று (௬௨)

முக்க ணெண்கர முன்னவ னவர்க்குமே யருள்செய்
தக்க ணிங்கினா னரன்வரம் பெற்றதீ தென்று
ஒக்க மெய்த்தவ வியாதனன் முனங்கேட் டிடப்புகன்றான்
றொக்க பல்லிதழ்த் தாமரைத் தொல்லையா தனத்தோன்.

(இ - ள்.) மூன்று விழிகளையும் எட்டு கரங்களையுமுடைய விநாயகக்கடவுள் அவர்களுக்கு மிக்க திருவருள்புரிந்து அங்கிருந்தகன்றனர். சிவபிரானை வரம்பெற்ற வகை யிதுவாகுமென்று, உண்மைத்தவத்தையுடைய வியாசமுனிவன் தன் முன்னிருந்து கேட்கும்படி, நெருங்கிய பல இதழ்களையுடைய தாமரைமலராகிய பழமையாகிய ஆதனமாகக்கொண்ட பிரமதேவன் கூறினன் எ - று (௬௩)

படையெ லாம்பணி பவர்க்கருள் பரனுமைங் கரன்பாற்
படைகொள் வான்கதை கேட்டனை பார்த்திவ வினிமே
லுடைய வர்புர மவ்வர னழித்தது கேளென்
றிடைய றாதுரைப் பானெழின் மாதவப் பிருகு.

(இ - ள்.) அ[illegible]ங்களை யெல்லாம் (தம்மை) வணங்குபவர்க்குத் திருவருள் புரியுஞ் சிவபெருமானும், விநாயகக்கடவுளிடத்தில் ஆயுதம்பெற்ற சரித்திரத்தைக் கேட்டனை. சோமகாந்த மன்னனே! இனி அச்சிவபெருமான் பகைவரது முப்புரங்களை யழித்ததையுங் கேட்பாயாகவென்று அழகிய பெருந்தவமுடைய பிருகுமுனிவர் விடாது சொல்லத்தொடங்கினர். எ - று (௬௪)

விமலர் விநாயகரருள்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௭௬௮

---

# திரிபுராதகனப்படலம்.

அன்பர்க ளுள்ளமே யாலயங் கொளும்
வன்பணிப் பூணினார் மாற்றலன் செய்தனா
முன்பக ராபெறு முனிவி யாதனுக்
கின்புற நான்முக னியம்பன் மேயினான்.

(இ-ள்) அடியவராக ளுள்ளத்தையே திருக்கோயிலாகக் கொண்டருளும் வலிய சாபபாபரணராகிய அவ்வெம்பெருமான் பின்னர் யாதுசெய்தனர்? முற்படக் கூறுகவென வினவிய வியாதமுனிவனுக்குப் பிரமதேவன் இன்பமுறக் கூறத்தொடங்கினன் எ-று (க)

எம்பிரான் மறுப்பப்பின் பெருந் தூதர்க
டம்பிரா னாகிய தான வற்பணிந்
தம்பராசூழ் மூர்த்தியை யுகவி லானரன்
சிம்புளிபோல் வெருண்டனன் திரும்பி னேமென்றார்.

(இ-ள்) எம்பெருமானாகிய சிவபெருமான் தடுப்ப, திரும்பிச் செல்லுந் தூதர்கள், தமது தலைவனாகிய திரிபுரனை வணங்கி, சிவபிரான் தேவர்கள் தியானிக்கும் (சிந்தாமணி) மூர்த்தியைக் கொடுத்திலர் சரபப்புட்போலக் கோபித்தனர். நாங்கள் திரும்பி வந்துவிட்டோமென்றனர் எ-று. (உ)

கேட்டனன் வெள்ளொளி கிளர நக்கனன்
னீட்டிய தவப்பய னிறுதி யணைமலிற்
சூட்டணிந் திலைப்படை யுலகத் தண்ணல்பாற்
கோட்டமுற் றமர்செயக் குறிக்கொண் டானவன்.

(இ-ள்) திரிபுரன் (அதனைக்) கேட்டு, வெள்ளிய ஒளி விளங்கும்படி சிரித்து, தேடிய தவத்தின்பலன் முடிவுசேர்தலால், உச்சிக்கொண்டையுற்று விளங்கிய சூலப்படையேந்திய சிவபெருமானிடத்திற் கோபங்கொண்டு போர்புரிய ஆலோசித்தனன் எ-று (௩)

பெருவலிச் சண்டனே பிரசண்ட னமுதல்
வெருவருந் தானவ வீர ரியாவரும்
பொருவறு வரத்தமுப் புரமு மிவ்வயின்
மருவுக வெனவவர் வந்து சேர்ந்தனர்

(இ-ள்) மிக்க வலியையுடைய சண்டனும் பிரசண்டனுமுதலிய அஞ்சச்செய்யுந் தானவவீரர்களெல்லோரும் சமானமற்ற வரத்தினையுடைய முப்புரங்களும், இவ்விடத்தில் வந்து சேருகவென, அவர்களும் வந்து சேர்ந்தார்கள் எ-று (௪)

போருள தாயது புயக்கண் டுதியைத்
தீருமி னினியெனச் செப்பி வீரர்க்குச்
சீருறு பல்வகைச் சிறப்புஞ் செய்தனன்
காருடைக் கொடைப்பெருங் கரத்துத் தானவன்.

(இ-ள்) போருண்டாயிற்று. இனித் தோட்டினவைத் தீருங்களென்றுகூறி, போர்வீரர்களுக்குச் சேர்ந்தகிய பலவகைச் சிறப்புக்களுஞ் செய்தனன். மேகமும் பின்னிடத்தக்க கொடையிற் பெருமை வாய்ந்த கையையுடைய திரிபுரன். எ-று (ரு)

ஊருறு நான்கினு மூவகை யெண்மடங்
காருறப் பூங்கழ லார்த்த வீரர்கள்

அழகிய சேனைத்தலைவரும், மிக்கவலிமையுடைய பலசேனைகளும் வந்து ஆகாயமளாவிய திருக்கோயிலின் வாயிலிற் பொருந்தினார்கள் எ - று. (௧௦)

பூண்ட வாமபரித் தேரினைப் பூவணைக் கிழவன்
தூண்டி யுய்த்தன னென்றலுஞ் சுரரிடர் துமிப்ப
மூண்ட காதலின் முன்னவன் முருந்திள முறுவ
னீண்ட வார்குழ லுமையொடு மேறென வெழுந்தான்.

(இ - ள்) தாவிச்செல்லுங் குதிரைகள் பூண்டுள்ள தேரை, தாமரைமலர்ப்பீடத்திலுள்ள பிரமதேவன் செலுத்தினனென்று சொல்லவும், முதற்கடவுளாகிய சிவபெருமான், மயிலிறகின் அடியையொத்த இளமைவாய்ந்த தந்தபந்தியையும் மிக்கு நீண்ட கூந்தலையுமுடைய உமாதேவியாரோடும் தேவர்களுடைய துன்பத்தைக்கெடுக்க அதிகரித்த ஆசையுடன் விரைவாக வெழுந்தனர் எ - று. (௧௧)

அணிபெறு பாதுகை யடிமல ரிரண்டினுந் தொடக்கிப்
பணிபெறு பூணுரந் துயல்வரப் பலகடை கடந்து
மணிபெறு கோபுர வாயதன் முன்வந்தா னளக்கு
மணிபெறு றேரினை யிவர்ந்தன னரனென்றன சங்கம்.

(இ - ள்) அழகிய பொன்னாலாகிய பாதுகையைப் பாததாமரைகளிரண்டிலுந் தொடுத்து, சர்ப்பமாகிய அழகிய ஆபரணமானது திருமார்பிலசையப் பலகடைமேல் நடந்து, நவமணிகளிழைத்த பொன்னாலாகிய திருக்கோபுரவாயிலின் முன்னேவந்து, ஆகாயமளாவிய அழகியபொற்றேரை யாரோகணித்தனர் சங்கங்கள் முழங்கின எ-று

வெற்றி வானவர் முழுவதும் விளங்குதே ருருவா
யுற்ற மாடசிகைக் கொப்புற வொளிர்கலை முழுது
முற்று நாண்மதி முடித்ததே போன்மென முடிமேற்
கற்றை யீரங்கதிர் கான்றது கவித்தவெண் கவிகை.

(இ - ள்) வென்றி பொருந்திய தேவர்கள்யாவரும் பிரகாசிக்கின்ற தேரின்வடிவமாகப் பொருந்திய மாடசிகைக்கு ஒப்புறும்படி, ஒளிசெய்கின்ற கலைகள் முழுவதும் [பதினாறும்] முதிர்ந்துள்ள உவாத்திங்களை முடித்ததுபோலுமென்று சொல்லும்படி, முடியின்மேலிலே வெள்ளியகுடையானது கவித்துக்கொண்டு குளிர்ந்த கற்றையாகிய கிரணங்களைக் கக்கியது எ - று.

கலைமுழுதும் முற்றும் நாண் மதி - எல்லாக்கலைகளோடும் நிறைந்துள்ள பூரணை நாட்சந்திரன் (௧௩)

மான மானினபின் னேகிடத் தலைந்தநா மின்று
மான வானெதிர் மருவுதல் பெற்றன மேயென
ஞான வேட்கையா லெழுந்தெழுந் தாடுவ போன்ற
கான வார்குழன் மாதரா ரிரட்டுவெண் கவரி.

(இ - ள்) வாசந்தங்கிய நெடிய கூந்தலையுடைய மாதர்கள் இரட்டுகின்ற வெள்ளிய சாமரைகள் மானத்தையுடைய மானின் பின்னே யிருந்து அலைந்தனம் இப்போது ஆகாயத்தை நோக்கி எதிரேபொருந்துதல் பெற்றேமென்று உண்டாகிய களிப்பினால் எழுந்தெழுந்து கூத்தாடுவபோன்றன. எ - று. (௧௪)

அழுந்து பட்டவே ழாழியி னகனந்தன் கருணை
கொழுந்து பட்டிக் லவுணன்பாற் கூடலு மாமென்
றெழுந்து பட்டபுன் சினவெரி யிட்டவா போலச
செழுந்து பட்டசாந தாறுமிகள் சிலரெடுத் தசைத்தார.

(இ - ள்.) ஆழ்ந்தங்கிய சத்தசமுத்திரங்களைக் காட்டிலும் அதிகரித்த தமது ருபையானது மிகுந்து, வலிதங்கிய திரிபுரனிடத்திற் கூடுதலுமுண்டாகுமென்று, நிது சிறிதாக எழத்தக்க கொடிய கோபமாகிய அக்கினியை யெழுப்புபவர்கள் போல, செழுமைபொருந்திய விசிறிகளைச் சிலரெடுத்து அசைத்தார்கள் எ - று

முளைத்தெ ழுந்ததே போன்றொளி மொயமணித் தேரின
வளைத்த வாரிதிரை யாகிய வாருதி நின்றுந
திளைத்தெ ழுந்திடு திரைகளே யாமெனச் சிலரால்
விளைத்த வெள்ளொளி வெள்ளைக ளவீசிடப் படுவ.

(இ - ள்.) முளைத்துத் தோன்றியதையே யொத்துப் பிரகாசிக்கின்ற, நெருங்கிய நவமணிமயமான தேரிற்கட்டிய நெடிய திரைச்சீலையாகிய கடலினின் றும் மேற்பட்டெழுந்த அலைகளேயாமென்று சொல்லும்படி, வெள்ளொளிதங்கிய வெண்பாவாடைகள் சிலகணங்களால் வீசிடப்பட்டன எ - று.

வெண்படாம் வீசுதல் ஓர் உபசாரமாம (௧௬)

மீண்டு முப்புர நீறிட விமலனே மெழுதலாற்
பண்டை நமபத நாமினிப் படர்குது மெனவுட
கொண்ட வோகையின் வாளராக குலங்கள ரடுவபோ
லண்டர் போற்றநின் றசைவன வாலவட் டங்கள.

(இ - ள்.) மதத்தாற் பிழைபட்ட முப்புரங்களை நீறுபடுத்தச் சிவபெருமான் எழுந்தருளுவதால், பழைமையாகிய நமமுடைய பதவியை [நாகலோகத்தை] யடைவோமென்று மனதிற்கொண்ட ஆசையுடன், ஒளியநாகக்கூட்டங்கள் கூத்தாடுவன போல, தேவர்கள் துதிசெய்யும்படி ஆலவட்டங்கள் அசைந்தன எ - று

மீண்டு - மதத்தாற பிழைபடுதல (௧௭)

உடைய நாயக னொருகணை யாலழித திடுமு
னுடைய லாரெயி லகத்தெழி னோக்குது மென்னூஉ
தொடைய விராகதனிக் கொடிமிசைச் சாரகொடி போற்ற
விடைவி ராவிநின் றசைந்தது விண்ணிடை விளங்க.

(இ - ள்.) (நம்மை அடிமையாக) உடைய சிவபெருமான் ஒரே கணையினால் அழித்துவிடுமுன்னரே, பகைஞரது மும்மதில்களுள்ளுள்ள அழகினைக் காணபோம் என்று [illegible]கட்டிய ஒப்பற்ற கொடிகளின் மேலே, தேவர்களுடைய துவசங்கள் போற்றும்படி இடபமானது நின்று ஆகாயத்தில் விளங்க அசைந்தது எ - று.

படக மாருளி சல்லரி பணைகிணை கல்ல
[illegible] தூக்குடப் பறைகா டிகைமணி முரசந

துடிதடாரிதண் ணுமைகுளிர் துந்துபி தக்கை
கடிசெய் மொந்தைதொண் டகமிடக் கைதகு ணிச்சம்.

(இ-ள்) படகம் - ஆகுளி - சல்லரி - பணவை - கிணை - கல்லவடம் - முழவு - குடப்பறை - கரடிகை - அழகிய முரசம் - துடி - தடாரி - தண்ணுமை - குளிர்ந்த ஓசையையுடைய துந்துபி - தக்கை - காவலைச்செய்யும் மொந்தை - தொண்டகம் - இடக்கை - தகுணிச்சம். எ-று. (௧௯)

பம்பை தூரியம் பாண்டிலகைப் படலிகை பணிலந்
தும்பு நீரம் புடையயாழ் துளைபடு கருவி
கம்பி யாதெழு வங்கியங் காகளம் பீலி
யிம்ப ரார்பல வியங்களு மியம்பின கணங்கள்.

(இ-ள்) பம்பை - தூரியம் - பாண்டில் - சிறு படலிகை - பணிலம் - முடிப்புற்ற நரம்புடைய வீணை - துளைக்கருவிகள் - அடங்காதெழும் ஒலியையுடைய வங்கியம் - காகளம் - பீலி - இன்னும் இவ்வுலகிற் பொருந்திய பலவாத்தியங்களையும் சிவகணங்கள் முழக்கின. எ-று. (௨௦)

கழுக்கடை பப்பரை முசுண்டி சக்கரம் பிண்டி பாலம்
எழுக்குயங் கதை முசலங் கப்பணம் பிலை ஞாங்கர்
மழுக்கள் வச்சிரங் கேடகம் வாள்சிலை யம்பு
கொழுக்க லப்பைவே தினங்கவண் குளிரி நீள் சலாகை.

(இ-ள்) கழுக்கடை - முசுண்டி - சக்கரம் - பிண்டி - பாலம் - எழுக்குயம் - கதை - முசலம் - கப்பணம் - அச்சவடிவான வேல் - மழுக்கள் - வச்சிரம் - கேடகம் - வாள் - வில் - அம்பு - கொழு - கலப்பை - வேதினம் - கவண் - குளிரி - நெடிய சலாகை எ-று (௨௧)

பாச மங்குச முசலஞ் சூலம்பல் குந்தம்
பூசன மலகிய சுரிகையா யுதம்புள்ள மீட்டி
வீச தண்டமென் றுரைத்திடு வெய்யபல் படையும்
பேச ருந்திறற் பூதர்கள் பிடித்தன ரார்த்தார்.

(இ-ள்) பாசம் - அங்குசம் - முசலம் - சூலம்-பல்முனையுடைய குந்தம்-போர்த்தொழின்மிக்க சுரிகை யாயுதம் - புள்ளம் - ஈட்டி - வீசத்தக்க தண்டாயுதம் என்று சொல்லப்பட்ட கொடிய பலஆயுதங்களையும் சொல்லுதற்கரிய வல்லமையுடைய பூதகணத் தலைவர்கள் பிடித்து ஆரவாரித்தார்கள். எ-று.

பிடித்தனர் - முற்றெச்சம். (௨௨)

வேறு.

இலகிய வெழுபத் தெண்ணா யிரமெனுங் கோடி வெள்ள
வலிகெழு பூதர் சூழ வார்சிலை யிலக்க னென்னு
மொலிகெழு வீர னங்கை யொருவனு ளருள்பெற் றுங்கப்
பலபடை தமக்கு முன்னே படர்ந்தனன் கொடிஞ்சித் [illegible].

(இ-ள்) விளங்கிய எழுபத்தெண்ணாயிரங்கோடி வெள்ளமென்னுந் தொகையையுடைய வலிமைமிக்க பூதகணங்கள் புடைசூழ்ந்துவர, நெடியவில்லையுடைய இலக்கனென்னுங் கீர்த்திமிகுந்த வீரனொருவன், ஐந்து திருக்கரங்களையுடைய [illegible]

கணேசப்பெருமானால் அருள்புரியப்பட்டு, பலசேனைகளுக்கும் முற்பட்டு, கொடிஞ்சி யுடைய தேரிலேறிக்கொண்டு சென்றனன். எ - று.

கொடிஞ்சி - தேருறுப்புகளிலொன்று

இலக்கன் - கணபதியின் மூத்தமகன் இளையவன் இலாபனெனப்படுவன். ()

ஏதமி லாத வெண்ணூ றாயிர மெனுங் கோடி வெள்ளப்
பூதர்கண் மருங்கு சூழப் பொறித்தழ லுமிழ்மா லிறங்கும்
கோதைவன் சிலைக்கை வீர பத்திரன் கோப மூள
மாதிர நடுங்க வாமான் மணிப்பொலன் றேரிற் சென்றான்.

(இ - ள்) குற்றமில்லாத எண்ணூறாயிரங்கோடி வெள்ளத்தொகையாகிய பூதர்கள் பக்கலிற் சூழும்படி அக்கினிப் பொறிகளைக் கக்கும் மாலைசூடிய வளமமைந்த வில்லேந்திய கையையுடைய வீரபத்திரக்குரிசில், கோபமதிகரிக்கவும், திசைகள் நடுங்கவும், காட்டுப்பசுவைப் பூட்டிய அழகிய மணிகள்பதித்த (வேறோர்) தேரி லேறிச் சென்றனர் எ - று. (உச)

கூரயி லேந்தி நாலா யிரமெனுங் கோடி வெள்ளச்
சாரதர் மருங்கு சூழச் சண்முகப் பெருமா னீலப்
பாரசலத்தின் மீது பருதிவந் தெழுந்தா லென்னப்
போரணி சிறகாப் பேழ்வாய்ப் பொறிமயி லூர்ந்து சென்றான்.

(இ - ள்) கூர்மைபொருந்திய வேலாயுதமேந்தி, நாலாயிரங்கோடி வெள்ளத்தொகையாகிய பூதர்கள் புடைசூழ, சுப்பிரமணியக் கடவுள், நீலமாகிய பரப்பையுடைய மலையின் மேலே சூரியன் வந்து தோன்றினாற்போல, போர்த்தொழிலையுடைய அழகிய சிறகையும், பிளவுபட்டவாயையும், புள்ளிகளையுமுடைய மயில் வாகனமூர்ந்து சென்றனர் எ - று

சண்முகன் - அறுமுகக்கடவுள், முருகன் (உரு)

வேறு

சிறந்த தேசின் முப்பத்து முக்கோடி தேவர்களும்
விறந்த வேலை வானவர்கள் விஞ்சையர் முதற்பலரும்
புறத்தொ டார்ந்தெழப் பூரண னருள்கொடிந் திரனும்
மறந்த ழைத்தநாற் கோட்டுவா ரணங்கடாய் நடந்தான்

(இ - ள்) மேம்பட்ட கீர்த்தியையுடைய முப்பத்துமூன்றுகோடி தேவர்களும், வலியமைந்த பிறதேவர்கள் வித்தியாதரர் முதலானோர் பலரும் பக்கலிற்றொடர்ந்து வரும்படி, விநாயகப்பெருமானுடைய திருவருள்பெற்று இந்திரனுங் கொலைத் தொழில்மிக்க நாற்கொம்பினையுடைய (ஐராவதமென்னும் வெள்ளை) யானையின் மேலேறிச் சென்றனன். எ - று (உசு)

கண்டனந்திமா காளன்குண் டோதரன் கொற்றங்
கொண்ட முண்டிகோ கன்னனே சுசகன்னன் முதலா
[illegible]டு வீரர்கண் மலிபெரும் பூதர்க ளோடு
[illegible]ண்டர் நாயக னணிமணித் தேர்ப்புறஞ் சூழ்ந்தார்.

(இ - ள்.) கண்டன் - நந்தி - மகாகாளன் - குண்டோதரன் - வெற்றிபொருந்திய முண்டி - கோகன்னன் - சுசகன்னன் முதலாகிய நெருங்கிய (பூத)வீரர்கள்) (வலி)

மிக்க பெரிய பூதசைநியத்துடன், தேவநாயகனாகிய சிவபெருமானுடைய அழகிய நவ ரத்தினமயமான இரதத்தினபக்கலில் (கூட்டமாக) மொய்த்தார்கள். எ - று. (உஎ)

உமைமணாளரொள் ளருளினா லுற்றுநான் கடவ
விமையவோங்கல்பல் வரையொடு மெழுந்துசெல வதுபோற்
சுமைவி ராவுபன் றேரிடைத் துன்னந்துசென் றன்று
லைமையு மாமறைப் புரவிபூட் டியவவிர் மணித்தேர்.

(இ - ள்.) உமாதேவி தலைவராகிய சிவபெருமானுடைய கிருபையால், நான் செலுத்த, இமயமலையானது பலமலைகளோடும் எழுந்துசெல்வதுபோல, சிறந்த வேதப் புரவிகட்டிய பிரகாசிக்கின்ற அழகிய தேரானது சுமைபொருந்திய பலதேர்களின் நடுவே விரைந்துசென்றது எ - று.

நான என்றது கூறுமபிரமன தனனை (உஅ)

புண்ணி யன்பொலந் தேர்மணிக் காலொடு புனித
நண்ணி ருங்குறட் பூதர்க ளலத்தகு காலு
மண்ணு புண்ணியத் தாலணு வடிவமா யவனி
விண்ண மேறுவ தொத்தது விரைந்தெழு பூழி.

(இ - ள்) விரைந்தெழுகின்ற புழுதியானது, புண்ணியசொரூபியாகிய சிவ பெருமானுடைய பொற்றேரின அழகிய காலும், புனிதம்பொருந்திய பெரிய பூதகண த் தலைவர்களது நலந்தங்கிய காலும்பொருந்திய புண்ணியவசத்தால், பூமியானது அணு வடிவமாகி ஆகாயத்திற்கு ஏறிச்செல்வதையொத்திருந்தது. எ - று. (உகூ)

தேவர் யாவருந் திரண்டொரு தேரென நம்பால்
மேவி னாரவ ரிடங்களு மேவலு மாமென்
றோவி லாவிழை வாலவிரைந் தெழுந்தது மொக்கும
பாவு பாருரு வாகிய பரந்தெழு தூளி.

(இ - ள்) தேவர்களெல்லாருஞ் சேர்ந்து ஒரு தேர்வடிவாக நம்மிடத்திற்கு வந்தார்கள். (ஆதலின்) அவர்கள் வசிக்கும் இடங்களை நாம் அடைதலுமாகுமென்று, பரந்தபூமியானது கெடுதலில்லாத விருப்பத்துடன் பரவியெழுந்த புழுதிமயமாகி விரைந்து மேலே கிளம்பியதையு மொத்திருக்கும் எ - று. (௩0)

குடையும் பிச்சமும் பெண்பா சடையெனக் குலவ
விடையும வாளகதிர் வேலினை மீனங்க ளாக
வடையுங் கேடக மாமைக ளாகவார்த் தியவார்ப்
புடைய சேனைக ளொலிகட லெழுமொத் தனவே.

(இ - ள்) குடைகளும் மயிற்பீலிகளும், நுரையையும் பாசடையையும்போன்று விளங்க, நெருங்கியவாளும் ஒள்ளிய கிரணத்தையுடைய வேலுமாகிய இவை மீன்களாகவும், பொருந்திய கேடகங்கள் ஆமைகளாகவுங்கொண்டு, வார்த்தியழுக்க முடைய சேனைகள் ஒலிக்கின்ற கடல்களேழையு மொத்திருந்தன. எ - று. (௩க)

சேனை யம்பெருங் கடலிடைத் திரைத்தெழு திரைபோன்
மான மலிகிய பதாகைகள் வயின்வயி னசைந்த

மேனி வந்தெழு தூளிநீர் முகந்தெழு மேக
மான விண்ணவர் சொரிமல ரவைமழை போன்ற.

(இ - ள்) சேனையாகிய அழகிய பெரிய கடலினடுவே மறித்தெழுகின்ற அலைகள்போல, மாட்சிமைமிக்க துவசங்கள் இடங்கடோறு மசைந்தன. மேலே யுயர்ந்தெழுகின்ற தூளியாகிய நீரைமொண்டுகொண்டெழுகின்ற மேகத்தைப்போல, தேவர்கள் சொரிகின்ற மலர்கள் மழைபோன்றன எ - று. (௬௨)

மேக்கு யாத்திய விழுக்கொடி கூம்பதன் மீது
தாக்கு வல்லிடை சார்ந்தமீ காமனும் புறத்தி
னூக்க மிக்கெழு தேர்களுந் தோணிமா திகளா
மாக்க லம்பொர வள்ளறே ரோடிய தம்மா.

(இ - ள்) மேலேயுயாத்திய பெரிய கொடிகூம்பின்மேலே தங்கிய வலியமைந்த இடமானது பொருந்திய மீகாமியாகவும், பக்கங்களில், மனஞ்சோராமை யோங்கி மேம்பட்டெழுகின்ற தேர்கள் நகர்கின்ற தெப்ப முதலியவைகளாகவும் விளங்க, சிவபெருமான் ஆரோகணித்த தேரானது பெரிய மரக்கலத்தைப்போல (சேனையாகிய கடலினிடையே) ஓடியது. எ - று (௬௩)

மனமும் பின்னிட வயப்பரி வீரர்கண் மணித்தே
ரினமும் பின்னிட வெம்பிரா னிரதமுஞ் சென் றடுப்பக்
கனமும் பின்னிடுங் கனைகுரற் றிரிபுர னறிந்து
சனமும் பின்னிடத் தனிநெடுந் தேர்மிசை யிவர்ந்தான்.

(இ - ள்) மனவேகமும் பிறபடும்படி, வெற்றிபொருந்திய குதிரைச்சேவகர்களுடைய அழகிய தேர்த்தொகுதிகளும் பின்னிடும்படி, எமது சிவபெருமானுடைய தேரானது (விரைந்து) சென்றுசேர, மேகமும் பின்னிடத்தக்க வெடிபடு குரலையுடைய திரிபுரன் தெரிந்துகொண்டு, தன் சைனியமும் பின்னிடும்படி ஒன்றியாகப் பெரிய தேரின்மேலேறினன் எ - று (௬௪)

வேறு வேறுசென் றமரினை விளைமினக் ளென்று
வீறு சேர்தரு மைந்தர்க்கும் விளங்குறும் புரர்க்குங்
கூறி யேறுதன் கொடிஞ்சியந் தேரினைக் குழக
னேறு தேரினுக் கெதிருற விடுத்தன னிமைப்பில்.

(இ - ள்) வலிதங்கிய புதல்வர்க்கும் விளங்குகின்ற திரிபுரவாசிகளுக்கும் வெவ்வேறுசென்று போர்புரியுங்களென்று கூறிவிடுத்தது, (திரிபுரன்) தன்னுடைய கொடிஞ்சியுடைய தேரை (இமைப்பொழுதில்) சிவபெருமான் ஏறிய தேருக்கெதிரே பொருந்தச் செலுத்தினன் எ - று (௬௫)

அண்டம் யாவையு மரைக்கணத் தவித்திடு மாண்மை
கொண்ட தானவக் குழாம்படை குடங்கைகொண் டார்ப்பக்
கண்டை யாதிகண் முழங்கவெண் கவிகையா திகளு
மண்ட மண்டினுன் வரவினை வள்ளலார் பார்த்தார்

(இ - ள்) அண்டங்களையெல்லாம் அரைவிநாடியில் அழிக்கும் ஆண்மையமைந்த அசுரர்கூட்டமானது ஆயுதங்களைக் குடம்போன்ற கையிற்கொண்டு ஆரப

பரிக்க, வீரகழல் முதலியன வொலிசெய்யவும், குடைமுதலியன நெருங்கவும் (திரிபுரன்) வருவதைச் சிவபெருமான் கண்டனா் எ - று. (௯௬)

நிணத்தின மூழ்குவே லேந்துதம வீரர்க ணெடுந்தோண்
மணத்தல் செய்தகண் டூதியை மாற்றுதற பொருட்டோர்
கணத்தி னீற்றுறும படைகரத் திருந்துங்கண் ணுதலார்
குணத்தின் மேம்படுந திரிபுர னொடுமபோா குறித்தார்.

(இ - ள) (எதிர்த்த பகைவர்களுடைய) நிணத்திலே குளிக்கும் வேற்படையேந்திய தமது வீரர்களுடைய நெடிய தோளிற்பொருந்திய தினவைமாற்றுதல காரணமாக, ஓா் விநாடியில சாமபராகத்தக்க ஆயுதம தமது திருக்கரத்திலிருந்தும, நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான, போாபுரியும குணத்தினமேம்பட்ட திரிபுரனுடன போாசெய்யக் கருதினா எ - று. (௯௭)

வாரமாகிய கணேசரை மதித்துத் தேசா
பாா மேருவில பங்கயச செங்கையிற பிடித்தாா
தீர னானமுப புரனுமத தேவனைத தொழுது
கோர மாகிய கொடுமரங குடங்கையி லெடுத்தான.

(இ - ள) தேவதேவராகிய சிவபிரானா தமக்குரிமையாகிய கணேசபபெருமானைத தியானஞ்செய்து, பாரமுள்ள மேருமலையாகிய வில்லைத் தாமரைமலா போலுஞ் சிவந்த திருக்கரத்திற்றாங்கினா தீரவானான திரிபுரனும அக்கணேசப பெருமானைப பணிந்து, பயங்கரமாகிய தனவில்லை அங்கையிலெடுத்தனன. எ - று

விரைத் தைந்தவெண டும்பைசூ டினாிரு வோருங
குரைத் தைந்தவாா சிலைபடு நாணொலி கொளுத்த
வரைத் ளங்கின தளுமபின வாருதி யேழுந
தரைக் கிழிந்தன கிழிந்துசாயந் தனவண்ட முகடு.

(இ - ள) வாசநெருங்கிய வெள்ளிய தும்பைமாலையை இருவருஞ் சூடிக கொண்டு, ஒலிபொருந்திய நெடிய விலலினிடத்திற பொருந்த நாணொலியெழுபப [குணதொனிசெய்ய]மலைகள்குலுங்கின கடலகளேழுங் கலங்கின பூமியினவுறறது அண்டத்துச்சி பொடிபட்டுச சாயநதன எ - று. (௯௮)

தருக்கள வீழ்ந்தன வீழ்ந்தன தடஞ்சி றைப்பறவை
கருக்க ரைந்தன வுதிர்ந்தன ககனவா னுடுக்க
ளிருக் தமெண்டிசை யிருவகை நாகமு மிளைந்த
முருக்கு வணசிலை மூட்டுநாண முழங்கிய வொலியால்.

(இ - ள) வணமைதங்கிய விலலுகளை வளையும்படி பூட்டிய நாணினது முழங்கிய ஓசையால, மரங்கள் விழுந்தன. பரந்த சிறகையுடைய பறவைகள் விழுந்தன கர்ப்பங்கள் கரைபட்டன. ஆகாயத்திலுள்ள பெரிய நட்சத்திரங்கள் (அதிர்ந்து) நிலமிசை உதிர்ந்தன எட்டுத் திசைகளிலிருக்கும் இருவகை நாகங்களும் துன புற்றன எ - று.

இருவகைநாகம்—பாமபு - யானை. அஷ்டதிக்கஜங்கள் - ஐராவதம் - புண்டரீகம் - வாமனம் - குமுதம் - அஞ்சனம் - புட்பதந்தம்-சாருவபூமம்-சுப்பிரதீபம் என

பன். இவை கிழக்குமுதல் வடகிழக்கிறுக முறையே நிற்கும். அஷ்டநாகங்கள் - வாசுகி - அநந்தன் - தக்கன் - சங்கபாலன் - குளிகன் - பதுமன் - மகாபதுமன் - கார்க்கோடகன் என்பன இவையும் முறையே கிழக்குமுதலாக எண்டிசைகளிற் பூமியைத் தாங்கா நிற்குமென்பர். (௪௰)

பின்கொ டுத்தவர் தூணியிற் பெய்தபல் கணையு
முன்கொ டுத்திட முடங்கிய தொருகைமற் றொருகை
முன்கொ டுத்தவில் பின்கொடுத் திடமுன்னே நிமிர்ந்த
வென்கொ டுத்துமாற் றரியபோ ரிருவரு மிழைத்தார்

(இ - ள்) பின்பக்கலிலுள்ள நெடிய அம்பறாத்தூணியிற் பெய்துள்ள பல அத்திரங்களையும் முன்னே கொடுக்கும்படி முடக்கியதாகிய ஒருகையும், முன்பக்கலிலுள்ள வில்லைப் பின்னே கொடுக்கும்படி முன்னே நிமிர்ந்ததாகிய மற்றொருகையுமாக, எதனாலும் நீக்க அரியபோரை இருவருஞ் செய்தார்கள் எ - று (௪௧)

முருக னோடுபோந் தெதிர்த்தனன் முதிர்பிர சண்டன்
பொருவி னந்தியோ டமர்த்தனன் பொருதிறற் சண்டன்
செருவ லாரியோ டேற்றனன் றிரிபுர னமைச்சன்
வருச யந்தனோ டுருத்தனன் மதனெனு மைந்தன்

(இ - ள்) வலிமிக்க பிரசண்டன் முருகக்கடவுளுடன் வந்தெதிர்த்தனன் போர்செய்யத்தக்க வல்லமையுடைய சண்டன் ஒப்பில்லாத நந்தியோடு போர்செய்தனன் திரிபுரனுடைய மந்திரி போர்செய்யத்தக்க வலாரியாகிய இந்திரனோடெதிர்த்தனன் மதனென்னும் பெயரையுடைய (அத்திரிபுரன்) மகன் சயந்தனோடு பகைத்தனன் எ-று

சயந்தன் - இந்திரன் மகன்

மதன் - திரிபுரன் மகன் (௪௨)

ஆல மேயென வழன்றுபொன் னிஞ்சியை யூர்ந்து
கால கூடன்புட் பதந்தனைக் கலந்தமர் புரிந்தான்
சீல வீரபத் திரனொடு மிருப்பெயிற் செலுத்திக்
கோல வச்சிர தமிட்டிரன் குயிற்றினன் வெம்போர்.

(இ - ள்.) காலகூடனென்பவன் ஆலாலம்போலவே கொதித்துப் பொன் மதிலைச் செலுத்தி, புட்பதந்தனை யெதிர்த்துப் போர்செய்தனன் அழகிய வச்சிர தமிட்டிரனென்பவன் இருப்புமதிலைச்செலுத்தி, சிறந்தோங்கிய வீரபத்திரரோடு பெரும் போர் செய்தனன். எ - று

புஷ்பதந்தர் - இவர் விநோதமாகச் சிலமுனிவருடன் நாத்திகம்பேசின பாவத்தைப் பரிகரிக்கும்படி தமது பற்களைக் களைந்து மலராகப் பாவித்துச் சிவார்ச்சனைசெய்ய, அவர் பத்திக்கிரங்கிய பரமபதி அவர்க்குக் காட்சிதந்து புஷ்பதந்தரென நாமமும், இழந்த பற்களை மீண்டும் பெறுகையும் அநுக்கிரகித்தனரென்பது புராண சரிதம். (௪௩)

மள்ளர் பேசரு விமகா யப்பெயர் மன்னன்
வெள்ளி மாமதி லூர்ந்துபோய் விநாயகர் மைந்தனை

றள்ளு ருவிற விலக்கனைக் கூரா நதன வைவ்பா
னுள்ள வீரருட் புருசண்டி யுருத்துமே லடர்ந்தனன்.

(இ - ள்.) போர்வீரர்கள் துதிசெய்யும்படி வீமனாயனுகிய பெயரையுடையவன பெரிய வெள்ளிமதிலைச் செலுத்திக்கொண்டு சென்று விநாயகக்கடவுள் குமாரனுகிய நீக்கப்படாத வல்லபமுடைய இலக்கனை யடைந்தனன், அவனிடத்துள்ள வீரர்களிலே புருசண்டி யென்பவன் கோபித்துப் போருக்கு மேற்கொண்டான். எ-று.

கண்ட னுதியாங் கண்ணுத லார்படைத் தலைவா
மிண்டு தானவன் விறற்படைத் தலைவரோ டெதிர்த்தார்
மண்டு பூதாகண் மற்றவன் வயவர்க ளோடு
தண்ட மாதிக்குத் தண்டமா திகளொடு சமர்த்தார்.

(இ-ள்.) கண்டன்முதலாகிய சிவபெருமானுடைய சேனைத்தலைவர்கள், மதத்தாற் பிழைபடுந் திரிபுரனுடைய வலிய சேனைத்தலைவரோ டெதிர்த்தார்கள். நெருங்கிய பூதவீரர்கள் அவனுடைய போர்வீரர்களோடு தண்டமுதலியவற்றைத் தாங்கினவர்களுக்கு தண்டமுதலியவற்றைத் தாங்கினவர்களாக [சமானஸ்தர்களாக]ப் போர் செய்தார்கள். எ - று. (௪௦)

வே று.

வாளோச்சுவா கணையுந்துவா வடிவேல்பல வெறிவா
ராளோடற வேழுகதிர ளடுவாபரி தெறுவார்
தாளோடற விரதத்தொகை தடிவாரெதிர் தானை
கேளோடற வெறிவார்வின்ல கிளர்பூதாக டலைவர்.

(இ - ள்) வலிமை விளங்கும் பூதத்தலைவர்கள் வாளால் வெட்டுவார்கள். அத்திரங்களைச் செலுத்துவார்கள். கூர்மையாகிய பலவேலாயுதங்களைச் செலுத்துவார்கள். யானைத் தொகுதிகளை ஆளுடன் அறும்படி கொல்வார்கள். குதிரைகளைக் கால்களறும்படி யழிப்பார்கள். இரதகூட்டங்களை வெட்டுவார்கள். சத்துருசேனை கூட்டத்தோடழிய வீசுவார்கள். எ - று. (௪௧)

பார்ப்பார்விழி வெகுளித்தழல் படுவாரிமை தீயத்
தீரப்பார்பல ருயிரைப்பல தேர்ப்பாகரை யடுவா
ரார்ப்பார்கொடி முடிவார்சிலை யறவாளிக டேண்டித்
தூர்ப்பார்நெடு மொழிவெஞ்சினஞ் சொல்வார்தயித் தியரே.

(இ - ள்.) அசுரர்கள் (தேவகணங்கள் செய்யும்போரைப்) பார்ப்பார்கள்; கண்ணிமை தீயும்படி கோபாக்கினியைக் கக்கிப் பலருயிரை யழிப்பார்கள்; பலதேர்ப்பாகரைக் கொல்வார்கள்; ஆரவாரிப்பார்கள்; கொடியும் கிரீடமும் நெடியவில்லும் அறும்படி அம்புகளைச் செலுத்தி எங்கும் நிறைப்பார்கள்; வெஞ்சினமாகிய நெடிய மொழிகளைச் சொல்வார்கள். எ - று.

வெஞ்சினம் - போர்மலைத்தாற் கூறுதல். (௪௨)

தாளற்றன ரரையற்றனர் சடாங்குடர் தெதரிய
நாளற்றன ருரமற்றனர் கையற்றனர் மத்தைத்

(இ - ள்.) தாரகாசுரன் - இறந்தசிங்கமுகன் - ஒப்பற்ற சூரபன்மனாகிய வீரர்கள் மூவருமே மறுமோர் வடிவங்கொண்டாற்போன்றவனாகிய பயங்கரமான தோற்றமுடைய பிரசண்டனென்பவன் குமாரக்கடவுள் பக்கலில், உரிமையாகிய படைமுழுவது மழியும்படி போர்செய்தான் எ - று. (ருஉ)

கண்டு கந்தவேள் கதுமெனக் கலவமா மயிலை
மண்ட லங்கொளக் கடவியோர் சிலைக்கணை கடைநாட்
கொண்டல் போற்சொரிந் தரைக்கணத் தளவையிற் கொடியோன்
மண்டு சேனையை யழித்தவன் றனேர டுத்தான்.

(இ - ள்) முருகப்பெருமான் கண்டு தோகையையுடைய பெரிய மயில்வாகனத்தை மண்டலவடிவாக விரைந்துசெலுத்தி நெடியவில்லில் அம்புகளை ஊழிக்கால மேகம்போலப் பெய்து, அரைவிநாடிகாலத்திற் கொடியோனாகிய பிரசண்டனுடைய சேனையை யழித்து அவனுக்கு நேரேசென்றனர் எ - று. (ருங)

நேர்ந்தி டும்பிர சண்டன்வா ளிகணிலத் தாக்கி
வார்ந்த வில்லினைத் தேரினை வழங்குபல் படையை
யீர்ந்து வானவப் படைகளு மிறுத்தனன் செய்யுங்
கூர்ந்த மாயையோ டவனையுங் கணையினாற் கொன்றான்.

(இ - ள்) போர்புரியும் பிரசண்டனுடைய அம்புகளை நிலமிசை விழச்செய்து, பொருந்திய வில்லையும், தேரையும், செலுத்திய பல ஆயுதங்களையும் வெட்டி, தேவாத்திரங்களையு மழித்து, அவன் புரிகின்ற மிக்க மாயையுடன் அவனையும் அம்பினாலே கொன்றனர் எ - று. (ருச)

சண்ட மாருத மெனப்பொருஞ் சண்டன்சே னைகளைக்
கண்ட துண்டங்க ளாக்கியோர் கடிகையி னந்தி
கொண்ட கொண்டபல் போரையுங் குமைத்துமுக் கணையா
லண்ட ராரத் திடச்சண்ட னுயிரையு மழித்தான்.

(இ - ள்) பெருங்காற்றுபோலப் போர்செய்யுஞ் சண்டனுடையசேனைகளை, நந்தியானவர் ஓர் விநாடியில், கண்டதுண்டங்களாகச்செய்து, அவன்செய்த பலவகைப் போர்களையு மழித்து, மூன்று பாணங்களால் அமரர்கள் ஆர்ப்பரிக்கச் சண்டனுடைய அரிய உயிரையு மழித்தனர். எ - று.

சண்டம்=வேகம். (ருரு)

புட்ப றந்தெனப் பறக்குமப் பரன் மதிவினோ தம்மைக்
கட்ப கந்தொடைக் காலகண் டன்படை விலக்கி
விட்பு லங்கடந் தோகிரி தாவிடுத் தமர்த்துப்
புட்ப தந்தனைங் கணையினா லவனுடல் பொடித்தான்.

(இ - ள்) பறவை பறந்தாற்போலப் பறந்துசெல்லும் பொன்மதிவேதிய அழகிய தமனியமாகிய தேன்சொரியும் பசிய மலர்மாலையணிந்த காலகண்டனுடைய சேனைகளையகற்றி, ஆகாயத்திலே தன்னுடைய விசாலமான தேரைத் திரியச்செலுத்திப் போர்செய்து அவனுடலைப் புட்பதந்தன் ஐந்து அஸ்திரங்களாற் பொடிசெய்து கொன்றனன். எ - று. (ருசா)

வெள்ளி யிஞ்சியோ டெதிர்த்திடும் வீமகா யனைநோக்
கெள்ள லில்பல போர்செலா மியற்றிமெய் யிரத்தந்
துள்ளி வீழ்ந்தவா றாயபுரு சுண்டிநாற் கணையா
லள்ளி யுண்டன னந்தகத் தவுணனா ருயிரை.

(இ - ள்.) வெள்ளிமதிலோடெதிர்த்த வீமகாயனை யடுத்து, இகழ்வில்லாத பல்வகைப் போரைச்செய்து, உடலினின்று திரமானது குதித்தோடி யொழுகும்படி, புருசுண்டியென்பவன் நான்கு கணைகளால் அந்தத் தகுதியாகிய அசுரனுடைய அரிய வுயிரையள்ளிப் பருகினன். எ - று. (௫௭)

இருப்பு நொச்சியோ டெதிர்ந்தவச் சிரதமிட் டிரனைப்
பொருப்பு நேர்பொலந் தேரொடு பொருதுநாற் கணையாற்
செருப்பி னேனென வவுணர்க டெருமரச் செகுத்தான்
விருப்பின் வேள்வியி னமரரா ருயிருண்ட வீரன்.

(இ - ள்) (தக்கனுடைய) யாகத்தில் ஆசையோடு தேவர்களுயிரைக்கொன்ற வீரபத்திரக்கடவுள், இருப்புமதிலோ டெதிர்த்த வச்சிரதமிட்டிரனென்பவனை, மலையையொத்த தேருடன் போர்செய்து, நான்கு பாணங்களாற் பின்னே போரேதென்று சொல்லும்படி, அவுணர் அச்சமடையக் கொன்றனன். எ - று. (௫௮)

வச்சி ரத்தினு லிந்திர னவுணன்மந் திரியைக்
கைச்சி ரத்தையோ டளவில்போர் கண்டுபுள் ளொருவை
நச்சி ரத்தநீ ரொழுகிட நகைமணி முடிசே
ரச்சி ரத்தினை யரிந்தன னணிந்தனன் வாகை.

(இ - ள்.) இந்திரனென்பவன் திரிபுரனுடைய மந்திரியைவச்சிராயுதத்தைக்கொண்டு, கைச்சிரத்தையுடன் அளவில்லாத போர்செய்து, பறவைகளுங் கழுகுகளும் விரும்பத்தக்க உதிரநீரொழுகும்படி, பிரகாசிக்கின்ற மணிகள் பதித்த கிரீடமணிந்த அவனுடைய சிரசையரிந்தனன், வெற்றிமாலையணிந்தனன். எ - று (௫௯)

சயந்தன் முப்புரன் றனயனோ டெதிர்ந்தவன் சமர்த்து
வயந்த யங்கிடக் கைப்படை போக்கிமெய் வடிவேல்
புயந்து மேல்வரும் பொருநர்கள் சிரங்களும் புரட்டி
வியந்து விண்ணவர் போற்றிட வவனுயிர் விளித்தான்.

(இ - ள்) சயந்தன் திரிபுரன்மகனோ டெதிர்த்து அவனது போர்வல்லபம் விளங்கும்படி கையிலுள்ள ஆயுதங்களைச்செலுத்தி, அவர்களுடலையும், கூர்மையாகிய வேலையும், கோபித்து மேலேவருகின்ற போர்த்தொழிலாளர்கள் சிரங்களையும் புரட்டி, தேவர்கள் களித்துத் துதிசெய்யும்படி அவனுயிரை யழித்தனன். எ - று. (௬௦)

சிலைவ ளைத்தமா புரிதரு திரிபுர னோடு
மலைவ ளைத்தவர் வன்சம ராடிமற் றவன்கைக்
கொலைவ ளைத்தவன் கொடுமரந் துமித்துடன் குழூஉ
மலைவ ளைத்தவா ருதிபொரூஉஞ் சேனையு மழித்தார்.

(இ - ள்.) வில்லைவளைத்துப் போர்செய்யுந் திரிபுரனுடன், மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரானார் வன்மைதங்கிய போர்செய்து, அவன் கையிலுள்ள

கொலைத்தொழிலைப் பெருக்கிய வலியவில்லைத் துணித்தது, அவனுடன் கூடியிருக்கும் அலைகளைப்பொருந்திய சமுத்திரத்தையொத்த சேனையையு மழித்தனர் எ - று

வாருதி - நீர் உகுத்தற்கிடம் (௬௧)

வேறு கார்முகம் வாங்கினன் வெடிபட வார்த்து
நூறு வாளிக ளூறுநூ றாயிர நொடியிற்
சீறு மேறுமா லாகிய விறைவனூர் கடவுந்
கூறு தேர்மிசைத் தூண்டினன் கொடும்பா தகனே.

(இ - ள்) கொடியபாதகனாகிய திரிபுரன் வேறு வில்லையெடுத்து வெடிபடும்படி யாரவாரித்து, பொடிபடுத்தத்தக்க நூறுநூறாயிரங் கணைகளை விநாடியிலே, ஏறத்தக்க இடபமூர் திருமாலேயாகக்கொண்ட சிவபெருமானார் செலுத்தும் (மேற்) சொல்லிய (பூமியாகிய) தேரின்மேலே செலுத்தினன் எ - று (௬௨)

விடுத்த பத்திர மிமைக்குமுன் விலக்கிவெங் கணைகள்
தொடுத்து நன்முடி கவசநூ ணிகதொடர் மாவேற்
றடுத்த சேமத்தே ரனைத்தையு மறுத்தன னமலன்
படுத்த வேனிலி னொதியெனா நின்றனன் பதகன்

(இ - ள்) திரிபுரன் செலுத்திய அஸ்திரங்களை, புனிதராகிய சிவபெருமானார் இமைகொட்டு முன்னரே விலக்கி, கொடிய பாணங்களைப் பிரயோகித்து, நல்ல கிரீடம் - கவசம் - அம்பறாத்தூணிகள் - தொடர்ந்து செல்லுங் குதிரைபூட்டிய தேர்கள் - அடுத்துநின்ற சேமத்தேர்கள் முதலிய வெல்லாவற்றையுந் துணித்தனர் (அதனாலே அவன்) மிக்கவேனிற்காலத்து ஒதியமரம்போல நின்றனன் எ - று

சேமத்தேர் - உதவித்தேர்.

வேனிலினொதியென்றது வேனிற்காலத்து ஒதியமரம் இலைமுதலியன உதிர்ந்து மரமாக நிற்றலின் (௬௩)

முன்னர் நாணிய முப்புரன் முகத்தினை நோக்கி
யென்னை யாளுடை யானினு மெஞ்சமர் வல்லை
யன்ன தாற்றுதி யகன்றுவா வென்றருள் புரியு
முன்னர் மைந்தர்க ளனைவரு முடிந்தவா கேட்டான்.

(இ - ள்) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான், தம்முன்னே நாணமுற்றுநின்ற திரிபுரன் முகத்தைப்பார்த்து, இன்னுஞ்செய்யத்தக்க எவ்வகைப்போரில் நீ வல்லவன்? அதனை அப்பாற்சென்று யோசித்து விரைவில்வந்து செய்யக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருளுமுன்னர் தன் புதல்வர்கள் யாவரும் இறந்தமையைக் கேள்வியுற்றனன் (திரிபுரன்.) எ - று (௬௪)

வாரத் தாலெழு மலைத்தைப் பாற்றினன் மாறு
வீரத் தாலெழு முளத்தினால் விழுமதின் மூன்றுஞ்
சாரத் தானினைந் தானவை சார்ந்தன வேறில
கோரத் தாலொரு மூவராய்க் குறுகினன் றெதிர்த்தான்.

(இ - ள்) (புதல்வரிடத்துண்டாகிய) அன்பினாலெழுந்த துன்பத்தை யொழித்தனன். நீங்காத வீரத்தன்மையோடெழுகின்ற மனத்தினால், சிறந்த மும்மதில்களை

கொடிக்கு மூன்னுல கனைத்தையு நுணபொடி யாக
முடிக்கு நீயோமுப் புரனொடு மூணபெல காலம்
வடிக்கும வானபடை யாறசமா புரிமனை வெழுசசி
பிடிக்கு மோரவினை யாட்டலாற பேசினவே றினறே.

(இ - ள்.) கொடிப்பொழுதிறகு முனனே எல்லா வுலகங்களையும் நுண்ணிய பொடியாகச செயயுந தேவரீர் திரிபுரனுடன எதிரதது, கூரமையாகிய சிறநதஆயுதங களாற் பலகாலமபோராபுரிகினற திருவுளளமானது, கருததககக தோா திருவிளையாட்டலலாமல, சொலலுமிடநதில வேறிலலை. எ - று (எ0)

எமபி ரானவிளை யாடடினை யாவரே யறிவாா
வமபி லாதபோ ரவுணனை மாதவ முடையா
னுமபா தாதையின சிரமத னமணிவ ருலைய
வெமபு நினனெதி ரினறுபல போாவிளைத தலினுல.

(இ - ள.) எமபெருமானுடைய திருவிளையாடலை எவாதாமறியவல்லவர்? தேவாகடகுப பிதாவான பிரமனசிரமும மணமசனும இயமனும அழியுமபடி கோபிதத தேவரீாககெதிரே நினறு பலவிதமாகப் போாபுரிநத தனமையால அனபிலலாத போர் செயயுநதிரிபுரனே பெருநதவமுடையவனுயினன. எ - று (எக)

யாங்க ணீபுரி போரினை நோககவு மாறறேந
தேங்கொள் கொன்றையாய சிறுவரை யவுணனைச செகுத்து
வீங்கு வாகையை மிலைதருளாயென விரநதார்
பாங்கு நினறவ டானுமப படிசெய்க வெனறுள.

(இ - ள) தேவரீா செய்யுமபோரை அடியேஙகள பார்க்கவுஞ் சகியோம. தேனொழுகுங கொன்றைமாலையணிந்தவரே! திரிபுரனையும் அவன்புதலவரையுங்கொனறு பூரிதத வெற்றிமாலையை யணிந்தருளவேணடுமென்ற (தேவர்கள்)யாசிததார்கள. பககலில நினற உமாதேவியாரும அஙஙனமே செய்கவெனக கூறினர். எ - று.

வாதி னுலொரு காளிபோற போரினுல வலிய
கோதை வாாசிலை முபபுரன் கொறறநீ காணப
போத வாரமா புரிநதன மினிப்புரம பொடிப்பா
மாது காணடியென றுரைதது௵ருதிவிட மயின்றோன்.

(இ - ள்) பார்க்கடலிற் றோன்றிய விடமருந்தியசிவபிரான்(கிருதது) வாதிலே ஒப்பற்ற காளியைப்போல, போரிலே வல்லவனாகிய மாலைகட்டியநெடிய விலலேந்திய திரிபுரன வல்லமையை,நீ காணும்படி பொருந்திய பெரும்போரைச் செய்தோம். இனித் திரிபுரத்தைச் சாம்பர் செயவோம். பெண்ணே! பார்ப்பாயாகவென்று (உமாதேவியாரைப் பாாததுக்)கூறி. எ - று. (எ௩)

மாய னாதியோர் மனத்தையு மளவையுங் கடநத
தூய னாகிய கணேசமந திரத்தினைச் சொலலிக்
காயு மூத்தலைச் சூலத்தை விடுத்தனை காணூர்
மேய முப்புரம் பலியொடு வெந்தமை தணடார்.

(இ - ள்.) திருமால் முதலானவர்கள் மனத்தையும் அளவையுங் கடந்த புனிதராகிய கணேசப்பெருமானுடைய மந்திரத்தைச் சபித்து, எரிகின்ற முத்தலை

(இ - ள்.) யோகியாயிருந்து யோகமுத்தியை இனிதாகக் கொடுத்து, போகியாயிருந்து பலபோகங்களையுங் கொடுத்தருள்கின்ற புனிதராகிய சிவபிரானை போர்செய்து அறியாமற்போனால், போரிலே பூதமுதலியவற்றை எவர்தாமறிந்து முறைப்படி போர்புரிவார்கள்? எ - று. (௭௮)

விழுந்து சோர்ந்தவன் பூதர்மேல் விழிக்கடை வழங்கி
யெழுந்து வந்தவர் வணங்கிட வெம்பிரான் மீண்டு
கொழுந்து கொண்டெழு வெண்கதிர்க் கயிலையைக் குறுகித்
தொழுந்தொ றாங்கட வுளர்க்கருள் சுரந்துவீற் றிருந்தார்.

(இ - ள்) (போரில்) விழுந்து சோர்வுற்ற வலிய பூதவீரர்கண்மேலே கடைக்கண்ணோக்கஞ்செய்து, அவர்கள் யாவரும் எழுந்துவந்து வணங்க, எமது சிவபெருமான் திரும்பி, கொழுந்துவிட்டெழுகின்ற வெள்ளிய கிரணங்களையுடைய கயிலைமலையை யடைந்து, தம்மைப் பணியுந்தோறுந் தேவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்து கொண்டெழுந்தருளி யிருந்தனர் எ - று. (௭௯)

எரியி டத்துநின் றாடிய வெம்பிரான் றனக்குத்
திரிபு ரத்தவ னவிந்தவந் நாட்டிரு விழாவும்
பரிவு றப்புரிந் தரிமுதற் பண்ணவர் பலரு
முரிய தத்தம திருக்கையுற் றுவாழ்ந் தனரால்.

(இ - ள்) தீயினிடத்து நின்று ஆனந்தத் திருநடனஞ் செய்தருளும் எம்பெருமானுக்கு, திரிபுரனழிந்த அத்தினத்தில் திருவிழாவும் அன்புடன்செய்து, விஷ்ணு முதலிய தேவர்கள் பலரும் பொருந்திய தங்கடங்கள் பெரியபதவிகளையடைந்து வாழ்ந்திருந்தார்கள் எ - று. (௮௰)

கன்னி மாமதிப் பூரணைக் காமரும் புரத்தோன்
மன்னு மாருயிர் மாய்ந்தநா ளமரர்மிகு பயனைத்
துன்னலா லதைப் பாகுளி யென்று சொல்கின்றா
ரன்ன நாளையில் விழாச்செய்வா ரரும்பயன் பெறுவார்.

(இ - ள்) புரட்டாசிமாசத்துப் பூரணைத்தினம் அழகிய திரிபுரனுடைய அரிய உயிரொழிந்து தேவர்கள் பெரும்பயனை யடைதலால், அத்தினத்தைப் பாகுளியென்று சொல்கின்றார்கள்; அந்தத்தினத்தில் (சிவபிரானுக்குத்) திருவிழா செய்பவர்கள் அரிய பயனையடைவார்கள். எ - று. (௮௧)

அந்த நாளையிற் றத்தம தாற்றலுக் கேற்ப
வெந்தை யார்தமக் கருச்சனை யாதிக ளியற்றிக்
கந்த மார்ந்தநெய் தயிலமொன் றதில்விளக் கிட்
டெந்த மன்பினாற் போற்றுவார்க் குறாதுதீ வினையே.

(இ - ள்) அந்நாளில் தங்கடங்கள் சத்திக்கேற்ப, சிவபெருமானுக்கு அருச்சனை முதலியவற்றைச்செய்து, வாசம்பொருந்திய நெய் தயிலமிவற்றில் ஒன்றினால், பிரகாசிக்கின்ற தீபம்வைத்து, தம்மைச்செலுத்தும் அன்பினால் துதிசெய்பவர்களுக்குத் தீவினையானது சம்பந்தப்படாது எ - று. (௮௨)

அனைய கன்னிமா மதிவரு பூரணை யதனிற்
கனையும் வார்கடற் கருவிட மயின்றவன் பூசை

உ

கணபதிதுணை

ஸ்ரீ கைலாசபரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனத்துக்

கச்சியப்பமுனிவர் அருளிச்செய்த

# தணிகைப்புராணம்

# மூலமும்.

---

தொண்டமான புதுக்கோட்டை இளவரசு

ஸ்ரீமாந். பாலசுப்பிரமணிய ரகுநாத தொண்டமான்

மஹாராஜா அவர்கள் கேள்விப்படி

---

யாழ்ப்பாணம் இணுவில்

பொ. அம்பிகைபாக உபாத்தியாயர் செய்த

# புத்துரையும்.

---

இவை

யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை

வி. சபாபதியையர் அவர்களது

ஸ்ரீ பாஸ்கர யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

---

விளம்பித ௵ [illegible]

[illegible] ஆவணி [illegible]

[illegible]

தபாற்கூலி [illegible] சதம் ௨0.

உ

கணபதிதுணை.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணம் இணுவில்

சித்தாந்த சிரோமணி

## ஸ்ரீமத். க. நடராசையா அவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பேருருவிலருட்கச்சியப்பசாமியருள் திருத்தணிகைப்புராணத்திற்கு
மருவுரைநீசெய்திடென வளமருவுபுதுவையிளமன்னிவையம்
வருபுகழ்சேர்பாலசுப்பிரமணியர்க்குநாதவள்ளலவருக்கவரியாது
திருவமருமூலகினலலோர்தெளியவரும்பதவுரையைச்சிறப்பொடீந்தான்

எழிலுறுவற்குழியெனுமூர்தன்னின்மேவுகாராளனியைந்தகேள்வி
விழிநாகத்தரசனெனப்பொறைவாய்ந்தோன்குவளையந்தார்விரவுதோளான்
பழிநாவற்றிடுங்கிலப்பொன்னம்பலவன்ஈன்றதனிப்பாலன்மேன்மை
தொழிலுறுசிவபூசாதுரந்தரன்மெய்ச்சித்தாந்தத்துறைகைக்கண்டோன்.

இலக்கியமுமிலக்கணமுங்கற்றுணர்ந்தோனிணுவைநகரினிதுவாழ்வோன்
துலக்கமுறுகுருலிங்கசங்கமபத்தியன்கேள்வித்துறையின்மிக்கோன்
விலக்கரியவொழுக்கநெறிமேவிநிற்போன்சிவநாமம்விளம்புமவாயான்
கலக்கமறுமுளத்தவனம்பிகைபாகனென்றுரைக்குமகவிஞனன்றே.

---

திருக்கைலாசபரம்பரைத்

திருவண்ணாமலை ஆதீனத்து வித்துவான்

## ஸ்ரீமத். மு. கணேசபண்டிதரவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பொருளரியமொழிக்கச்சியப்பமுனிபுகறணிகைப்புராணத்திற்குத்
திருவமலிபொருணயமுஞ்சொன்னயமுந்தோன்றவுரைதோற்றுவித்தா
னிருவளமொன்றிணுவைநகரினன்பொன்னம்பலவாதமகிழுமைந்தன்
பெருமியநற்கல்வியனம்பிகைபாகக்குரிசில்சிவப்பெட்பினானே.

சிறப்புபபாயிரம்.

மாதகல் சைவபபிரசாரகா

## ஸ்ரீமத. ஏரம்பையரவர்கள் இயற்றிய

நேரிசை ஆசிரியபபா.

துடியிடையுமைசோ வடிவுடையிறைவன
படிமிசையளிதத நடைகெழுகலைகளும
வேதமொடாகம மாதிமுனனூலும
ஓதியபொருளைப பேதம்தினறிக
தொணடாயகுமரனணடாகளவேணட
மணடமாசெயது தெணடிரைககடலுள
துனறுருமாவாய நினறிடுஞசூரை
வெனறிருபிளவாய நனறுபிளததலும
சேவலுமமயிலுமாயக கூவிமுனவரககண
டேவிடுகொடியுந தாவிடுபரியு
பாயவரவுயர்ததவை தேவருஙகாணத
தொணடதாகொண டெணடிசைநடாததிச
கொணடவசசெவவேண மணடலமதிககச
செருநதணிநதமாநத வருததிசோதலமாஞ
செருததணிமாமலைய முரைததமுனமொழி
துவடுதுறையின மேவிமெறிஞா [யை
கசசியபபனு முசசிதமுனிவன
தெனமொழிதனனுற பணிபுராணங
கனைவனகருததிற பினனமினறெனறு
புலவாவிருநதுணப புததுரையெழுதி
நிலவிடசசெயதனன நிரநதபலவளததி
னலமிகுமினுவையா ரனனகாவேளாண
குலமதிலுதிததுப பலவிதகலவியுந
தோநதிடுபொனனம பலவனறறவததாற
சாரநதவேஙகடா சலையாமுனகருவிநூ
லாயநதுபிணிகககண மாறுமுகப வலப
பெருமானுரைததிட விரைவாயோரநது
சைவசிததாநதத ததிககடனமதிததுப
புரிநடராசப போதமெயககுருமுன
முபபொருளுணாநத மூதறிவாளன
இமபரினுளளா ரியமபிடு
மமபிகைபாகனு மாசிரியனனே

நேரிசைவெணபா

அமபிகைபாகபபெயாகொளாசிரியனறறனிவை
யெமபெருமானமானமிபததுகளினுரையை — இனபாகப
பாவினகடலகடைநதுபணடமிாதஙகொணடுபோற
சிலமபெறவுரைததானசெயது

---

## ஸ்ரீமாந். நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளையவர்களியற்றிய

கலிததுறை

பேராயிரமுடையானசாமினுவைபிறஙகவரு
சிரானமிருததவனமபிகைபாகனசெழுநதமிழநூ
லாராயநதிநதவனபாலனைபபணடிதனுககிவைத்தோன
சோராதணிகைபபுராணககுநலவுரைநோநதனனே.

---

சிறப்புப்பாயிரம்.

தொண்டமான் புதுக்கோட்டை
ஹைகோர்ட் நியாயாதிபதி

## ஸ்ரீமாந். சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

தரைத்தலத்திறக்கச்சியப்பசாமிதமிழ்க்கிலக்கியமாத்தருமொப்பில்லாத
திருத்தணிகைப்புராணமுறைசெவ்விதினியாவருமுணரத்தெரிக்கென்றேத்தும்
விரித்தபுகழ்ப்பாலசுப்பிரமணியரகுநாதத்தொண்டமான்சொற்சென்னி
யிருத்திநல்வுரையளித்தானினுவையினம்பிகைபாகனியனதிக்கோனே.

---

சுவாமிகள்

## ம-ா-ா-ஸ்ரீ. அ. குமாரசுவாமிப்புலவரவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருத்தணிகைத்தலசரித்திறங்கூறுந்தொடர்நிலையாஞ்செய்யுட்குணமைக
கருத்தணிகைவரதத்துணிந்தோருரையியற்றியினிதுபிரகடனஞ்செய்தான்
திருத்தமுறுஞ்சித்தாந்தப்பெருங்கலையுமருங்கலையுஞ்சிறந்தோர்பாங்கின்
அருத்தியொடுங்கற்றுணர்ந்தோனம்பிகைபாகப்பெயர்கொள்திறனன்றே

---

## ம-ா-ா-ஸ்ரீ. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள் இயற்றிய

நேரிசை வெண்பா

செம்பொன்வரைபோற்புகழ்த்தேனளித்தத்தொக்குமே
அம்பிகைபாகனெனுமாசிரியன் — வம்பார்
தணிகைப்புராணத்துச்சாரம்பிழிந்தாய்ந்
தணிகொளுரைதந்தவாறு

---

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| க | கக | ஓப்பற்ற | ஒப்பற்ற |
| ௨ | ௪௮ | கிழ | கிழ |
| ௩ | ௨௦ | மனதிற | மனத்திற |
| ௫ | ௩௧ | திருவடிகளும் | திருவடிகள் |
| ௭ | க௮ | மனதிற | மனத்திற |
| ௭ | ௪௮ | பாதத்தாமரைகளையும் | பாதத்தாமரைகளை |
| ௮ | ௨க | நிறைந்த ஆனம | நிறைந்த ஆரிய ஆனம |
| கக | ௩௯ | பிறிதுமொழிதல | உவமைய |
| ௨௪ | க௮ | மயிலகடவி | மயிலகடாவி |
| ௨௨ | ௩௦ | பணபுததொகை | ஆய என்னுஞ் சொல்லுருபு தொக்கது |
| ௨௫ | க௯ | களி | கழி |
| ,, | ,, | உளக்கி | உழக்கி |
| ௨௭ | ௯ | விலைகொண்டு | விலைக்கொண்டு |
| ௩௦ | ௩ | களிக்கும | கழிக்கும |
| ,, | ௨௦ | தளைத்த | தழைத்த |
| ௩௧ | ௩ | எனமுடிக்க | எனவும் முடிக்க. |

உ

சிவமயம்.

# முகவுரை.



திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துக் கச்சியப்பமுனிவர் சமணநூலாகிய சீவகசிந்தாமணியை யாவரும் செய்யுணடை முதலியவற்றால் சிறந்ததெனக் கொண்டாடுதலைக் கண்டு அதுபோல ஓர் நூல் இயற்றவேண்டுமென்று பாடியருளிய இப்புராணத்திற்கு உரைசெய்யவேண்டுமென்னும் பேராசை பிடர்பிடித்துந்துதலாற் சிறியேன் திருவண்ணாமலை யாதீனத்துச் சந்நிதானமா யெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகதேசிகரிடஞ் சென்று விளங்காத அநேகஞ் செய்யுட்களுக்குப் பொருள் அவர்கள் சொல்லக்கேட்டு அநேகமுறை யுரைசெய்யத் தொடங்கியும் கல்வி யறிவிற்சிறந்த வித்துவான்கள்நோக்கில் நகையாகுமென்றெண்ணி ஒழிந்தேன். இன்னும் எனது பேராசையாலும் தொண்டைமான் புதுக்கோட்டை இளவரசு ஸ்ரீமாந். பாலசுப்பிரமணிய ராகுநாத தொண்டைமான் மஹாராஜா அவர்கள் கேள்விக்கு ஸ்ரீ. தொண்டைமான் புதுக்கோட்டை ஹைகோர்ட்டு மாஜி நியாயாதிபதி ஸ்ரீமான். சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் தைரியப்படுத்தி உதவிபுரிந்தமையானும் இப்பொழுது இவ்வுரையெழுதி வெளிப்படுத்தத் துணிந்தேன். இவ்வுரையை யெழுதுதற்குப் பெருந்துணைசெய்தவர் சுன்னாகம் ஸ்ரீ. அ. குமாரசுவாமிப்புலவர். இதனை வாசிக்குங் கல்வியறிவுடையோர் அழுக்காறின்றி "நூலுரைபோதகாசிரியர்மூவரு முக்குணவசத்தான் முறைமறந்தறைவரே" என்னுங் கருத்துக்கொண்டு இவ்வுரையிற் பிழைகண்டால் தெரிவிப்பாராயின் யான் நன்றியறிதலுடன் அங்கீகரித்துப் பின் அச்சிடுவிப்பேனென வேண்டிக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்

பொ. அம்பிகைபாகன்.



## ஸ்ரீமாந். சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களியற்றிய உரைக்காப்பு.

திங்கட்சேய்பனிசெஞ்சடையிடந்தொறுந்திரையாற்
கங்கைகாட்டுதனுருவகிகலந்தவிறகடியும்
புங்கவன்முதற்புதல்வனைப்பிரணவப்பொருளும்
துங்கயானையானனத்தனைத்துணைக்கழறொழுவாம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# தணிகைப்புராணம்

## மூலமும் உரையும்.

### விநாயகர் காப்பு.

மும்மதத்தனென்றொருபெயர்தனக்குமொய்கூந்தற்
கொம்மைவெம்முலைக்கோற்றொடிக்கொடிச்சியையிலைவேற்
கைம்மலர்த்தனியிளவற்குங்கஃறெனுங்கானந்
தம்முந்துபுக்குற்றவனடிமலர்பணிவாம்.

**(இதன் பதப்பொருள்)** முந்து கஃறெனும் கானத்துப் புக்கு - முன்னாளிலே இருண்ட காட்டினகண் (யானைவடிவாய்ச்) சென்று,—மும்மதத்தன் என்ற ஒரு பெயர் தனக்கும் - மும்மதத்தனென்ற ஒப்பற்ற பெயரைத் தமக்கும்,—மொய் கூந்தல் - மொய்த்த கூந்தலையும்,—கொம்மை வெம் முலை - இளமைபொருந்திய விரும்பத்தக்க முலையையும்,—கோல் தொடி கொடிச்சியை - திரண்ட வளையலையுமுடைய வள்ளிநாயகியை,—இலை வேல் கைமலர்த்தனி இளவற்கும் - இலைத்தொழிலமைந்த வேற்படையைத்தரித்த திருக்கரமலரையுடைய ஒப்பற்ற முருகக்கடவுளுக்கும்,—உற்றவன் அடிமலர் பணிவாம் - சேர்த்தருளிய விநாயகக்கடவுளுடைய பாதாரவிந்தங்களை வணங்குவாம். என்றவாறு.

"எவ்வயிற்பெயரும்வெளிப்படத்தோன்றி யவ்வியனிலையல்செவ்விதென்ப" என்பதனால் யாம் என்னும் எழுவாய் தோ[illegible]ல் நின்று பணிவாம் என்னும் பயனிலைகொண்டது. அம்ம - உரையசை. எ[illegible]னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது. கோல் - திரட்சி. அதனை "த[illegible]நெகிழ்பிணிநிவந்தபாசடைத்தாமரைமுகை நிமிர்ந்தவைபோலுமுத்துக்கோல்வீர்தொடி" என்னுமநல்லந்துவனார் கலித்தொகையானுமுணர்க. கஃறெனுமென்றது இருளைக்காட்டுவதோர் குறிப்புமொழி அதனைத் தொல்காப்பியம் மொழிமரபு. "உருவினுமிசையினுமென்னுஞ் சூத்திரவுரையிற்காண்க." தனக்கு மும்மதத்தனென்ற பெயரையும் இளவற்கு வள்ளிநாயகியையும் உற்றவனென்றது யானையுருப்புக்கு எழுந்ததற்குமேலன்றி இன்மையால் மும்மதத்தனுற்றல் சாலாதென்னு மாசங்கையைநீக்கி இந்நூலாசிரியர் தாந்துணிபுரைத்தவாறு பெயரையும் கொடிச்சியையும் தனக்கும் இளையோற்கும் உற்றவனெனவே தாமெடுத்துக்கொண்ட இந்நூலையும் இடையூறின்றி இனிதுமுடிக்குமென்பதே கருத்தாகக் கொள்க. இன்னும் முந்து புக்குற்றவனென்னுஞ் சொல்லாற்றலால், எல்லாவற்றிற்கும் முதலிலுள்ள உண்மையிற் பிரணவரூபமாயிருந்து பிரபஞ்சத்தைநிலைப்படுத்துவான் என்னுமொருபொருளுந் தோன்றினமை யறிக. விநாயகக்கடவுள் மூலாதாரத்தினு முன்மண்டபத்தினு மிருத்தலை ஆகமங்களிற் காண்க. (க)

### வேறு.

ஊறறிருககுமதககலுழியுனனுமடியாருளததுககறையைமண்ணக
கூறறிருககுஙகூாநுதிவெணகோடுவெளிறறறிவிரணடுஙகுமைடபமேனி
தோறறிருககுமளபபரியசுடாநிறைபபதஃோரணகமபதெஞ்ஞானறும
வீறறிருககுமபெருமானைவிரைமலாதூயபபணிநதெழுநதெமமெலிவுதீாவாம.

(இ—ள.) ஊறறு இருககும மதககலுழி - ஊறுதலிடையறாத மதமாகிய கலநு-னீா,—உனனும அடியாா உளததுக கறையை மணண,—தமமைநினைககும அடியாருள ளத (தஞ்ஞானமாகிய)கறையைக கழுவவும,—கூறறு இருக்கும கூா நுதி வெண கோடு-கொலைததொழிலபொருநதிய கூரியநுனியையுடைய வெளளிய திருககோடாளது,—வெளிறறு அறிவு இரணடும குமைபப—(அவருளளததுப பாசஞ்ஞானம பசுஞ்ஞானமாகிய) வெறறிறறிவிரணடினையுமழிககவும,—மேனி தோறறு இருககும அளபபு அரிய சுடா நிறைபப-திருமேனியானது எவறறையும அளநதுகாடடும வேதஙகளும அளததறகரிய(பரஞ்ஞானமாகிய)சுடரை அவருளளததுநிறைககவும,—தோரண கமபதது எஞ்ஞானறும வீறறிருககும பெருமானை - தோரணகமபததில எபபொழுதும வீறறிருநதருளிய விநாயககடவுளை,—விரை மலா தூயப பணிநது எழுநது எம மெலிவு தீாவாம - மணமபொருநதிய மலரைத தூவி வணஙகி எமதுவருததததினினறுமநீஙகுவாம. எ—று

பாசஞ்ஞானமாவது நாலவகைவாககிலை வரும சொற்பிரபஞசமும நிலமமுதலநாதமீறுகிய பொருடபிரபஞசமும எனனும இவைபறறி நிகழும ஏகதேசஞ்ஞானம பசுஞ்ஞானமாவது இபபாசஞ்ஞானததைபபொருநதிய ஆனமா இவையனைததும தனகிழவியாபபியமெனறறிநது ;நீஙகித தான அவறறிறகு மேறபடுதலான அசசெருககுககொணடு நானே பிரமமென நினைபபது இவைகள பதிஞ்ஞானமபோல உளளீடினமைபறறி வெளிறறறிவெனறா. தோரணகமபம - வாயிலில நாடடபபடடதோா கமபம ஏவபபடடாபிழைததலரிதாகலில கூறறிருககுமகூாநுதிவெணகோடெனறும மதசலமானது திருமேனியிலணிநத சநதனங குஙகுமததோடு கலநது வருதலின கலுழியெனறுங்கூறினா. கறை - அழுககு பணிநதெழுநதென்பது ஒருசொல (உ)

## கடவுள் வாழ்த்து.

### சிவபெருமான.

உலகிருளுருவத்தொளிகளினிரித்தாஙகுறுபொருளெவற்றையுநதெரிததுள
விலகிருணமுழுதுமருளகொடுதமிததுவிராயொளிதனனையுநதனறு
லிலகுயிாதனையுநதெரிததறிவுறசகுமியலபினெககாலமுமபிறழா
தலகிலறபுதககூததுமையினைககாடடுமடிகளசேவடிகளைபபணிவாம.

(இ—ள) உலகிருள உருவநது ஒளிகளின இரிதது - உலகததிலுளள புறவிருளை உருவவொளிகளாகிய சோமசூரியாககினிகளானீககி,—ஆஙகு உறு பொருள எவறறையுந தெரிதது - அவவுலகிலுளள எபபொருளையும கணணுககு விடயமாகசசெயது,—விலகு உள இருள முழுதும அருளகொடு துமிதது - (இசசாஞ்ஞானககிரியைகளை) மறைககும அகவிருளாகிய ஆணவமலம முழுதையும அருளாகிய ஒளிகொணடு தடிநது,—விராய ஒளி தனனையும - (பெத்தககாலதது அறியபபடாது) கலநதும (முத்திக்கால

தந்து) விளங்கியிருக்கும் (பதிப்பொருளாகிய) தம்மையும்,—தன்னால் இலகு உயிர்த னையும் – தம்மால் விளக்க விளங்கும் (பசுவாகிய) ஆன்மாவையும்,—தெரித்து அறிவுறுக்கும் இயல்பின் – தெரிவித்து அறிவுறுத்தலாகிய தம்மியல்பினின்றும்,—எக்காலமும் பிறழாது – எந்தக்காலத்தும் மாறுபடாமல்,—இலகு இல் அற்புதக் கூத்து – எண்ணிறந்த அற்புதத்தையுடைய திருக்கூத்தை,—உமையினைக் காட்டும் – உமையம்மைக்குக் காட்டியருளும்,—அடிகள் சேர் அடிகளைப் பணிவாம் – சிவபிரானுடைய சிவந்த திருவடிகளை வணங்குவாம் எ—று.

அத்து – அல்வழிச்சாரியை. உமையினைக்காட்டும் என்பது "அறிவுடையார்தண்ணீ ரைக்காட்டென்றானே" என்பதுபோல வேற்றுமைமயக்கம். விலக்கு - விலகென விகாரமாயிற்று. அற்புதக்கூத்து – பஞ்சகிருத்திய யோகத்தைப்பண்ணும் நிஷ்களாதீதநடனம், அது ஆன்மாக்களுக்குப் புதிது புதிதாய்த் தோன்ற அருள்செய்தலின் அவ்வாறு கூறப்பட்டது. அருள்கொடு தமித்து எனவே மலத்திரோவும், விராயவொளிர்தன்னையுந்தன்னா லிலகுயிர்தன்னையுந்தெரித்தெனவே ஆராய்ச்சியும், அறிவுறுக்குமியல்பினெக்காலமும் பிறழாதெனவே அநுபவமும், கூறியவாறு. மூலமலமுங் கெடுத்தென்பதுபோதர, இருண்முழுதுமென்றும், நல்வினைநீக்கத்திற் றீவினைசென்றடைதல்போல, புறவொளிநீக்கத்திற் புறவிருள் வருமென்பதுதோன்ற இரித்தென்றும், கடலொடுகலந்த யாற்றுநீர் கடலெனப்படுதலன்றி யாறெனப்படுதலும் மீட்லும் இல்லாததுபோல, சிவத்தொடு கலந்த ஆன்மாச் சிவமெனப்படுவதல்லது திரும்பலும் பசுவெனப்படுதலும் இன்று என்பது தோன்றத் தமித்தென்றுங்கூறினார். "பொன்னிறைவைம்புலன்களெல்லாம்பொய்யெனமெய்கண்டானபொருந்திடுவன்சிவத்தினோடும்போதான்பின்னா முன்னின்றநீர்சிறைமுறியமுடுகியோடிமுந்நீர்சேர்ந்தாநீராய்ப்பின்னீங்காமுறைபோல்" என்பதனாலும் அறிக. (க)

## சிவசத்தி.

சீரணிசிருக்குமணிவடஞ்சங்குதிகிரிசூலப்படையிலைவேல்
போரணிபாசமங்குசங்கழைவிற்பூங்கணைவேறுவேறணியா
வாரணனமாயனரனிபமுகத்தனனங்கனென்றிவர்தொழிற்கெல்லாங்
காரணமாதறெளித்தருள்கொழிக்குங்கன்னியையுன்னியேத்தெடுப்பாம்.

(இ—ள்) சீர் அணி சிருக்கு மணிவடம் – சிறப்புப்பொருந்திய செபத்துடுப்பும் அக்கவடமும்,—சங்கு திகிரி – சங்கும் சக்கரமும்,—சூலப்படை இலைவேல் – சூலாயுதமும் இலைத்தொழில்பொருந்திய வேலாயுதமும்,—போர் அணி பாசம் அங்குசம் – போரை அணியாகவுடைய பாசமுந் தோட்டியும்,—கழைவில் பூங்கணை – கருப்புவில்லும் மலர்ப்பாணமும் ஆகிய இவற்றை,—வேறு வேறணியா – வேறுவேறாக அணிதலால் (முறையே)—ஆரணன் மாயன் அரன் இபமுகத்தன் அனங்கன்–நான்முகன் நாரணன் அரன் விநாயகன் மன்மதன்,—என்ற இவர் தொழிற்கு எல்லாம் – என்று சொல்லப்பட்ட இவர்கள் தொழில்களுக்கெல்லாம்,—காரணமாதல் தெளித்து – தான் காரணமாயிருத்தலைத் தெளிவித்து,—அருள் கொழிக்குங் கன்னியை உன்னி ஏத்தெடுப்பாம் – அருளைக் கொழிக்குஞ் சிவசத்தியை மனத்தானினைந்து வாக்காற்றுதிப்பாம். எ—று. (உ)

என்றவெண்ணும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது. ஏத்தெடுப்பாமென்பது ஒருசொல். சிருக்கு–மாலையென்பாருமுளர். நான்முகன் முதலிய கிருத்தியகர்த்தரு

டைய தொழிலெல்லாம் சிவசத்தியால் நடத்தலால் வெளிப்படையாய அவ்வச் சத்திரூபங்களிற் றரித்திருக்கும் இவ்வாயுதபேதங்களே சணகூடாகக் காட்டுமென்பார், இவர் தொழிற்கெல்லாங்காரணமாதற்றெளித் தருளசொழிக்குநங்கன்னியென்றார். வேறுவேறணியார் என்றதனால் ஐவருக்கும் ஐந்து சத்தியாயிருத்தல்பெற்றாம். "எத்திறனின்றுனீசனத்திறனவளுமிற்பள்" என்பதனு லிவ்வாறு கூறப்பட்டது. (௨)

## ஆபத்சகாய விநாயகக்கடவுள்.

பண்ணியமேந்துங்கரந்தனக்காக்கிப்பானிலாமருப்பமர்திருக்கை
விண்ணவர்க்காக்கியரத்னக்கலசவியன்கரந்தந்தைதாய்க்காக்கிக்
கண்ணிலாணவவெங்கரிபிணித்தடக்கிக்கரிசினேற்கிருகையுமாக்கு
மண்ணலைத்தணிகைவரைவளராபத்சகாயனையகந்தழீஇக்களிப்பாம்.

(இ-ள்) பண்ணியம் ஏந்தும் கரம் தனக்கு ஆக்கி - மோதகம் ஏந்தும் திருக்கரத்தைத் தம்பொருட்டாக்கியும்,—பால் நிலா மருப்பு அமர் திருக்கை - பாதிச் சந்திரன் போலும் கொம்புபொருந்தா திருக்கரத்தை,—விண்ணவர்க்கு ஆக்கி - தேவர்கட்காக்கியும்,—அரத்னக் கலச வியன் கரம் - இரத்தின கலசந் தரித்த பெரிய திருக்கரத்தை,—தந்தை தாயக்கு ஆக்கி - தந்தை தாயர்கட்காக்கியும்,—கண் இல் ஆணவ வெம் கரி பிணித்து அடக்கி - அறிவின்மையாகிய ஆணவமலமென்னுங்கொடியயானையைப் பிணித்து அடக்குதலினால்,- இருகையுங் கரிசினேற்கு ஆக்கும் - மற்றை இரண்டுதிருக்கரத்தையும் அஞ்ஞானியாகிய என்பொருட்டு மாக்கும்,—அண்ணலை - பெருமையையுடையவரை,—தணிகை வரை வளர் ஆபத் சகாயனை - தணிகை வரையி லெழுந்தருளிய ஆபத்சகாய விநாயகக்கடவுளை,—அகந் தழீஇக் களிப்பாம் - மனத்திற் றியானம்பண்ணுதலாற் களிப்படைவாம். எ-று.

கண்-அறிவு அறிவின்மை, அஞ்ஞானமென்னும் பொருட்டு. ஆணவக்கரிபிணித்தகரம்-பாசந் தரித்த கரம். அடக்கிய கரம்-அங்குசந் தரித்த கரமெனப் அறிக. விண்ணவருடைய பகையை மாற்றலால் மருப்பமர் திருக்கை விண்ணவர்க்காக்கியென்றும், அபிடேகஞ்செய்தலால் அரத்னக் கலச வியன்கரந் தந்தை தாயக்காக்கியென்றும், ஆணவக் கரியைப் பிணித்தலும் அதன் வலியை அடக்கலுஞ் செய்யும் பாவனையுடைமையால் அங்குச பாசந் தரித்த கரங்களை, கரிசினேற்கு இருகையுமாக்குமென்றுங் கூறினார். அடக்கவென்னு மெச்சம் அடக்கியென்று திரிந்து நின்றது. (௩)

## சுப்பிரமணியக் கடவுள்.

### வேறு.

ஓங்கொளியாய்விசும்பாதிதொறுமியலுந்தனதியல்பையுருவின்மாட்டும்
பாங்குபெறத்தெரித்ததுபோற்பலபொறியாய்ப்பரமாவிழிபயந்தஞானத் [கு
தேங்கொளியாய்வெளிப்பட்டுவெளிதோற்றாதொளவொளிப்படாதுதெளிநீர்ப்புக்
கீங்கிவிளையாட்டயர்ந்து தணிகையமர்பெருவாழ்வைநினைந்துவாழ்வாம்.

(இ-ள்.) ஓங்கு ஒளியாய - பரஞ்சோதியாய்,—விசும்பு ஆதிதொறும் இயலும் - ஆகாயம் முதலிய பூதங்கடோறும் வியாபித்துநிற்கின்ற,—தனது இயல்பை - தமது (சொயம்பிரகாச சத்திச) சுபாவத்தை,—உருவின் மாட்டும் பாங்குபெறத் தெரித்ததுபோல் - உருவத்தினிடத்தும் உரிமைபெறக் காட்டுதல்போல,—பல பொறியாய பரமா விழி பய

ந்தஞான்று — பல பொறிகளாயச் சிவபெருமானுடைய திருக்கண்கள் தோற்றுவித்தருளிய அந்நாளிலே,—தேங்கு ஒளியாய வெளி அடர்ந்து — நிறைந்த வொளியாய வானத்தில் அடர்ந்து,—வளி தொடர்ந்து — காற்றோடு தொடர்ந்து,—ஒள்ளொளி படர்ந்து — அழகிய அக்கினியோடு சென்று,—தெளிநீர்ப்புக்கு — தெளிந்த நீரினகட் புகுந்து,—நீங்கி — அவ்விடத்தினின்றும் நீங்கி,—விளையாட்டயர்ந்து தணிகையமா பெருவாழ்வை — திருவிளையாடல்செய்து தணிகைக்கண் வீற்றிருக்கும் சுப்பிரமணியக்கடவுளை,—நினைந்து வாழ்வாம் — தியானித்து வாழ்வாம். எ—று

உரிமை — முன்னின்ற உரிமை. முதலொடு சினைக்கொற்றுமையுண்மையால் விழிபயந்தஞான்றென்னப்பட்டது. பர்மாவிழிப்பயந்தஞான்றென்பது பாடமாயின், சிவபிரான் திருக்கண்ணாலீன்றருளிய வந்நாளிலென வுரைக்க. வாழ்வையுடையபொருள் வாழ்வென்றுபசரிக்கப்பட்டது. எக்காலத்தும் ஒருதன்மையராயிருத்தலின் பிறிதினியைபு நீக்கிய விசேடணங் கொடுத்துப் பெருவாழ்வென்னப்பட்டது. தெளிநீர் — கங்கையும் சரவணவாவியும். (ச)

## தெய்வயானையம்மை வள்ளியம்மை.

இறைக்கித்தசூர்முதலையிறுப்பவரனேயிளையோனானவாறறுன
முறைக்கித்தவிருசுடரேமுகத்துவிழியெனத்தெரிக்குமுறைமையேய்ப்ப
நறைக்கித்தமலர்க்கழுநீர் நளினமவன்விழியருகுநலக்கவேந்தி
நிறைக்கித்தவுளத்தொடிடம்வலமமர்ந்தமாதர்பதந்நினைத்தல்செய்வாம்.

(இ—ள்) இறைக்கித்த சூர்முதலை இறுப்ப — இறைத்தொழிலில் மேம்பட்ட சூரனாகிய முதல்வனைச் சங்கரித்தற்கு,—அரனே இளையோன் ஆனவாற்றால் — சிவபெருமானே முருகக்கடவுளாய வந்ததன்மையால்,—முறைக்கித்த இருசுடரே முகத்து விழியெனத் தெரிக்கும் முறைமை ஏய்ப்ப — முறையினால் மிக்க சூரிய சந்திரர்களாகிய இருசுடருமே இவருடைய முகத்தினகணுள்ள திருக்கண்களென்று தெரிவிக்கும் முறைமையைப் போல,—நறைக்கித்த கழுநீர்மலர் நளினமலர் — தேன்மிகுந்த செங்கழுநீர் மலரையும் வெண்டாமரை மலரையும்,—அவன் விழியருகு நலக்க ஏந்தி — அவருடைய நயனத்தருகில் நன்மை பெற ஏந்தி,—நிறைக்கித்த உளத்தொடு — (பதிவிரதாதருமமாகிய) நிறைக்கித்த உள்ளத்தோடு,—இடம் வலம் அமர்ந்த மாதர் பதம் நினைத்தல்செய்வாம் — அவருடைய இடப்பக்கத்தும் வலப்பக்கத்தும் அமர்ந்தருளிய தெய்வயானை வள்ளியம்மையென்னும் இரு மாதருடைய பாதங்களைத் தியானிப்பாம். எ—று

ஏகாரங்கள் தேற்றப்பொருளில் வந்தன. மலர் பின்னுங் கூட்டப்பட்டது. உவமையால் நளினம் வெண்டாமரையென்றும் இடமும் வலமுமென்னும் முறைமைகள் தொக்கன. சிவபிரானே முருகக்கடவுளாய வந்தது "ஈதிலாதமாபரமனே குழவியினுருவாய் ஆறுமாமுகங்கொண்டவதரித்தான்" என்பதனாலறிக. நிறை — நெஞ்சைக் கற்பின்வழி நிறுத்தல்.

## திருநந்திதேவர்.

வேறு.

கள்ளிக்கத்தளித்தமலர்த்தலைச்சேக்குங்கடவுளரண்ணமுதலவரோ
ருள்ளுகந்தழும்பமலர்ப்பதமமைத்திட்டெல்லாந்தழும்பவேதநிரத்தின
வள்ளலங்கமலத்தனிக்கீர்மமைத்தவரத்தனைக்கறைவெண்கதிர்கால
வெள்ளியங்கைலைகாவல்பூண்டருளுமவீரனைவாக்கழலபணிவாம்.

(இ-ள்.) கள் அகம் தளித்த மலர்த்தலைச் சேக்கும் கடவுள் நாரணன் முதல - தேன் ஊறி உண்ணின்று துளித்தலையுடைய தாமரை மலரினகட்டடங்கும் நான்முகக்கடவுள் நாரணக்கடவுள் முதலிய,—வானோர் உள்ளகம் தழும்ப - தேவர்களுடைய உள்ளங்கள் தழும்பேற,—மலர்ப்பதம் அமைத்திட்டு - மலர்போலுந் திருவடிகளையமையச்செய்து,—உடலெலாம் தழும்ப - அவர்கள் உடலம் முழுதுந் தழும்பேற,—திண் - வலிய,—வள்ளல் அங்கமலம் தனிக்கர வேத்திரம் அமைத்த வரதனை - வள்ளற்றன்மைபொருந்திய அழகிய தாமரை மலரை நிகர்த்த ஒப்பற்ற திருக்கரத்திற்றாங்கிய பிரம்பை யமையச்செய்த மேலானவரை,—சுற்றை வெண்கதிர்கால் - கூட்டமான வெள்ளொளி வீசாநின்ற,—வெள்ளி அம் கயிலை காவல் பூண்டருளும் வீரனை - வெள்ளியங்கைலாயகிரியைக் காக்குந் தொழில்பூண்டருளும் வீரராகிய திருநந்திதேவரை,—வார்கழல் பணிவாம் - நெடிய திருவடிகளினைக்கண் வணங்குவாம். எ-று.

சாம்பவிதீக்கையாகிய திருவடி தீக்கைசெய்தமையால், உள்ளகந்தழும்ப மலர்ப்பத மமைத்திட்டென்றும், பிரம்பாலடித்து நிறைபெறச்செய்தலால், உடலெலாந் தழும்பக்கர வேத்திரமமைத்த வரதனை என்றுங் கூறினார். கரவேத்திரமமைத்தல்—பரிசதீக்கையெனினுமாம். முதலையுற்ற சினையைக் கண்ணுறுமென்பதோத்தாகலின் கழலினைக்கண் என்றுரைக்கப்பட்டது. வேண்டுவார் வேண்டியதீதலினாலே வள்ளலங்கமலத் தனிக்கர மென்றார். சேர்தல்—இருத்தல். இது மேல்வருவனவற்றிற்குங் கொள்க.

நவவீரர்.

வேறு.

ஈரவான்மதிமிலைச்சியபொலஞ்சடையிறைவனாருள்கூரக்
காரவாவியகுழலுமைநூபுரக்கதிர்மணியிடைத்தோற்று
நாரவாவியினறுமலர்க்காவிநேர்நயனமாதர்களீன்ற
வீரவாகுவைமுதலியவீரர்தம்விரைமலர்ப்பதம்போற்றி.

(இ-ள்) ஈரம் வால் மதி மிலைச்சிய பொலம் சடை - குளிர்ச்சிபொருந்திய வெளிய ஞானசந்திரகலையைத் தரித்த பொன்போன்ற சடையையுடைய,—இறைவனார் அருள் கூர - பரமசிவனுடைய திருவருள் மிகுதலினால்,—கார் அவாவிய குழல் உமை - மேகமும் அவாவத்தக்க கூந்தலையுடைய உமையம்மையினது,—நூபுரம் கதிர் மணி இடை தோற்றும் - சிலம்பிற்பொருந்திய ஒளியையுடைய நவமணிகளினின்றுந் தோற்றிய,—நாரம் வாவியின் நறும் காவிமலர் நேர் - நீரையுடைய வாவிக்கட்பூத்த நறுமையாகிய குவளைமலரைநிகர்த்த,—நயனம் மாதர்கள் ஈன்ற - கண்களையுடைய நவசத்திகளும் ஈன்றருளிய,—வீரவாகுவை முதலிய - வீரவாகுவை முதலாகவுடைய,—வீரர் விரை மலர்ப்பதம் போற்றி - ஒன்பதுவீரர்களுடைய வாசனைபொருந்திய மலரையொத்த திருவடிகளும் நம்மாற் றுதிக்கப்படுவன. எ-று.

தம் - சாரியை. பொன்சடை - பொலஞ்சடையென ஈறுகெட்டு லகர உயிர்மெய்யும் மகரவொற்றும் பெற்றது. "பொன்னென்கிளவி யீறுகெட முறையின் முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ் செய்யுண் மருங்கிற்றொடரியலான" என்பதோத்தாகலின். இறைவனார் உயர்த்தற்கண் ஆர்விகுதிபெற்றது. ஆருளெனப் பிரித்துப் பொருள்கூறுவாருமுளர். தெளிவுபற்றிக் காரவாவியவென இறந்தகாலத்தாற் கூறினார். முன்னோர்

## கடவுள்வாழ்த்து.

ஞான்று சிவபிரானுடைய நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றும் தீப்பொறிகட்கஞ்சியோடிய உமையம்மையினுடைய சிலம்பினின்று முதிர்ந்த நவமணிகளிலும் சிவாஞ்ஞையினால் அவ்வம்மையினுடைய சாயைதோன்ற நவசத்திகளுந் தோன்றிச் சிவபிரானிடத் திச்சையுற்றுக் கருப்பமடைந்து வீரவாகுமுதலிய வீரர்களை யீன்றாரென்பது புராணக்கதை.

### சமயகுரவர்.

### வேறு.

முன்னாளுந்துளைக்கரத்தோன்முருகவேள்பிடித்தெழுந்துமொய்ம்பிற்றாவப்
பின்னாளுங்கதிர்ச்சடிலப்பிஞ்ஞகனாரடித்தொண்டின்பெருக்கவீறு
பொன்னாலும்பெண்ணாலுமறிவுறுத்திவ்வுலகினிடைப்பொன்றியாண்ட
வந்நால்வர்பதகமலமகந்தழீஇப்புகழ்ந்திறைஞ்சியரந்தைதீர்வாம்.

(இ—ள்) முன் நாளும் துளைக்கரத்தோன் முருகவேள் – முற்பக்கத்திற் றூங்காநின்ற துதிக்கையையுடைய விநாயகக்கடவுளும் முருகக்கடவுளும்,—பிடித்து எழுந்து மொய்ம்பில் தாவ – பிடித்தெழுந்து புயங்களிற் றாவும்படி,—பின் நாளும் கதிர்ச் சடிலப் பிஞ்ஞகனார் – பின்னே தூங்கும் ஒளிபொருந்திய சடையையுடைய சிவபிரானது,—அடித்தொண்டின் பெருக்க வீறு – திருவடித்தொண்டினது பெருக்கப் பெருமையை,—பொன்னாலும் பெண்ணாலும் அறிவுறுத்து – பொன்னினாலும் பெண்ணினாலும் அறிவுறுத்தி,—இவ்வுலகில் இடர் பொன்றி ஆண்ட – இவ்வுலகத்துள்ளாருடைய இடரை யழித்தாண்டருளிய,—அந் நால்வர் பதகமலம் – அந்நாயன்மார் நால்வருடைய பாதத்தாமரைகளையும்,—அகம் தழீஇ புகழ்ந்து இறைஞ்சி – மனத்திற் றியானித்துத் துதித்து வணங்கி,—அரந்தை தீர்வாம் – துயரத்தினின்று நீங்குவாம். எ—று.

பொன்றுவித்தென்பதின் பிறவினைப்பொருளையுணர்த்தும் விகுதி தொக்குப் பொன்றியென நின்றது. தாவப்பின்னாளுமென்பதற்கு, தாவுதலின்றிப் பின்னே யாடுமெனவுரைத்தலுமொன்று. தமது திருத்தொண்டின் பெருமையாலாகிய வற்புதத்தைக் கண்டோர் சிவனே முதற்கடவுளெனக்கொண்டு வழிபட்டுய்வதுறுதியாதலின், இவ்வுலகினிடைப்பொன்றியாண்டவந்நால்வரென்றார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், என்புபெண்ணாக்குதல், பொற்கிழிபெறல், என்னுமிவற்றானும், திருநாவுக்கரசுநாயனார், படிக்காசுபெறல், உழைவாரப்பணியிலகப்பட்ட பொன்னைத் திருக்குளத்தெறிதல், தம்மை மயக்கும்படி இந்திரனேவப்பட்ட தேவதாசிகளுடைய லீலாவிநோதங்கட் குள்ளங்கொடாமையென்னுமிவற்றானும், மாணிக்கவாசகசுவாமிகள், ஊமைப்பெண்ணைப் பேசுவித்தல், பாண்டியன் குதிரைகொள்ளக் கொடுத்த பொன்னை விருப்பின்றி யிறைவன்றிருவடிக்கீழ் விடுதல், என்னுமிவற்றானும், சுந்தரமூர்த்திநாயனார், திருமுதுகுன்றரிடம் பெற்ற பொன்னை மணிமுத்தாநதியில்விட்டுத் திருவாரூர்க்குளத்திலெடுத்தல், பரவையாரிடத் திறைவனைத் தூதுவிடுதல், வனப்பகை சிங்கடியென்னும் பெண்களில் விருப்பின்றி யவர்க்கப்பனாதல், என்னுமிவற்றானும் தெரிவித்தமையால் திருத்தொண்டின் பெருக்கவீறு பொன்னாலும் பெண்ணாலுமறிவுறுத் திவ்வுலகினிடைப்பொன்றியாண்டவந்நால்வரென்றார். அகரம்—பண்டறிசுட்டு.

## கடவுள்வாழ்த்து.

## ஆசாரிய பரம்பரை.

வேறு

அருள்வளர்நந்திமேதகைவிளக்கியருள்சிவஞானபோதத்தைத்
தெருள்வளர்தமிழ்ச்செய்தளித்தமெய்கண்டதேவனற்சந்ததிவிளங்க
வருமொருதுறைசைத்திருநகர்நமச்சிவாயதேசிகனெனும்பிரந்தக்
குருபரன்வழிவந்தருணனிகொழிக்குங்குரவர்கள்பலரையுந்துதிப்பாம்.

(இ—ள்.) அருள் வளர் நந்தி மேதகை — கருணை வளர்கின்ற நந்திதேவரென்னும் மேன்மையுடையோர்,—விளக்கி அருள் சிவஞானபோதத்தை — (தம்மாணாக்கராகிய சனற்குமாரமுனிவருக்கு விளங்க) விளக்கியருளிய சிவஞானபோதநூலை,—தெருள் வளர் தமிழ்ச் செய்தளித்த — மெய்யுணர்வு வளர்தற் கேதுவாய தமிழில் மொழிபெயர்த்துத் தந்தருளிய,—மெய்கண்டதேவன் நல் சந்ததி விளங்க — மெய்கண்டதேவருடைய நல்ல பரம்பரை விளங்கும்படி,—ஒரு துறைசைத் திருநகர் வரும் — ஒப்பற்ற துறைசைத் திருநகரில் (ஆசாரியராக) எழுந்தருளிய,—நமச்சிவாயதேசிகனெனும் — நமச்சிவாய தேசிகரையும்,—இந்தக் குருபரன் வழிவந்து — இந்த நமச்சிவாய தேசிகர்க்குப் பின் அந்தச் சந்தானத்தில் வந்து,—அருள் நனி கொழிக்கும் குரவர்கள் பலரையுந் துதிப்பாம் — திருவருளை மிகவுஞ் செய்தருளும் குரவர் பலரையும் துதிசெய்வாம். எ—று.

சிவபெருமானிடத்து உபதேசம்பெற்ற நந்திதேவரென்பார் அருள்வளர்நந்திமேதகையெனவும், சிவபிரான்முதல் பரஞ்சோதிமுனிவரீறாகிய நால்வரும் வடமொழியானுணர்த்த உணர்ந்தனரென்பார் நந்தி விளக்கியருள் சிவஞானபோதமெனவும், மெய்கண்டதேவரே யதைத் தமிழில் மொழிபெயர்த்தனரென்பார் தெருள்வளர்தமிழ்ச்செய்தளித்தமெய்கண்டதேவனெனவுங் கூறினார். சந்தானபரம்பரை "தேவர்பிரான்வளர்கயிலைக்காவல்பூண்டதிருநந்திவாகனத்தோர்செல்வர்பாரிற், பாவியசத்தியஞானதரிசனிகளடிசேர்பரஞ்சோதிமாமுனிவர்பயிலார்வெண்ணெய், மேவியசீர்மெய்கண்டதிறலார்மாறா விரவுபுகழருணந்திவிறலார்செல்வத், தாவிலருண்மறைஞானசம்பந்தரிவர்சந்தானத்தே மையாளுந்தன்மையோரே" என்பது முதலியவற்றானறிக. மேதகையென்பதில் வினைமுதற்பொருளுணர்த்து மிகரவிகுதிபுணர்ந்து கெட்டது. சிவஞானபோதம் என்பது ஆகுபெயராய் அதனையுணர்த்துந் நூலுக்காயிற்று. ஐயுருபு நிற்றற்குரியவிடத்து ஒடுவுருபு நின்றது. நமச்சிவாயதேசிகனெனும் குரவர்கள் பலரையுமெனினுமமையும். மேதகை- அன்மொழித்தொகையென்பாருமுளர். (கக)

தீர்த்தமாடன் முதலியவற்றை அடியார்க்குங்கொள்க. தன் என்பதை அடியார்க்கு அடையாக்குக. ஆனந்தக்கூத்தரென் உடம்பொடுபுணர்த்தோதினார் அவர்க்கஃதுண் மையாகலின். கரிசைச்செய்வதனைக் கரிசென்றார், கரிசு - குற்றம். ஆனந்தக்கூத்தற் குரிய பலவடிவமாவன. "மதியணியுஞ்சடையாருமைகேள்வாமழுவிடையார்சதியினட்டம் புரிவார்கலியாணர்தலையிலுண்பார், சதிமதற்செற்றவர்காலர்க்குங்காலரெயிலெரித்தார்து தியிற்சலந்தரனுரைவதைத்தசுதந்தரரே." 'அந்தியுரித்தவர்வேள்வியழித்தவர்மாலத்த ரூர், சத்தியொர்பாகர்கிராதர்கங்காளர்சண்டேசருக்குச், சித்தியளித்தவராலமுண்ட வர்செம்பொற்றியான், பத்தியினுக்கொருசக்கரமீயந்தபரம்பரரே' 'சரிமுகவற்கருள்செய் வார்சோமாஸ்கந்தர்காலொன்றுள்ளார், உரியசுகாதனார்நாதோபதேசரிலிங்கத்துள்ளார் இருபதினோடைந்தவிக்கிரகங்களெனனுமிவர்தாந், தெரிவுறச்சோணடேமைதர்சாமாளவந் தசெயலிதுவே' என்பதனாலுணர்க. பலதீர்த்தம் பஃறீர்த்தம் என லகரம் ஆய்தமாய்த் திரிந்தது. "தகரம்வருமவழியாய்தநிலையலும் புகரின்றெனமனார்புலமையோரே" என் பதோர்த்தாகலின் இது சிலேடையணி. (௫௦)

, கருங்குழல்கானிற்றோற்றிக்கதிர்முலைமலையிற்றோற்றி
யிருங்கைபூம்பணையிற்றோற்றியெரிமணிக்கலாபவல்குல்
பெருங்கடற்றோற்றிவேதவொழுக்கெனுங்கணவற்பின்னி
யொருங்குநாற்பயனுமக்களுயிர்த்தளிப்பஃதந்நாடு.

(இ-ள்.) அந்நாடு - அத்தொண்டைநாடானது,—கானில் கரும் குழல் தோற்றி- காட்டினுற கரிய கூந்தலைக் காட்டியும்,—மலையில் கதிர்முலை தோற்றி - மலைகளாற் கதி ர்த்த முலைகளைக்காட்டியும்,—பூம் பணையில் இரும் கை தோற்றி - பொலிவுபொருந்திய மூங்கில்களாற் பெரிய கரங்களைக் காட்டியும்,—பெரும் கடல் எரி மணிக் கலாப அல்குல் தோற்றி- பெரிய கடலால் ஒளிபொருந்திய மணிகள் அழுத்திய கலாபமணிந்த அல்குலைக் காட்டியும்,—வேத ஒழுக்கு எனும் கணவற் பின்னி - வேத ஒழுக்கமென்னும் நாயகனைத் தழுவி,—நாற்பயனும் மக்கள் - நாற்பொருளாகிய புதல்வரை,—ஒருங்கு உயிர்த்து அளிப்பது - ஒருங்குபெற்று வளர்ப்பது. எ-று.

அறமுதலியனவெல்லாம் அந்நாட்டினின்றுந் தோன்றுதலால் நாற்பயன் ஆம்மக் களுயிர்த்தளிப்பதென்றார். "முன்னுயிர்வருமிடத்தாய்தப்புள்ளிமன்னல்வேண்டுமல்வழி யான" என்பதனால் ஆய்தம் விரிந்தது. இதனால் நால்வகைநிலங்களுமாண்டுள்ளனவெ னவறிவித்தவாறு. கலாபம் - பதினாறுகோவைமணி. கதிர்முலை - இறுமாந்தமுலை வே தஒழுக்கு - விதித்துச்செய்வதன்றி இயல்பாயுள்ளனவென்பார் பின்னியென்றார் (௫௧)

விண்ணவரவுணர்சித்தர்விஞ்சையர்கருடர்நாகர்
மண்ணவரெவருந்தோயந்துவரம்பெறுமேன்மைசான்ற
புண்ணியந்திகழ்பல்பொங்கொளிமணிக்கூபபாலி
யண்ணல்வார்நதியினோடுமணித்தப்பொருள்கூர்நாடு.

(இ-ள்.) பொருள் கூர் அந்நாடு - பலபொருளு மிகுந்துள்ள அத்தொண்டை நாடு,—விண்ணவர் அவுணர் சித்தர் விஞ்சையர் கருடர் நாகர் மண்ணவர் எவரும் - தே வர் அவுணர் சித்தர் வித்தியாதரர் கருடர் நாகர் மானுடரென்னுமிவரும்,—தோய

ந்து — வணங்குசெய்து,—வரம்பெறும் மேன்மைசான்ற — வரம்பெறத்தக்க மேன்மை பொருந்திய,—புண்ணிய நதிகள் பல்ல — புண்ணியவடிவாயுள்ள நதிகள் பலவற்றை யும்,—பொங்கு ஒளி மணிநீர் பாலி அணைல வார நதியினோடும் — மிக்க ஒளியையு டைய மணிகள்பொருந்திய நீரையுடைய பெருமைபொருந்திய நெடிய நதியோடும்,— அணிந்தது — அணிந்திருந்தது. எ—று.

பலவற்றையும் பாலியினோடு அணிந்ததெனக் கூட்டுக. பாலியை வேறுபிரித்தார் காமதேனுவின்பால் நதியாயப் பெருகிய விசேடம்பற்றி. பல - பல்லவென் விகாரமாயி ற்று. தெய்வவடிவுள்ளதென்பதறிவித்தற்கு வரம்பெறுமேன்மைசான்றபுண்ணியநதி களென்றார். (கஉ)

வேறு

கடவுள்வெண்கரிவிசும்பொரீஇப்புரந்தரன்காவல்திசைநோக்கிப்
படாவதொத்துவெண்ணிறமுகிற்குழாமணிபடுகட்டுப்பரப்பணமிந்த
தொடலைவெண்டிரைப்பெரும்புனல்முகந்ததுதொலைபோலொருசாப
மடரவல்விரைந்தெழுந்தெனவுடல்சுறந்தந்தரத்தெழுந்தனதே,

(இ—ள்.) வெள் நிற முகில் குழாம் — வெண்ணிறமுள்ள முகிற்குழாமானது,— கடவுள் வெண்கரி விசும்பு ஒரீஇ — தெய்வத்தன்மைபொருந்திய அயிராவதமானது தா னுறைந்த சுவர்க்கத்தைத் நீங்கி —புரந்தரன் காவல் திசை நோக்கிப் படாவது ஒத்து இந்திரன் காவல்கொள்ளும் கீழ்த்திசையைநோக்கிச் செல்லுதலையொத்து,—மணி படு கட்டுப் பரப்பு அணவி — மணிகளுண்டாகும் கடற்பரப்பை அடுத்து,—தொடலை வெள் திரைப் பெரும்புனல் முகந்து — மாலைபோன்ற வெள்ளிய அலைகளையுடைய பெரிய கட னீரைக்குடித்து,—அது தொலைபோல ஒரு சாபம் அடர — அவ்வியானை முன்போல ஒருசாபமானது தன்னைநெருங்குதலால்,—வல் விரைந்து எழுந்தது என — மிகவிரைந் தெழுந்தாற்போல,—உடல் கறுத்து அந்தரத்து எழுந்தன — வடிவு கறுத்து ஆகாய த்தில் எழுந்தது. எ—று.

எழுந்தாலென்னும் வினையெச்சவீறு தொக்கது அகரம் பண்டறிசுட்டு. அம்-சாரி யை. அயிராவதயானை துருவாசமுனிவரால் கொடுக்கப்பட்ட தெய்வமலரை இந்திரன் பிரீதியின்றித் தன்மேலிட்டு, தான் அதனைக் காற்கீழிட்டு மிதித்தமையால் அம்முனிவர் காட்டியானையாகக்கடவதென்று சபித்தாரென்பது புராணக்கதை யாதலால் அது தொ லைபோலொருசாபம் அடர உடல்கறுத்தெழுந்தாற்போ லெழுந்ததென்றார். இது விரிவு வமையணியும் பதப்பொருட்காட்சியணியுமாம். (கங)

சேத்தடைத்திரள்கிழித்தகம்பருவரைச்செழுங்கிரிதனைமன்றுள்
கூத்தியற்றருட்பரம்பரன்மதலையைக்குறித்துநோன்புழந்தேத்த
கீத்திடக்கரியடுத்தெனநந்திதனெடுமலைமுதலாகத்
தத்தடம்போலநுகுவட்டியாசிலம்பெலாந்தொடர்ந்துசென்றிறுத்தன்றே,

(இ—ள்.) கரி — அவ்வயிராவதயானை,—மன்றுள் கூத்தியற்று அருள் பரம்பரன் மதலையைக் குறித்து — கனகசபையின்கண்ணே யருட்கூத்தியற்றும் சுத்த மாயாதீதரா கிய சிவகுமாரரானவறுமுகக்கடவுளைக் குறித்து,—நோன்பு உழந்து — தவமுழந்து,—

பரம் நீத்திட — (தன்னுடைய சாபத்தால்வந்த) குற்றத்தை நீங்கும்படி,—தேத்தடைத்த திரள் கிழிந்து அசும்பு அரு — தேன்கூட்டுத்திரள் கிழிதலினால் சிறுதுளிகளொழுக,—வரைச் செழும் கிரிதனை — பக்கமலைகளையுடைய செழிய தணிகைவரையை,—அடுத்து என — அடுத்ததுபோல,—நந்திதன் நெடுமலை முதலாக — நந்தியெனும்பெயரையுடைய நெடிய மலைமுதலாக,—அந் தடம் பொலம் குவட்டு உயர் சிலம்பு எலாம் — சுத்தமான விசாலித்த அழகிய குவட்டையுடைய உயர்ந்த மலைகளையெல்லாம்,—தொடர்ந்து சென்று இறுத்தனற் — தொடர்ந்துபோய்ப் படிந்தது. எ-று.

ஏ — அசை. "ஒற்றுமிகுத்தகரமோடுநிற்றலுமுரித்தே" யென்பதனால் தேன் அடை தேத்தடையென்றாயிற்று. கிழியவென்பது கிழிந்தெனத்திரிந்தது. தன் சாரியை. இது உவமையணி. (௬௪)

செம்மலார்க்கிபஞ்சாத்தமேற்குயாத்தவாசிகையெனச்சிலைவாங்கி
விம்முவாண்மணித்தீபவாராத்தனைவிளைத்தெனத்தடித்தீன்று
சும்மையேத்தெடுத்தெனமுழக்கெழீஇவிழிசொரிந்தெனப்பொழிந்தெங்கு
மம்மரேதநீத்தெழுந்தெனவெண்ணிறவயக்கமாண்டதுமாதோ.

(இ-ள்.) இபம் செம்மலார்க்குச் சாத்த மேற்கு யாத்த வாசிகையென — அவ்வியானை குமாரக்கடவுளுக்குச் சாத்தற்பொருட்டு மேலே உயர்த்திய மாலைபோல,—சிலை வாங்கி — வில்லை வளைத்து,—விம்மு வாள் மணித்தீப ஆராத்தனை விளைத்து என — நெருங்கிய வொளியையுடைய இரத்தினதீபவாராத்தனை செய்தாற்போல,—தடித்து ஈன்று சும்மை ஏத்தெடுத்தென முழக்கு எழீஇ — மின்னலையீன்று ஆரவாரத்தோடு துதிகளையெடுத்தாற்போல முழக்கத்தையெழுப்பி,—விழி சொரிந்து என எங்கும் பொழிந்து — கண்ணினாலானந்தபாஷ்பம் சொரிந்ததுபோல வெங்கணும் மழைபொழிந்து,—மம்மர் ஏதம் நீத்து எழுந்தென — மயக்குற்றது மச்சாபக்குற்றத்தை நீக்கி(முன் வடிவுபெற்று) எழுந்தது போல,—வெள் நிற வயக்கம் மாண்டது — வெண்ணிறமாகிய விளக்கத்தினால் மாட்சிமையடைந்தது. எ-று.

விளைத்து எடுத்து சொரிந்து எழுந்து என்பனவற்றில் ஆல்விகுதி தொக்குநின்றன. இதுவும் மேலையணி. (௬௫)

உருகுவெஞ்சினவெம்மைதானுடற்றுழியுடைகுளிரொளித்தாங்குப்
பெருகுதண்குளிர்க்குடைந்திதுபொழுதுபோர்பெட்டல்யாவருங்கண்ணுக்
குருகுமுன்கையார்குங்குமமுலைகளிற்கொம்மெனக்கரந்தன்றாற்
றிருகுதழும்பைச்சார்தனங்கிடைக்குமேற்சிவணுறுத்தவாயாரே.

(இ-ள்.) உருகு வெம் சின வெம்மை — உருகத்தக்க வெய்ய சினத்தையுடைய வெப்பமானது,—தானுடற்றுழி — தான் போர்செய்தபொழுது,—உடை குளிர் ஒளித்தாங்கு — (முன் தனக்குத்) தோற்ற குளிரானது ஒளித்ததுபோல,—இது பொழுது — இப்பொழுது,—பெருகு தண் குளிர்க்கு உடைந்து — அதிகரிக்கின்ற மிக்க குளிர்ச்சிக்குப் போரிலே தோற்று,—பெட்டல் யாவரும் கண்ணு — தான் விரும்பியுறைதலை யாவரும் கருதாதவாறு,—குருகு முன்கையார் குங்கும முலைகளில் — வளையலணிந்த முன்கையை

யுடைய மங்கையரது குங்குமத்தையப்பிய மூலைகளிலே,—கொம்மென ஏரநதன்று — விரைவில் ஒளித்தது,—இருகு தம் பகைசார் தனம் இடைக்குமேல் — மாறுபட்ட தமபகைசார்ந்த தனம் தமக்குத் இடைக்குமாயின்,—இவணுறுதவர் யார் — பொருநதாதவாயாவருளா (ஒருவருமில்லை) எ—று.

ஒருவருமிலலையென்பது குறிப்பெச்சம். ஆல் - அசை. ஒளித்தாலென்பதின் ஆல் விகுதி தொக்கது. வெம்மைதானுடற்றுழிக் குளிரொளித்ததுபோல இப்பொழுது தானுமொழித்ததெனக. மூலைகள் சீதளகாலதது வெம்மையும் வெம்மைககாலததுச சீதளமும் தருமெனபது “வாவியுறைநீரும்வடநிழலுமபாவகமும், ஏவேனயகணணரிள மூலையும-ஒவியமே, மென்சீதகாலததுவெமமைதருமவெமமைதனி, லினபாருஞசீதளமாமே.” எனபதனாலறிக. தனம மூலைககும பொருளுககும பொதுவாயினறு வெமமைககுங கலநதோரககு மூரிததாயதிறறலால் இது வேற்றுப்பொருளவைபபிற சிலேடையின முடிததலெனுமலஙகாரம. உடைகது இதுபொழுதுபோபெடடல் யாவருமுணணுவென்பதறகு,தோறறு இபபொழுது போரைவிருமபில யாதுபயன வருமென்று நினைதது என றுரைபபாருமுளா. இபபொருடகு என்று எனனு மொருசொறபெயது உடைரததல சிறபபிலதெனவுணாக. (௪௯)

உணடபாறசுவைநினைாதொருமுனிதவமுழநதுபாற்கடலபெறற
பணடைநீாமைதோநதமரரானபயததினமுனபடிநதாநதியஙகுன்று
மணடுமாதவமபுரிநததுவரததழீஇவழிதரமேறபெயது
கொணடதாமெனவாவயினவிழுநதநீாகுலாயவழிநததையன்றே.

(இ—ள்.) முன அமரர் ஆனபயத்தின் படிநத நதியங்குன்று — முனனே காமதேனுவினுடைய பாலினாலே தோயநத நந்திமலையானது,—ஒரு முனி — ஒபபறற உபமனியமுனிவா,—உணட பால சுவை நினைநது — தான முனனுணட பாலினசுவையை நினைதது,—மாதவம உழநது — பெருந்தவஞ்செயது,—பாற்கடல பெற்ற பணடைநீாமை தோர்ந்து — திருப்பாறகடலைப பெறறுககொண்ட பழைய நீாமையையுணாநது,—மணடு மாதவம் புரிநது — நெருஙகிய மகாதவஞ்செய்து,—அது வர — பாறகடலவர,—தழீஇ வழிதர மேல பெயதுகொண்டதாமென — அதனைத தழுவி வழியுமபடி தன்மேலே பெயதுகொணடதுபோல,—ஆவயின் விழுந்த நீா குலாய வழிநதது — அநநதிவரையின்மேல விழுநதநீர் எங்கும்பரநது வழிநதது. எ—று.

ஆவயினெனச் சுட்டு நீண்டது. ஐ சாரியை. உபமனியமுனிவர் மாமறுகிய வசிட்டமுனிவரிடத்திருந்து வளாந்து பின் மூயார்வீடசெகுவநதபொழுது தாயதநதையாகள் பலவகை மதுரமாகிய உணவுகளைக் கொடுககவும அதனை யுண்ணுமல முன்னுண்ட பாலினைத் தழுதல்கண்ட தந்தையாராகிய வியாக்கிரபாதமுனிவா் அக்குழநதையைக் கனகசபையின் திருவாயிற்படியிற் கிடத்திச் சபாநாயகரை நினைந்து வேண்டுதல்செய்ய அவர் பாற்கடலையழைத்து உண்ணக் கொடுத்தாரென்பதுபுராணகதை. இது தற்குறிப்பேற்றமென்னுமலங்காரம். (௫௦)

## வேறு.

காந்தளம்போதுவேய்ந்துகளிமயில்கடாவிப்பல்பூ
வேய்ந்தமென்குழற்கொம்பன்னார்வெறியயர்களத்துச்சார்ந்து
வாய்ந்தவிங்குலிகச்சேற்றின்வயங்குதன்னுருவந்தோற்றிப்
போந்துலாயச்சிலம்பின்செவ்வேள்போன்றதுபாலிநீத்தம்.

(இ-ள்.) பாலி நீத்தம் - அப்பாலியாறானது,—காந்தள் அம் போது வேய்ந்து - காந்தளாகிய அழகிய மலர்ந்த தன்மீது தாங்குதலாலும்,—களி மயில்கள் தாவி - களிப்புப்பொருந்திய மயில்களை வாருதலாலும்,—பல் பூ வேய்ந்த மென் குழல் கொம்பு அன்னார் - பல மலர்களைச்சூடிய மெல்லிய கூந்தலையுடைய பூங்கொம்புபோன்ற பெண்கள்,—வெறி அயர் களத்து சார்ந்து - வெறியாட்டைச்செய்யுமிடங்களிற் சார்தலாலும்,—வாய்ந்த இங்குலிகச் சேற்றின் - தன்னிடத்துக்கலந்த சாதிலிங்கச்சேற்றினால்;—வயங்கு தன் உருவம் தோற்றி - விளங்கிய தன்னுருவஞ் சிவத்தலைக் காட்டுதலாலும்,—சிலம்பில் போந்து உலாய் - குறிஞ்சிநிலத்திற் சென்று பரத்தலாலும்,—செவ்வேள் போன்றது - குமாரக்கடவுளையொத்திருந்தது. எ-று.

வேய்ந்துமுதலிய செய்தெனெச்சங்கள் மழைபெய்து குளம்நிறைந்ததென்றாற் போல நின்றன. எண்ணும்மைகள் தொக்கன. இது மேல்வருவனவற்றிற்கு மொக்கும். முருகக்கடவுட்கு இங்குலிகச்சேறுபோல் விளங்குந்திருமேனியுடையராய தோற்றியென வுரைக்க. மயில்கடாவி எனினுமமையும். இதுமுதல் சுலையொவ்வொன்றும் என்பதிறுதியாகச் சிலேடையணி. (கஅ)

ஆழ்ந்தநீர்ச்சுனைபுக்காடியவிர்பளிக்கறையின்வைகி
வீழ்ந்தவராகந்தோய்ந்துவேங்கைதண்குறிஞ்சிசுற்றித்
தாழ்ந்தபைங்குரலேனற்றவிர்ந்துபுள்விலங்குமோப்பி
வாழ்ந்திடுங்கொடிச்சிமார்தமொழுக்கமுமரீஇயதாங்கண்.

(இ-ள்.) ஆங்கண் - அக்குறிஞ்சிநிலத்தில்,—ஆழ்ந்த நீர்ச்சுனை புக்கு ஆடி - ஆழ்ந்த நீர்ச்சுனைகளிற் புகுந்தாடுதலாலும்,—அவிர்பளிக்கு அறையின் வைகி - விளங்குகின்ற பளிங்கறைகளிற் றங்குதலாலும்,—வீழ்ந்தவர் ஆகம் தோய்ந்து - தன்னிடத்து வீழ்ந்தவருடைய சரீரத்தைத் தோய்தலினாலும்,—வேங்கை தண் குறிஞ்சி சுற்றி - வேங்கைமரங்களையும் குளிர்ந்த குறிஞ்சிச்செடிகளையும் சுற்றலாலும்,—தாழ்ந்த பைங்குரல் ஏனல் தவிர்ந்து - வளைந்த பசிய கதிர்களையுடைய தினைப்புனங்களிற் றங்குதலாலும்,—புள் விலங்கும் ஓப்பி - பறவைகளையும் விலங்குகளையுந் துரத்தலினாலும்,—வாழ்ந்திடுங் கொடிச்சிமார்தம் ஒழுக்கமும் மரீஇயது - வாழ்ந்திருக்கும் வேட்பெண்களதொழுக்கத்தையும்பொருந்தியது. எ-று.

நீர்ச்சுனையிலாடிப் பளிங்கறையிலிருந்து தம்மால் விரும்பப்பட்டவரைச் சேர்ந்து வேங்கைமலர் குறிஞ்சிமலர்களைப் பறித்தணிந்து தினைப்புனத்திலிருந்து புள்விலங்குகளைத் துரத்தி வாழ்ந்திடுங் கொடிச்சிமாரென்க. காந்தருவமணம் குறிஞ்சிநிலத்திற்கே யுரித்தாதலின் வீழ்ந்தவராகந்தோய்ந்தென்றார். (கக)

கோழரையகிலுஞ்சாந்துங்குங்குமவனமுஞ்சாடி
வாழியகுறிச்சிபுக்குவளர்தினைவாரிவித்தி
வீழுமென்கிழங்குசெண்டிவிரைத்ததேனழித்துமாந்தி
யூழுறுசிலைக்கைவேடரொழுக்கமுமாறியதாங்கண்.

(இ—ள்.) ஆங்கண் - அக்குறிஞ்சிநிலத்தில்,—கோழ் அரை அகிலும் சாந்தும் குங்குமவனமும் சாடி - வழுவழுப்பாகிய அரையையுடைய அகிலமரங்களையும் சந்தனமரங்களையும் குங்குமவனங்களையும் அழித்தலாலும்,—வாழிய குறிச்சி புக்கு - வாழ்கின்ற சிற்றூரிற் புகுந்து,—வளர் தினை வாரிவித்தி - வளர்ங்களையும் தினையையும் வாரி வீசுதலினாலும்,—வீழும் மென் கிழங்கு செண்டி - (நிலத்தினுள்ளே) வீழும் மெல்லிய வள்ளிக்கிழங்கைக் கிண்டுதலாலும்,—விரைத்த தேன் அழித்து மாந்தி - மணம்பொருந்தியதேன்கூடுகளை அழித்துட்கொள்ளுதலாலும்,—ஊழ் உறு சிலைக்கை வேடர் ஒழுக்கமும் மாறியது - வலிய வில்லைக் கையிற்றாங்கும் வேடருடைய ஒழுக்கத்தைச்செய்யாது பொருந்தியது. எ—று.

தேன் - ஆகுபெயர். அழித்தல் - உண்டபின்னுந்தேனை வெறுக்கல். வளர்ந்ததை வெட்டி குறிச்சியிற்புக்குத் தினையை வாரிவிதைத்து கிழங்கைக் கெண்டி தேனையழித்து உறுமக்குறவரெனக. (உ0)

சிலையலங்கண்ணிச்சிவெண்ணெய்தெவ்விவானிமிர்ந்தவாரி
நிலைபுகுந்துழக்கியொல்குநிலனெடுத்திருவியண்ட
ருலைதரவெறிக்கொண்டேற்றியுறுகலிமுடிவுதோற்றித்
தலைவருமாயோனென்னத்தவழ்ந்ததுபுறவத்தம்மா.

(இ—ள்.) சிலை அலம் கண்ணிச்சி வெண்ணெய் தெவ்வி - வில்லும் கலப்பை மழு வெண்ணெய் என்னும் இவைகளை வாரிக்கொள்ளுதலாலும்,—வான் நிமிர்ந்து - வானிலே நிமிர்தலாலும்,—வாரி நிலை புகுந்து உழக்கி - நீர்நிலைகளிலே புகுந்து கலக்குதலாலும்,—ஒல்கும் நிலன் எடுத்து இருவி - வளருகின்ற நிலங்களை வளத்தில் மேம்படுத்தி நிறுத்தலாலும்,—அண்டர் உலைதர வெறிக்கொண்டு ஏற்றி - முல்லைநிலமாக்களுலையும்படி வெறிகொண்டேறுதலாலும்,—உறு கலி முடிவு தோற்றி - பொருந்திய வறுமை நீக்கத்தைத் தோற்றுதலாலும்,—தலைவரு மாயோன் என்ன - அந்நிலத்திற் கதிதேவதையாய் வரும் திருமாலைப்போல,—புறவத்து தவழ்ந்தது - முல்லைநிலத்திற் பெருகியது. எ—று.

தெவ்வியென்பதனை முன் மூன்றிடத்துங் கூட்டுக. தெவ்வுதல் எடுத்துக்கொள்ளல். தசரதராமன் பலதேவன் பரசிராமன் கிருட்டிணன் வாமனன் மீனம் ஆமை பன்றி நரசிங்கம் குதிரை என்னும் தசாவதாரத்தையுடைய திருமாலென்க. தலைவருமாயோன் - [illegible]கை. வெறிக்கொண்டு முடைநாற்றங்கொண்டெனினுமாம். கல் ஒலியுமாம். வாரி புகுதலை மீனுக்கும் உழக்குதலை ஆமைக்குங் கொள்க. வாரியென்பதனை யீரிடத்துங் கூட்டுக. ஒல்குமிலனெடுத்திருவியென்பதற்கு ஓங்கியவழிக்கப்பெருவழியாகக் கல்லலாலுமென்வாற்றுக்குரைப்பாருமுளர். (உக)

முளிதயிர் நறுநெய் பெய்யு மூரியங் கலன்களைப் பாடி
யுளியெடுத் தியங்கி யாங்காங் குற்றவை மாற்றிப் பொன்னுந்
தெளிமணித் திரளு மற்றுஞ் செறிந்துராய்க் குளவிச் செந்தேன்
துளிகுழற் பொதுவர் மாதர் தொழின்மையும் பயின்ற தாங்கண்

இ—ள். முளி தயிர் நறு நெய் பெய்யும் மூரியங் கலன்கள் - நீர்வற்றிய தயிரையும் நல்ல நெய்யையும் இட்டு வைக்கும் வன்மையான அழகிய பாத்திரங்களை,—பாடி உளி எடுத்து இயங்கி - ஆயப்பாடியிடத்து வாரிக்கொண்டு பெயர்தலாலும்,—ஆங்காங்கு உற்றவைமாற்றி - தான் சென்ற அவ்வவ்விடங்களில் பொருந்தியவைகளைக் களைதலாலும்,—பொன்னும் தெளி மணித்திரளும் மற்றும் செறிந்து உராய - பொன்னையும் தெளிந்த மணித்திரளையும் ஏனைப்பொருளையும் செறிந்து உலாவுதலாலும்,—குளவி செந்தேன் துளி குழல் பொதுவர் மாதர் தொழின்மையும் பயின்றது - மலைப்பச்சையினது செந்தேன் துளிக்கும் கூந்தலையுடைய இடைச்சியரது தொழிற்றன்மையையும் பொருந்தியது,—ஆங்கண் - அம்முல்லைநிலத்து. எ—று.

தயிர் நெய் பெய்யும் கலன்களைப் பாடியினின்று மெடுத்துப் பற்பல விடங்களிலுஞ் சென்று அத்தயிர் நெய்களை விற்றுப் பொன்னும் மணித்திரளும் ஏனைப்பொருளும் சேர்த்து வருகின்ற பொதுவமாதரென்க. (உஉ)

கிணிகவைக் கோடும் வேயுந் திரிபுரி நாருந் தாங்கி
மணிநிரை யோம்பி நேரும் வல்விடை தழுவித் தோய்ந்த
அணிநிறை மகளிர் கூந்த லலங்கலங் கொன்றை சூட்டிப்
பிணிதபு மாயர் செய்கை பேணியும் பெயர்வ தாங்கண்

(இ—ள்.) கிணி கவைக்கோடும் வேயும் - கிணிர்த்த கவைத்தடிகளையும் வேய்ங்குழலையும்,—திரிபுரி நாரும் தாங்கி - கயிறுகளையும் வாரிக்கொண்டு சேறலாலும்,—மணி நிரை ஓம்பி - மணியினநிரைகளைப் பாதுகாத்தலாலும்,—நேரும் வல் விடை தழுவி - எதிர்ப்பட்ட வலிய எருதுகளைக் கவருதலாலும்,—தோய்ந்த அணிநிறை மகளிர் கூந்தல் - முழுகிய அழகையும் நிறையையுமுடைய மங்கையர்கள் கூந்தலில்,—அலங்கல் அம் கொன்றை சூட்டி - தளிரையுடைய அழகிய கொன்றைமலரைச் சூட்டுதலாலும்,—பிணிதபும் ஆயர் செய்கை பேணியும் - பிணிநீங்கிய இடையருடைய செய்கையைப் பொருந்தியும்,—பெயர்வது ஆங்கண் - செல்லுவது அம்முல்லைநிலத்தில். எ—று.

கவைக்கோடும் வேயும் திரிபுரிநாரும் கட்டிக்கொண்டு மணிகட்டிய பசுநிரைகளைக் காத்து எதிர்த்தவிடையைத் தழுவி விவாகஞ்செய்த மகளிர் கூந்தலிலே கொன்றைமாலையைச் சூடுமாயரென்க. மணிநிரையோம்பியென்பதற்கு நீரிடத்தும் மணிசரித்த பசுக்களை யெனக்கொள்ளுவாருமுளர். ஆயர் பெண்பிறக்குஞான்று பிறந்த காளைக்கன்றைத் தன்னூட்டியாகவளரவிட்டு அவ்விடையைப் பிடித்தவனுக்கே விவாகஞ்செய்து கொடுப்பது வழக்கமாதலின் விடைதழுவித்தோய்ந்த மகளிரென்றார். அது, "பகடியார் கருங்கண்ணி வண்ணப் போதராப் பாரமுறுநண, ணிடையார் மெல்லிவுங்கண்டண்டாக னீ ரம்முல்லைவேலியெம்மூர், விடையார் மருப்புத்திருத்திவிட்டார் வியனென புல்லீயூ, ருடையார் கடைவிருவதுபோதுமுருவினதே" எனபதனாலறிக. (உ௩)

பூத்தசெந்தாமரைக்கண்மெய்யெலாம்பொலியத்தோற்றித்
தூத்தகைவயிரம்பற்றித்தலைக்குவாரணமேல்கொண்டு
காத்தலைமருவிநீண்டகற்சிறைபலவுஞ்சிந்தி
யேத்துவிண்ணரசனென்னவிறுத்ததுபழனப்பாங்கர்.

இ—ள். பூத்த செந்தாமரைக் கண் மெய் எலாம் பொலியத்தோற்றி – அலர்ந்த செந்தாமரை மலர்த்தேனை தன்வடிவமெங்குஞ் செறியும்படி காட்டுதலாலும்,—தூத்தகை வயிரம்பற்றி – சுத்தமான அழகையுடைய வயிர ரத்தினங்களைப் பறறுதலாலும்,—தலைக்கு வாரணம் மேல் கொண்டு – விளக்கம்பொருந்திய சங்குகளைத் தன்னிடத்தில் கோடலாலும்,—காத்தலை மருவி – பூங்காவிடத்திற் பெருகுதலாலும்,—நீண்ட கல் சிறை பலவும் சிந்தி – நீண்ட கல்வரம்புகள் பலவற்றையும் (அகழ்ந்து) சிதறலாலும்,—ஏத்து விண் அரசன் என்ன இறுத்தது – (அந்நிலத்திற் கதிதேவதையாகத்) துதிக்கப்படுகின்ற இந்திரனைப்போலத் தங்கியது,—பழனப் பாங்கர் – மருதநிலத்திடத்து. எ—று.

அலர்ந்த செந்தாமரைமலர்போன்ற கண்கள் மெய்யெல்லாம் பொலிவுபெறத்தோற்றிக் குலிசப்படையைத் தாங்கி ஐராவதயானைமேலேறிக் கற்பககாவிலிருந்து மலைகளின் சிறகுகள் பலவற்றையும் சிந்தும் விண்ணரசனெனக். தாமரை – ஆகுபெயர். கற்சிறை - கல்வரம்பென்பது "கற்சிறையகித்துவெள்ளம்கடறகவாயாகுக்கற்றோர்" என்னுஞ் சிந்தாமணி யுரையானறிக. ஏத்து விண்ணரசனென்பது செயப்படுபொருள்வினைமுதல் போலக்கூறப்பட்டது. ததீசிமுனிவர் அருந்தவஞ் செய்தமையாலும், தேவர்கள் அடைக்கலம்வைத்த படைகளை விழுங்க அ[illegible]வீறுதண்டமாயிருந்து இந்திரனுக்குப் படையாயினமையாலும் தூத்தகைவயிரமென்றார். (உ௪)

மருதமர்கிள்ளையஞ்சவயின்வயினியம்பிச்சென்று
முருகமர்வயலிற்பூத்தமுண்டகங்குமுதங்கட்டுக்
குருமணிகாஞ்சிச்சூழற்கொழுநனைமலரப்புல்லித
திருவியல்கடைசிமார்தஞ்செயகையுந்தழீஇயதாங்கண்.

(இ—ள்.) மருது அமர் கிள்ளை அஞ்ச – மருதமரங்களிலுறையுங் கிளிகள் அச்சமடையும்படி,—வயின் வயின் இயம்பிச் சென்று – இடந்தோறும் ஒலித்துச் செல்லுதலாலும்,—வயலில் பூத்த முருகு அமர் முண்டகம் குமுதம் கட்டு – வயலிலே மலர்ந்த வாசனைபொருந்திய தாமரைகளையுங் குமுதங்களையும் பிடுங்குதலாலும்,—குருமணிக் காஞ்சிச் சூழல் கொழுநனை மலரப் புல்லி – நிறம்பொருந்திய அழகிய காஞ்சிமரச்சோலைகளிற செழித்த அரும்புகள் மலரும்படி சேர்தலாலும்,—திரு இயல் கடைசிமார் தம செய்கையும் தழீஇயது – அழகுபொருந்திய வுழத்திமாருடைய வொழுக்கத்தையும் தழுவியது,—ஆங்கண் – அம்மருதநிலத்தில். எ—று.

கிள்ளை யஞ்சும்படி மதுர வார்த்தை பேசிச்சென்று வயலிலே பூத்த முண்டகத்தையுங் குமுதத்தையுங் களையாகக் கட்டுக் காஞ்சிமரச் சூழலிலே கொழுநனை மலருப்படி தழுவி யிருக்குங்கடைசிமாரென்க. கடைசியர்க்குக் காஞ்சிச்சூழல் அல்குலெனினுமாம். அடுக்குகள் பன்மைகுறித்து நின்றன. மருதமர்கிள்ளை யென்றது பன்மைகுறித்த வழக்கென்க. (உ௫)

(இ—ள்.) உயர்பணை – உயர்ந்த மூங்கில்களானவை,—மெல்லியல் கல்லா – மெல்லிய இயல்பையுடைய வரம்பிலாத்தமகளிர்,—விழிக்கு உடைந்த மான்செவிகள் தடிந்து – தங்கண்ணுக்குத் தோற்ற மான்களுடைய செவிகளை வெட்டி,—அங் குழிக்குறுதி ஆங்கு – அவ்விடத்து நிறைத்தாற்போல,—கண்பொதிபாளை கலிக்கும் - கணுவை மூடிய மடல்களைக் கழிக்கும்;—அதை மறைய வெள் கதிர் மணி உகுக்கும் – அம்மடல்கள் மறைய வெள்ளிய ஒளியையுடைய முத்துக்களை சொரியும்,—கொழிக்கும் நித்திலம் மறைய— சொரிந்த அம முத்தங்கள் [illegible]டி,—வண்தோரை மேற கொட்டும் – அழகிய நெரிசிகளின்மேலே சொரியும். எ—று.

மூங்கிற்பாளை மானுசெவி போறல "நுண்பொறிமானசெவிபோலவெதிர்முளைக கண்பொதிபாளைகழன்றுகுப்பணையிறநே" எனபதனாலறிக. கருறதியவெனபதனீறகு நீந தொகதது. (௩௭)

> மழைத்தகார்முகிலகடுகீண்டெழுந்தவானோங்கு
> தழைத்தவேயநுதிக்கணிமயிலகவுவசழாககட
> குழைத்தமாமரங்கிழ்த்தவனகோயின்முனமணியி
> னிழைத்தகேதனத்திளமயிலகவலோடியையும.

(இ—ள்.) கணிமயில – கணிபபையுடைய மயிலகளானவை,—மழைத்த கார் முகில அகடு கீண்டு எழுந்து – மழையைப பெய்யும கரியமுகிலின வயிற்றைக கிழித்தெழுந்து,—வான் ஓங்கும் தழைத்த வேய நுதி அகவுவ – வானத்துயர்ந்த செழித்த மூங்கிலினுடைய நுதியிலிருந்தாலவன,—சமாககண குழைத்தமாமரம கீழ்ந்தவன கோயிலமுன – யுத்தத்தின கண்ணே, தளிர்த்த சூரனாகிய மாமரத்தைக் கிழித்த முருகக்கடவுளுடைய திருக்கோயிலின முனனே,—மணியின இழைத்த கேதனத்து இளமயில– இரத்தினமழுத்திய கொடிககணெழுதிய இளமயில களானவை,—அகவல ஓடு இயையும – ஆடுதலை நிகர்க்கும. எ—று. (௩௮)

> இளகுகாழகிற்சந்தனப்பொதுமபரெவ்விடனும்
> வளருமேடத்திசேவகங்கொளுமானமதமொழுக்குங
> குளகுதேரியவருடைமானகுப்புறமடுக்கத்
> தளிகளோடுபாடடிரட்டுமாலகளதொறுங்குரால்கள.

(இ—ள்.) மதம் ஒழுக்கும் மான – மதத்தைச சொரியும யானைகளானவை,—இளகுகாழ் அகில் சந்தனப பொதுமபர் எவ்விடனும – தழைத்தல் பொருந்திய காழையுடைய அகிலமரச் சோலை சந்தனமரச சோலையாகிய எவ்விடத்தும்,—வளருமேடத்து சேவகம கொளும – வளர்கைமேய்ந்து துயிலிடமடையும்,—வருடைமான குளகு தேரியகுப்புறம் – வரையாடுகள் உணவைத்தேடும் படி குதிக்கும்,—அடுக்கத்து அளி தொறும – பக்கமலையின் அளிகள் தோறும்,—குராலகள அளிகளோடு பாட்டு இரட்டும – கோட்டான்கள், தம் பெடைகளோடும் பாட்டுக்களை இரட்டித்துப்பாடும. எ—று.

இரண்டும் ஒத்துப்பாடுதலால் இரட்டுமென்றார். காழ - வயிரம. பொதும்பர் அகிலுக்கும் கூட்டப்பட்டது. அகிலையுடைய சந்தனச்சோலையெனப் பணைபற்றியவுமாககளை உரைக்கினுமாம். வளகு – தழையுணவுப்பும்: அது. "புணர்கிளை வளகின் குளமயர்ந்தன்ட வயக்கேழில்யானைப்பயமலைநாடனை" என்றும் "கலிப்பாட்டுஞ் [illegible]

தேனுஞ்செந்தினையிடிகளுந்தீஞ்சுவைக்கனியு
மூனுந்துய்ப்பனவுடுப்பனமரவுரிதழைகள்
வானுந்தோய்சுனையாடுவமணிவரையிருப்ப
வேனற்சூழ்ந்தகுன்றவர்க்கொருநல்குரவின்றே.

(இ—ள்.) துய்ப்பன — புசிக்கப்படுவன,—தேனும் செந்தினை இடிகளும் தீம் சுவைக்கனியும் ஊனும் — தேனும் செந்தினைமாவும் மதுரச்சுவையையுடைய கனிகளும் தசைகளுமாம்,—உடுப்பன மரவுரி தழைகள் — உடுக்கப்படுவன மரவுரியும் இலைகளுமாம்,—ஆடுவ வானும் தோய் சுனை — முழுகப்படுவன வானிலுள்ளாரும் முழுகுஞ் சுனைகளாம்,—இருப்ப மணிவரை — இருக்கப்படுவன அழகிய மலைகளாம்,—(ஆதலால்) ஏனல் சூழ்ந்த குன்றவர்க்கு — புனங்கள் சூழ்ந்த அக்குறிஞ்சிநிலத்துறைவார்க்கு,—ஒரு நல்குரவு இன்று — ஒருவறுமையுமின்றாம். எ—று.

வானும் என்னும்உம்மை உயர்வுசிறப்போடெச்சம். நல்குரவு என்னும் முற்றும்மை தொக்கது. ஏனைநிலத்தோர்போலப் பொருள்கொண்டு தேடவேண்டாமையின் நல்குரவின்றென்றார். (௪௭)

அன்பினைந்திணைக்களவலாற்களவொன்றுமறியா
ரின்பமாண்பிரிவினைவலாலினைவொன்றுமெய்தார்
துன்பமோட்டுவாய்ப்பொய்யலாற்பொய்யொன்றுஞ்சொல்லார்
முன்புமாதவப்பயத்தினாலவண்டுய்க்கமர்வார்.

(இ—ள்.) முன்பு மாதவப் பயத்தினால் அவண் துய்க்கு அமர்வார் — முன்புசெய்த பெரிய தவப்பயனால் அவ்விடத்துறைதலை விரும்புவோர்,—அன்பின் ஐந்திணைக் களவு அலால் களவு ஒன்றும் அறியார் — அன்பினைந்திணையென்னும் மூதலையுடைய (அகப்பொருளிற் கூறும்) களவொழுக்கமேயன்றி வேறோர் களவுமறியார்,—இன்பமாண் பிரிவு இனைவு அலால் இனைவு ஒன்றும் எய்தார் — இன்பத்தை மாட்சிப்படுத்தும் (பொருள்வயிற் பிரிவு முதலிய பிரிவாலாகும்) வருத்தமன்றி வேறு வருத்தமொன்றுமடையார்,—துன்பம் ஓட்டுவாய்ப் பொய் அலால் பொய் ஒன்றும் சொல்லார் — புலவித்துன்பத்தை நீக்கும் வாயிலாகிய பொய்யேயன்றி வேறொருபொய்யும் சொல்லார். எ—று.

இன்பமாண்பிரிவு இனைவு என்பதற்கு இன்பத்தை மாட்சிப்படுத்தும் புலவியாலாகும் வருத்தமென்றுரைப்பாருமுளர். இது ஒழிப்பெனுமணி. (௪௮)

உயங்குவாரலதின்புறாரெனுந்தன்மையினுன்
முயங்குவாரைமுன்றுயர்செய்தன்முறைதெரித்தாங்கு
வயங்குலாவிடமாரவேள்பகழியாய்மலர்ந்த
தயங்குதேமலர்சேர்ந்தகடம்பியகுறிஞ்சி.

(இ—ள்.) [illegible] — அக்குறிஞ்சிநிலமானது,—உயங்குவார் அலது இன்பு உறார் என்பது உண[illegible]ருத்தமுறுபவரேயன்றிப் பிறர் இன்பமுறுவாரோ (அன்றோ) கூறுவது [illegible]லினால்,—முயங்குவாரை — புணர்பவர்களை,—முன் துயர் செய்தல் [illegible] — முன் துயருறவித்தல் முற்றையைத் தெரிவித்தல்போல [illegible]பகழியாய் மலர்ந்த — வெற்றிபொருந்திய காமனுடைய

-மையார்கொண்ட,—தயங்கு தேமலர் அசோகங்கள் தழீஇயது - விளங்குகின்ற தேனைப் பொருந்திய மலர்களையுடைய அசோகமரங்களைப் பொருந்தியது. எ—று.

* முன்னுயர்செய்தல் "அனைத்துணர்வுமப்போதகுமசோகம்" எனப்படுவதற்கு. வருந்தவோரலதிலபுருரெனவே வருந்துவோர் இன்புறுவரெனபது பெறரும். உயங்குவாரலதினபுருரெனபதை "துன்பமுற்றவர்க்கலாலின்பமில்லை" என்னுஞ் சிந்தாமணியானுமுணர்க. (௪௯)

பகைத்துடிப்படுப்பவர்பகைக்கட்பாயக்கலை
யுகைக்குமச்செய்கையாலுவப்பச்செய்வபோன்
மிகைத்திறற்குமரிக்குவிழாவெடுத்தன்றா
றகைத்திறுப்பதுதொகுமுரப்புச்சூழலே.

(இ—ள்.) தொகும் முரப்புச் சூழல் - பாலைநிலமானது,—பகைத்துடிப் படுப்பவர் பகைத்துடியென்னும் பறையை அடிப்பவர்,—பகைக்கட் பாய்கலை - பகையாகிய கண்ணையுடைய பாய்கின்ற கலையை,—உகைக்கும் அச்செய்கையால் - செலுத்தித் தமக்கு வெற்றிதருந்தன்மையினால்,—உவப்பச் செய்தல்போல - (தாமும்) அவளை மகிழ்வித்தல் செய்வதுபோல,—மிகைத் திறல் குமரிக்கு - மிக்க வீரத்தையுடைய துர்க்கைக்கு,—விழா எடுத்து - திருவிழாச்செய்து,—அன்றா தகைத்து இறுப்பது - துயரத்தைக் கெடுத்து இருப்பது. எ—று.*

இதுவன்றி, பகைத்துடிப்படுப்பவர் பகைக்கண் - பகைத்துடியை அடிக்கும் அந்நிலத்தோர்க்குப் பகையாயினாரிடத்து-பாய்கலை உகைக்கும் அச்செய்கையால்- பாயுங்கலையைச் செலுத்தி வெற்றிதருந்தன்மையினாலென உரைத்தலுமொன்று. பாலைநிலமானது துர்க்கைக்கு விழாவெடுத்தலினால் துக்கமகன்றிருப்பதெனக. பகைத்துடி - பாலைப்பறை; பகைக்கண் அடிக்கும்பறையாதலின் இவ்வாறுகூறினார். தொகுதல் - கூடுதல். முரம்பு - பரல்மிக்க பருக்கைநிலம். சூழல் - இடம். (௫௦)

வரையுறைகடவுளாமகனைநீங்குதற்
கருமையினடுத்தமையறையுஞ்சண்டிகை
கிரியினுங்கிரிப்புறங்கெழீஇயகானினும்
பெரிதுமாம்பாலையம்பிராட்டியாயதே.

(இ—ள். சண்டிகை - துர்க்கையானவள்,—கிரியினும் கிரிப்புறம் கெழீஇய கானினும் பெரிதும் ஆம் - குறிஞ்சிநிலத்திலும் அதற்குப்புறமாகிய முல்லைநிலத்திலும் பெரிதும் உளதாகின்ற,—பாலையம்பிராட்டி ஆயது - பாலைநிலத்திற்கு அதிதேவதையாயிருந்த தன்மை,—வரைஉறை கடவுள் ஆம் மகனை - மலையில் வாசஞ்செய்யுந்தெய்வமாகிய தன் மகனை (குறிஞ்சிநிலத்தெய்வமென்றபடி)—நீங்குதற்கு அருமையின் - நீங்கியிருத்தலியலாமையால்,—அடுத்தமை அறையும் — அடுத்திருத்தலை அறிவிக்கும். எ—று.

பாலையென்னொருநிலமில்லையென்பார் கிரியினுங் கிரிப்புறங்கெழீஇய கானினும் பெரிதுமாம்பாலை என்றார். அறையுமென்றது தாற்பரியப்பொருள். இதனால் முல்லையுங் குறிஞ்சியுந்திரிந்து பாலையானதன்றிப் பாலைக்குநிலமின்மைபெறப்பட்டது "முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற்றிரிந்து நல்லியல்பழிந்து நடுங்குதுயருறுத்துப் பாலையென்பதோர் படிவங்கொள்ளும்" என்னுஞ்சிலப்பதிகாரச்செய்யுளானுமுணர்க. (௫௧)

வெள்ளணியினால், என்பதை வெள்ளணியினானென்கொண்டு வெள்ளணிநாள் விளக்கத்தைப் பொருந்தினவனெனக் கொள்ளினுமாம். வெள்ளணிநாளாவது குழந்தை பிறந்த நாளில் வெள்ளைவஸ்திரந்தரித்து வெண்மாலைசூடிக் கொண்டாடும் விழா அல்லாதூற்றல் குழந்தைபிறந்தமையைப்பலர் அறியத்தூற்றல் (௫௪)

விரிமுகிலிடையிடைவிராயமீனமுஞ்
சுரிகுழன்முச்சியிற்றூக்குநித்திலச்
சொரிகதிர்மணிகளுந்துணையுமென்பவே
பொரிகெழுபொகுட்டரையிருப்பைபூத்தவே.

(இ—ள்.) பொரிகெழு பொகுட்டு அரை இருப்பைபூத்த - பொருக்கைப்பொருந்திய பொகுட்டாகிய வரையினையுடைய இருப்பைகள் பூத்திருப்பன,—விரி முகிலிடை இடைவிராயமீனமும் - விரிந்த முகிலினிடையிடையே பொருந்திய நட்சத்திரங்களையும்,—சுரிகுழல் முச்சியில் தூக்கும் - சுரிந்த மயிர்முடியிற் றூக்கப்பட்ட,—சொரிகதிர் நித்திலம் மணியும் - சொரிகின்ற கிரணத்தையுடைய முத்துமணிகளையும்,—துணையும் - ஒக்கும். எ—று.

என்ப, ஏ அசை பொகுட்டு—குமிழ்ப்பு, முச்சி ஆகுபெயர், இது உவமையணி (௫௫)

நிகழ்தரு நால்வகை நிலனுமெல்லையாத்
திகழ்தரு பாலையந்திணைசக்கேற்புற
விகழ்தருஞ் சுரத்தவரெய்துபோகமும்
புகழ்தரு நானிலத்தவர்தம்போகமே.

(இ—ள்.) நால்வகை நிகழ்தரும் நிலனும் எல்லையா—நால்வகையென்றுசொல்லப்படும் நிலங்களுந்தனக்கெல்லையாக,—திகழ்தருபாலைத் திணைக்கு ஏற்புற—விளங்குகின்ற பாலைத்திணைக்கு ஏற்கும்படி,—இகழ்தரும் சுரத்தவர் அங்கு எய்து போகமும்—இகழப்பட்ட பாலைநிலமாக்கள் அங்கடையும் போகங்களும்,—புகழ்தரும் நானிலத்தவர் போகம்—புகழப்படும் அந்நால்வகைநிலங்களினுமுறைவோர் அடையப்படும் போகமேயாம். எ — று.

அம்மும் தம்மும் சாரியை. நிகழ்த்தல்." நிகழ்தலென இடைகுறைந்தது பாலைக் குநிலமில்லாமை "நடுவு நிலைத்திணையே" என்னுஞ்சூத்திரமுதலியவற்றானுணர்க. இகழுதரும் சுரத்தவரென்றதும் இக்கருத்து நோக்கியும் ஆறலைத்தன்முதலிய விழிதொழில்க ளை நோக்கியுமெனக். தத்தமக்குநிலமுண்மையானும் இதுபோற் பாவத்தொழில் இன் மையானும் ஏனைநிலங்களைப்புகழ்தருநானிலமென்றதெனவறிக. (௫௬)

உடன்குசெல்பவர்க்கிடையூறொன்றின்றியே
யடங்கருமபெருமகிழ்வாக்கிமாத்தரை
யிடங்களினிரீஇயவர்செல்வழுங்குமா
றொடங்கலினுதவிற் சுரமொப்பில்லையே.

(இ—ள்.) உடங்குசெல்பவர்க்கு - உடன்செல்பவராகிய மகளிர்க்கு,—இடையூறு ஒன்று இன்[illegible]பூறுகளொன்றும் இன்றாக,—அடங்க அரும் பெருமகிழ்வு ஆக்கி - அடங்கரிய [illegible]மகிழ்ச்சியையுண்டாக்கி,—மாத்தரை இடங்களின் இரீஇயவர் செல

அழுங்குமாதொடங்கலின் - பெயர்க்கவியலாவவ்விடங்களில் இருக்கச்செய்தகனும் காளைய ருடைய செல்வை அழுங்குவிக்கும்படி செய்ததினால், — உதவியில - உதவிசெய்தற்கண், சுரம் ஒப்பு இல்லை — அப்பாலைநிலத்திற்கொப்பாகவேறொன்றிலலை. எ — று.

ஒன்றும் என்னும்மும்மைதொக்கது. இடையூறிலவாகச் செய்தல் விருந்தவிலக்கல இடைச்சுரத்துக்கண்டோர் புகழ்தன் முதலியவற்றாலுணர்க. இன்றி என்னுஞ்செய்தெ னெச்சம் செயவெனனெச்சமாக்கப்பட்டது. (ருஎ)

பிரிந்தவர் பசலையம்பெரிய போர்வையுட
டிருந்தவரென்னத்தன்செய்கைதோற்றியாங்
கரந்தைசெய்மதனகணையாகப்பூத்தமா
மரந்தழீஇயதுநலமவளாயபாலையே.

(இ — ள்.) நலமவளாயபாலை — நன்மைபொருந்திய பாலைநிலமானது, — பிரிந்தவர் பசலையம் பெரியபோர்வையுள் இருந்தவர்என்ன — காதலரைப்பிரிந்தமகளிர் பசலையா கிய பெரியபோர்வையுள்ளே இருந்தமுறுவரென்று, — தன் செய்கை தோற்றி ஆங்கு — தன்செய்கையைக் காட்டியதுபோல, — அரந்தைசெய்மதனகணை ஆகப்பூத்து — துன்பத் தைச்செய்யும் மன்மதபாணமாகப்பூத்த, — மாமரம் தழீஇயது — மாமரங்களைத்தழுவப்பெ ற்றது. எ — று.

வளாயவென்னும்பெயரெச்சம் வளாயவென விகாரமாயிற்று. செய்கையாலென் னும் வினையெச்சவிகுதி தொக்கது பசலையம் பெரிய போர்வையுள் இருந்தவரென் றதனாலும் ஆகப்பூத்தன்றமையாலும் வெளிப்படையின்றிப்பூத்ததுவாம். போர்வை யுட்டிருந்ததல் அதுவாய்த்தோன்றல். (ருஅ)

வேறு

ஆக்கங்கருதித்துணைநீங்கவனோர்ளைாத
வாக்கின்படிமங்கையராருயிர்வாழ்ந்திருக்கக்
காக்குந்தொழிலென்றுபுரக்கும்கண்ணறகன்பு
பூக்குஞ்செயலாற்பொலிவுள்ளதுபூத்தகானம்.

(இ — ள்) பூத்தகானம் - பூக்களையுடைய முல்லைநிலம், — துணை ஆக்கம் கருதி நீங்க தலைவராயினவர் பொருள்கருதிப்பிரிய, — அன்னோர்இளாத வாக்கின்படி — அக்காதலர்செ லலும்பொழுதுகூறிய வார்த்தையின்படி, — மங்கையர் ஆருயிர் வாழ்ந்திருக்கை - பெண் கள் அரிய உயிர் வாழ்ந்திருத்தலையே, — காக்குந்தொழிலென்று - காவற்றொழிலென்று, — புரக்கும் அக்கண்ணற்கு - காக்கின்ற அவ்விஷ்ணுவுக்கு, — அன்புபூக்குஞ்செயலால் — அன் புமிகுஞ்செயலினால், — பொலிவு உள்ளது — பொலிவையடைந்தது. எ — று.

அகரம் பண்டறிசுட்டு துணைவர் துணையெனவீறுகெட்டது. (ருகூ)

ஆனிக்கொடியேந்தியதகைக்கறசியாறறுன்
மூன்றுறவார்வத்தணிமைக்கண்முற்றிற்றுநேரா
காளக்குருமேனிமுராரி கல்சூழ்முரம்பு
கோளுற்றகானக்கொருதெய்வதமாயகொள்கை.

(இ — ள்) காளம் குருமேனி முராரி — கரியநிறம்பொருந்[redacted]யையுடைய விஷ்ணு, — கல்சூழ்முரம்புகோளுற்ற கானக்கு — குறிஞ்சிநிலத்தை[redacted] பாலையந்

